# எட்டுத்தொகை அகப்பாடல்களில் ஐம்புல உணர்வுப் புனைவு

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (பிஎச். டி.) பட்டத்தின்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு.


ஆய்வாளர்

திருமதி. **நா. புவனேசுவரி**

**பதிவு எண் : 1019**

நெறியாளர்

முனைவர் **சே. செந்தமிழ்ப்பாவை**

**இணைப்பேராசிரியர்**














**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தரமதிப்பீட்டுக் குழுவால் 'ஏ' தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003.

தமிழ்நாடு

**இந்தியா**


செப் - 2010

**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை** எம்.ஏ.,எம்.ஃபில்.,பி.எட்.,பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 21.09.10.

# நெறியாளர் சான்றிதழ்

**"எட்டுத்தொகை அகப் பாடல்களில் ஐம்புல உணர்வுப் புனைவு"** என்னும் தலைப்பில் **திருமதி.நா.புவனேசுவரி** அவர்கள் தமிழ் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

21/9/2010

**துறைத்தலைவர்**
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003

21/09/10
**(சே.செந்தமிழ்ப்பாவை)**
நெறியாளர்

முனைவர் சே. செந்தமிழ்ப்பாவை
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-

**நா.புவனேசுவரி** எம்.ஏ.,எம்ஃபில்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 21.09.10

# ஆய்வாளர் உறுதிமொழி

**“எட்டுத்தொகை அகப் பாடல்களில் ஐம்புல உணர்வுப் புனைவு”** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**(நா.புவனேசுவரி)**
ஆய்வாளர்

21/09/10
**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை** எம்.ஏ.,எம்ஃபில்.,பிஎட்.,பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

# நன்றியுரை

எட்டுத்தொகை அகப்பாடல்களில் ஐம்புல உணர்வுப் புனைவு என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர், ஆட்சிக்குழு உறுப்பினர்கள் ஆகியோருக்கு என் மனம் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு நெறியாளராக இருந்து ஆய்வுத் தொடக்கத்திலிருந்து இறுதிவரை எல்லா நிலைகளிலும் என்னை நெறிப்படுத்திய எனது நெறியாளர் முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை அவர்கட்கு இதயங்கனிந்த நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த துறைத்தலைவர் முனைவர் மு.பாண்டி அவர்கட்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு தொடர்பான சிந்தனைகளை நல்கிய இணைப்பேராசிரியர் முனைவர் சு.இராசாராம் அவர்களுக்கும், ஏனைய பேராசிரியப் பெருமக்களுக்கும் எனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவந்து என்னை அவையத்து முந்தி இருக்கச் செய்த எனது பெற்றோர் திரு.கி.நாகநாதன், சுபா நாகநாதன் அவர்களுக்கு என் நன்றியும் வணக்கமும் உரியது.

ஆய்வுத் தேடலில் அறிவுரை நல்கிய எனது கணவர் துரை.இரவிக்குமார் அவர்களுக்கும், மழலைச் சொல்லால் உற்சாகப்படுத்திய எனது செல்வன் இர.வல்வில் ஓரிக்கும், என் செல்வனைத் தாயன்போடு கவனித்துக்கொண்ட எனது சகோதரி நாகப்பிரபாவிற்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்கள் கொடுத்துதவிய சகோதரன் சு.கார்த்திகேயனுக்கு என் நன்றி உரியது.

அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகத்தாருக்கும், நூலக அலுவலர்களுக்கும் என் நன்றி உரியது.

இவ்வாய்வேட்டைச் செம்மையாகவும், நேர்த்தியாகவும் கணினியில் அச்சாக்கம் செய்த மகேஷ் கம்ப்யூட்டர்ஸ் நிறுவனத்தாருக்கும், ஆய்வேட்டை வடிவமைத்தளித்த ரவி அச்சகத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | - | அகநானூறு |
| அக.பொ.வி. | - | அகப்பொருள் விளக்கம் |
| ஆ.இ. | - | ஆசிரியர் இல்லை |
| ஆ.இ. | - | ஆண்டு இல்லை |
| இ.ப.த.ம. | - | இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலித். | - | கலித்தொகை |
| காடு.காண். | - | காடுகாண் காதை |
| கு.உ. | - | குறிப்புரை |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதி. | - | பதிப்பாசிரியர் |
| பரி. | - | பரிபாடல் |
| புறநா. | - | புறநானூறு |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மு.இ. | - | முகவரி இல்லை |
| மு.ப. | - | முதன்மைப் பதிப்பாசிரியர் |
| மேலது | - | மேலே குறிப்பிட்டது |
| P. | - | Page |

# பொருளடக்கம்

# முன்னுரை

பண்டைத் தமிழரின் பெருமையைப் பறைசாற்றும் சங்க இலக்கியங்கள், உணர்வுகளை எழுத்துவடிவில் காட்டும் ஓவியமாகத் திகழ்கின்றன. ஆறறிவு படைத்த மனிதன் முதல் ஓரறிவுடைய உயிர்கள்வரை, அனைத்தும் உணர்வின் அடிப்படையிலேயே இயங்குகின்றன. மனிதன் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புலன்களின் வாயிலாக உணர்வினைப் பெறுகிறான். அன்பை வெளிப்படுத்த அணைத்தல், சுவையை உணரச்சுவைத்தல், இயற்கையழகைக் கண்களால் இரசித்தல், மணத்தினை உணர நுகர்தல், அறிவைப்பெற கேட்டல் என ஒன்றின் உயர்வை அறிய மனிதனுக்கு ஐம்புலன்கள் பெரிதும் உதவுகின்றன. அவ்வகையில் புலவரின் புலமைத்திறத்தை வெளிப்படுத்த ஐம்புல உணர்வுப் புனைவு இன்றியமையாததாய்த் திகழ்கின்றது.

## ஆய்வுத் தலைப்பு

"எட்டுத்தொகை அகப்பாடல்களில் ஐம்புல உணர்வுப் புனைவு" என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் ஐம்புல உணர்வுகளை வெளிப்படுத்தியுள்ளனர். இவ்ஐம்புல உணர்வுகளும் இலக்கியத்தில் படைக்கப்பட்டுள்ள விதம், புலவர்களின் உணர்வுப் புனைவு அவர்தம் படைப்பிற்குச் சிறப்புச் சேர்க்கும் முறை போன்றவை குறித்து ஆய்வது இவ்ஆய்வின் நோக்கமாகும்.

## முன்னாய்வுகள்

தொல்காப்பியர் மரபியலில் உயிர்களின் ஐம்புல உணர்வு நிலைகளைச் சுட்டியுள்ளார். இதன்பின் ஐம்புல உணர்வோடு தொடர்புடைய ஆய்வுகளாக மு.வரதராசனின் "பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை" பி.எல்.சாமியின் "சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம்," "புள்ளின விளக்கம்," "விலங்கின விளக்கம்" சே.நமச்சிவாயத்தின் "தமிழர் உணவு," ஏ.என்.பெருமாளின் "தமிழர் இசை," மு.வளர்மதியின் "பறை இசைக்கருவி ஓராய்வு" போன்றவையும், இரா.குணசீலனின் "சங்க இலக்கியத்தில் ஒலிக்குறிப்புகள்" என்ற முனைவர்பட்ட ஆய்வேடும் முந்தைய ஆய்வுகளாகும். மேற்சுட்டிய ஆய்வுகள் யாவும் ஐம்புல உணர்வுகளில் ஒருசில உணர்வுகளை மட்டுமே விளக்கியுள்ளன. முழுமையாகச் சுட்டவில்லை.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகை அக இலக்கியங்கள் மட்டும் ஆய்வு எல்லையாகும்.

## ஆய்வு மூலங்கள்

எட்டுத்தொகை அக இலக்கியங்கள் இவ்வாய்வின் முதன்மைச் சான்றாதாரங்கள் (Primary sources) ஆகும். தொல்காப்பியம் பிற இலக்கண நூல்கள், ஐம்புல உணர்வு தொடர்பான திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், அகராதிகள், பொருட்களஞ்சியங்கள், ஆய்வேடுகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்கள் (Secondary Sources) ஆகும்.

## ஆய்வு அணுகுமுறைகள்

இவ்வாய்வில் ஐம்புல உணர்வுகளைத் தொகுத்துப் பகுத்து விளக்குவதில் விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive Approach)

உணர்வுகள் எங்ஙனம் அமைந்துள்ளது என்னும் நிலையில் அழகியல் அணுகுமுறையும் (Aesthetic Approach) பின்பற்றப்பட்டுள்ளது.

## ஆய்வுப் பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

1. ஐம்புல உணர்வு
2. மெய்ப்புலனுணர்வுப் புனைவு
3. நாப்புலனுணர்வுப் புனைவு
4. கட்புலனுணர்வுப் புனைவு
5. மூக்குப்புலனுணர்வுப் புனைவு
6. செவிப்புலனுணர்வுப் புனைவு

என்பனவாகும்.

## இயல்விளக்கங்கள்

முதலாமியல் "ஐம்புல உணர்வு" என்பதாகும். இதில் புலன் தொடர்பாகத் தொல்காப்பியர் உரைக்கும் செய்தி, பிற இலக்கணவியலார் உரைப்பன, அகராதிகள், பொருட்களஞ்சியங்கள் போன்றவை ஐம்புலன் பற்றிக் கூறும் விளக்கங்கள் ஆகியன ஆய்ந்துரைக்கப்பட்டுள்ளன.

இரண்டாமியல் "மெய்ப்புலனுணர்வுப் புனைவு" என்பதாகும். இதில் அகமாந்தர்களான தலைவன் தலைவியரிடம் ஏற்படும் மெய்யுணர்வு, பிற மாந்தர்களிடம் ஏற்படும் மெய்யுணர்வு, இயற்கையினால் அடையும் மெய்யுணர்வு போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

"நாப்புலனுணர்வுப் புனைவு" என்பது மூன்றாமியலாகும். இதில் நாப்புலன் உணர்வினை அறுசுவைகளின் வழிப்புலவர்கள் புனைந்துரைத்துள்ள விதம் குறித்து இவ்வியல் விளக்குகிறது.

"கட்புலனுணர்வுப் புனைவு" என்பது நான்காம் இயலாகும். இதில் புலவர்களின் கட்புல உணர்வை வெளிப்படுத்தும் காட்சிப் புனைவு, ஊர்ப்புனைவு, பறவைகள், விலங்குகளின் தோற்றப்புனைவு, மக்கள்தம் தோற்றப் புனைவு போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

"மூக்குப்புலனுணர்வுப் புனைவு" என்பது ஐந்தாவது இயலாகும். இதில் நுகர்வால் அறியப்படும் இயற்கை மணம், செயற்கை மணம் நந்நாற்றம், தீ நாற்றம் போன்றவை புலவர்களின் புனைவில் இடம்பெற்றுள்ள விதம் விளக்கப்பட்டுள்ளது.

"செவிப்புலனுணர்வுப் புனைவு" என்பது ஆறாவது இயலாகும். இவ்வியல் இயற்கை வெளிப்படுத்தும் ஓசைகள், விலங்குகள், பறவைகள் எழுப்பும் ஓசைகள், மனிதர்கள் பல்வகைச் சூழலில் எழுப்பும் ஒலிகள் போன்றவற்றைப் புலவர்கள் புனைந்துள்ள திறம் குறித்து விளக்குகிறது.

ஒவ்வொரு இயலிலும் கண்ட முடிவுகள் முடிவுரையில் தொகுத்துரைக்கப்பெற்றுள்ளது. இதனையடுத்துத் துணைநூற்பட்டியலும் இறுதியில் பின்னிணைப்பும் இடம்பெற்றுள்ளது.

# ஐம்புல உணர்வு

எண்ணங்களும், நிகழ்வுகளும் எழுத்தாக்கம் பெற்றுச் சமுதாயத்திற்குப் பயன்படும் வகையில் அமைகின்றபொழுது, அவை அழியா அமர இலக்கியங்களாக மாறிவிடும். அவ்வகையில் சங்க இலக்கியங்கள் மக்களின் வாழ்வையும், மனித மேம்பாட்டையும் உணர்த்திக் காட்டியுள்ளன. உலகம் இயங்க ஐம்பூதங்களின் இயக்கம் அடிப்படையாக அமைவதுபோல, மனிதன் இயங்குவதற்கு ஐம்பொறிகளின் உணர்வுகளும் இன்றியமையாதனவாகும். சங்க இலக்கியங்களை உணர்வு இலக்கியங்கள், உணர்ச்சி இலக்கியங்கள் என்றுரைப்பதற்கேற்ப பாடல்களில் உணர்வுகளும், அதனால் ஏற்படும் உணர்ச்சிகளும் பெரிதும் இடம்பெற்றுள்ளன. எனவே ஐம்புலன் பற்றியும், ஐம்புல உணர்வுகள் பற்றியும் விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## தொல்காப்பியத்தில் ஐம்புல உணர்வு

மெய்யின் வழித்தோன்றும் உணர்வுகளை வெளிப்படுத்துவது புலன்களாகும். புலன்களின் வழி வெளிப்படும் உணர்வுகளை மெய்ப்பாடுகள் எனத் தொல்காப்பியர் சுட்டியுள்ளார். மெய்ப்பாடுகள் உணர்ச்சியின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியம்,

“நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகை யென்று
அப்பால் எட்டாம் மெய்ப் பாடென்ப”[1]

என நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், உவகை, வெகுளி என்ற எட்டையும் மெய்ப்பாட்டிற்குரிய காரணிகளாகக் குறிப்பிடுகிறது. இதற்கு இளம்பூரணர், “மெய்யின்கண் தோன்றுதலின் மெய்ப்பாடாயிற்று” மெய்ப்பாடென்பது யாதோவெனின், ‘உய்ப்போன்

செய்தது காண்போர்க்கெய்துதல், மெய்ப்பாடென்ப மெய்யுணர்ந்தோரே' எனச் செயிற்றியனார் ஓதுதலின், அச்சமுற்றான் மாட்டு நிகழும் அச்சம் அவன் மாட்டுச் சத்துவத்தினாற் புறப்பட்டுக் காண்போர்க்குப் புலனாகுந் தன்மை மெய்ப்பாடெனக் கொள்ளப்படும்"[2] என்பர். சத்துவம் என வடநூலார் குறிப்பிடுவதை மெய்ப்பாடு எனச் சுட்டியுள்ளார் இளம்பூரணர். சத்துவம் என்பதற்கு "மெய்மயிர் சிலிர்த்தல், கண்ணீர் வார்த்தல், நடுக்கமெடுத்தல், வியத்தல் தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற்சிதைவு"[3] என்னும் தமிழ்ப் பெயரகராதி. ஞா.தேவநேயன் "நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை, சமநிலையென"[4] விளக்கம் தருவர்.

மெய்ப்பாடு, கண்ணினும், செவியினுந், திண்ணிதின் உணரும் உணர்வுடைய மாந்தர்க் கல்லது மற்றோர்க்குப் புலனாகாது என்பது"[5] தொல்காப்பியர் கருத்தாகும். இதற்கு இளம்பூரணர் "ஈண்டு சொல்லப்பட்ட நல்ல நயத்தினையுடைய மெய்ப்பாடெல்லாம் ஆராயுங்காற், கண்ணானுஞ் செவியானும் விளங்க உணரும் அறிவுடை மாந்தர்க்கல்லது கருதல் அரிதல் என்றவாறு"[6] என்றுரைப்பர். "மெய்ப்பாடு எனும் சுவையை உணர, சுவைஞனுக்கும் அதுபற்றிய முன் அனுபவம், கூரிய அறிவு, பொறி புலனுணர்வு வேண்டும். கண்ணாலும் செவியாலும் ஏனைய உடல், மூக்கு, நா ஆகிய பொறிகளாலும் உலகைக் கூர்ந்து அறிந்து அனுபவிக்கும் உணர்வுடைய மாந்தருக்கே இலக்கிய இன்பம் புலனாகும். மெய்ப்பாடு என்பது நல்ல சிறந்த நயம் மிக்க பாட்டுப் பொருளை உணர்ந்து (பொருள்கோள் பொருள்கொண்டு) அனுபவிப்பது. அது முன்னே சொன்னவாறு ஐம்புல உணர்வுள்ள மக்களுக்கே இயைவதாகும். மற்றவர்களால் இச்சுவையுணர்வை எண்ணிப்பார்க்கவும்

முடியாது என்பர்"[7] தமிழண்ணல். மெய்ப்பாட்டிற்கு உடல், நா, கண், மூக்கு, செவி ஆகியவை முக்கியம் என்பதை இதன்வழி உணர இயலும்.

தொல்காப்பியர் செய்யுளியலில்,

"உய்த்துணர்வு இன்றித் தலைவரு பொருளான்

மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடாகும்"[8]

என்பர். உய்த்துணர்வின்றி ஒன்றைக் கேட்பதாலோ படிப்பதாலோ, மெய்யின்கண் சுவை தோன்றச் செய்வது கவிதையின் மெய்ப்பாடாகும். இதற்கு இளம்பூரணர், "யாதானுமொன்றைக் கூறியவழி யதன்கட் பொருண்மையானே மெய்ப்பாடு தோன்ற முடிப்பது மெய்ப்பாடென்னும் உறுப்பாம் என்றவாறு"[9] என்பர். பேராசிரியர், "நோக்குறுப்பால் உணர்ந்த பொருட் பிழம்பினைக் காட்டுவது மெய்ப்பாடு, 'இக்கருத்தினால் கவி கண்காட்டும்' எனவும் சொல்லுப கவிப்பொருள் உணர்ந்ததால் அதனானே சொல்லப்படும் பொருள் உய்த்து வேறு கண்டாங்கு அறிதலை மெய்ப்பாடென்றான். அது தேவருலகங் கூறினும் அதனைக் கண்டாங்கு அறியச் செய்தல்"[10] என்றுரைப்பர்.

செய்யுளில் மெய்ப்பாடு பெறும் சிறப்பை, "தலைவரு பொருளால் பாடலில் பொருந்தியுள்ள பொருள், மெய்ப்பட உணர்வை, சுவையை, மெய்ம்மயிர்சிலிர்த்தல், கண்ணீரரும்பல் முதலாய சத்துவம் வெளிப்பட, அதாவது பாடலை அல்லாது இலக்கணத்தைக் கேட்டாரிடத்தும் படித்தாரிடத்தும் இவ்வாறு சுவைதோன்றச் செய்வதே மெய்ப்பாடென்னும் உறுப்பாகும். இம்மெய்ப்பாடு முழுமையாய் அமைந்த கவிதையே மிகச்சிறந்ததாகும்"[11] என்பர் தமிழண்ணல்.

## பிற இலக்கணங்களில் மெய்ப்பாடு

### அகப்பொருள் விளக்கம்

தொல்காப்பியர் சுட்டியுள்ள மெய்ப்பாடுகளை அகப்பொருள் விளக்கமும்,

"நகை முதலாமிரு நான்கு மெய்ப்பாடும்

நிகழ் பொருள் மெய்ப்பட நிற்பமெய்ப்பாடே"[12]

எனச் சுட்டியுள்ளது. இதற்கு "நகையும், அழுகையும், இளிவரலும், மருட்கையும், அச்சமும், பெருமிதமும், உவகையும், வெகுளியும் என்னும் எட்டுவகை மெய்ப்பாடும், அவ்விடத்து நிகழும் பொருளைக் கேட்போர் மெய்யின்கண்ணே வெளிப்பட நிற்பன மெய்ப்பாடு என்னும் உறுப்பாம் என்றவாறு"[13] என்பர் பழைய உரைகாரர்.

### இலக்கண விளக்கம்

இலக்கண விளக்கம் மெய்ப்பாடுகள் பற்றி "உய்த்துணர்ச்சியின்றி அவ்விடத்து வந்த பொருளானே, சொல்லப்படும் பொருள் தானே வெளிப்பட்டாங்குக் கண்ணீர் அரும்பல், மெய் மயிர்சிலிர்த்தல் முதலாகிய சத்துவம் படுமாற்றான் வெளிப்படச் செய்வது மெய்ப்பாடு என்னும் உறுப்பாம்"[14] என்றுரைக்கின்றது.

### வீரசோழியம்

"மெய்யின்கண் விளங்கித் தோன்றும் தோற்றமெல்லாம், செவ்விதின் தெரிந்து குறிப்பிடுதல், சொல், நினைப்பு, வெய்தல், உயிர்ப்பு உறுதல், சோகம், வெப்பு, சோறு உண்ணாமை, மோகம், மயக்கம், மொழி பலபிதற்றல், மரணம், அணங்கு, வருத்தம் எனச் சான்றோர் குறிப்பிடுவர்"[15] என மெய்ப்பாடு பற்றி விளக்கம் தருகின்றது வீரசோழியம்.

## தொல்காப்பியத்தில் புலன்

தொல்காப்பியர் 'புலன்' என்ற சொல்லாட்சியைப் பொருளியல், மெய்ப்பாட்டியல் ஆகிய இரு இயல்களில், ஈரிடங்களில் பயன்படுத்துவர். ஒருசார் காமப் பொருண்மையால் நிலைதடுமாறுபவர்களைத் தொல்காப்பியர்,

"நோயும் இன்பமும் இருவகை நிலையில்
காமங் கண்ணிய மரபிடை தெரிய
எட்டன் பகுதியும் விளங்க ஒட்டிய
உறுப்புடையது போல், உணர்வுடையது போல்
மறுத்துரைப்பது போல் நெஞ்சொடு புணர்த்தும்
சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇச்
செய்யா மரபின் தொழிற்படுத்து அடக்கியும்
அவரவர் உறுபிணி தமபோற் சேர்த்தியும்
அறிவும் புலனும் வேறுபட நிறீஇ
இருபெயர் மூன்றும் உரியவாக
உவம வாயிற் படுத்தலும் உவமம்
ஒன்றிடத்து இருவர்க்கும் உரிய பால்கிளவி"[16]

என்ற நூற்பாவில் விளக்குவர். இதிலுள்ள புலன் என்ற சொல்லுக்கு இளம்பூரணர் "அறிவையும், அறியப்பயன்படும் பொருளையும் வேறுபட நிறுத்தி"[17] என்பார். நச்சினார்க்கினியர், "மனவறிவும், பொறியறிவும் வேறுபட நிறுத்தி"[18] என்று புலனைப் பொறி என விளக்குகிறார். ஆ.சிவலிங்கனார், "தம் மன அறிவையும், ஐம்புலன்களையும் வேறுபட நிறுத்தி"[19] என்று புலனை ஐம்புலன் என விளக்குகிறார்.

உவகையின் நிலைக்களன்களாகிய,

"செல்வம் புலனே புணர்வு விளையாட்டென
அல்லல் நீத்த உவகை நான்கே"[20]

என்பதில் புலன் சுட்டப்பெறுகிறது. இதில் வரும் புலன் என்ற சொல்லுக்கு "கண்டு கேட்டுஉண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலன்களால் நுகர்தல்"[18] என்பர் இளம்பூரணர்.

## ஐம்புலனும் உவமையும்

உவமை கூறும் முறையைத் தொல்காப்பியர்,

"வினைபயன்மெய் உரு என்ற நான்கே
வகை பெறவந்த உவமைத் தோற்றம்"[22]

என்றுரைப்பர். இதற்கு இளம்பூரணர் "தொழில், பயன், வடிவம், நிறம் என்று சொல்லப்பட்ட நான்கும் உவமைக்கண் கட்புலனாகச் சொல்லப்படும். கட்புலனில்லாதனவுமுள, அவை செவியானும், நாவினானும், மூக்கினானும், மெய்யினானும், மனத்தினானும் அறியப்படுவன. இவ்விருவகையும் பாகுபடவந்த உவமையாகும்"[23] என்பர். மேலும் கட்புலனாவதற்கு எடுத்துக்காட்டாக,

"புலிபோலப் பாய்ந்தான் - வினை
மாரியன்ன வண்கை - பயன்
துடி போலும் இடை - வடிவு
தளிர்போலும் மேனி - நிறம்




என்பனவற்றையும் கட்புலனாகாதவற்றிற்கு,

குயில்போன்ற மொழி - செவியாலறியப்பட்டது
வேம்பு போலக்கைக்கும் - நாவினாலறியப்பட்டது
தீப்போலச் சுடும் - மெய்யினாலறியப் பட்டது

*ஆம்பல் நாறுந் துவர்வாய் - மூக்காலறியப்பட்டது*

*தம்மிலிருந்து தமது பாத்துண்டற்றால்*

*அம்மா அரிவைமுயக்கு - மனத்தாலறியப்பட்டது*"[24]

*என்பனவற்றையும் உதாரணம் காட்டுவர். இதிலிருந்து உவமை கூறுவதற்கு ஐம்புல உணர்வு இன்றியமையாதது என்பது புலனாகும்.*

**ஐம்புலனும் உயிர்ப்பாகுபாடும்**

*தொல்காப்பியர் மரபியலில்,*

"*ஒன்றறிவதுவே உற்றறிவதுவே*

*இரண்டறிவதுவே அதனொடு நாவே*

*மூன்றறிவதுவே அவற்றொடு மூக்கே*

*நான்கறிவதுவே அவற்றொடு கண்ணே*

*ஐந்தறிவதுவே அவற்றொடு செவியே*

*ஆறறிவதுவே அவற்றொடு மனனே*

*நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே*"[25]

*என்ற நூற்பாவில் உயிர்ப்பாகுபாட்டை விளக்கியுள்ளார்.*

**ஓரறிவுயிர்**

*ஓரறிவுயிராவது உடம்பினானறிவது. இவ்வுயிர்க்கு தொடு உணர்ச்சி மட்டுமே உண்டு. "வெப்பம், தட்பம் வன்மை, மென்மை"[26] ஆகியவற்றை அறியும்.*

**ஈரறிவுயிர்**

*ஈரறிவுயிராவது உடம்பினானும், வாயினானும் அறிவது. இவ்வுயிர் தொடு உணர்வும் சுவை உணர்வும் அறியும். "நாவினாற் கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, புளிப்பு, மதுரம்"[27] என்பன அறியும்.*

## மூவறிவுயிர்

மூவறிவுயிரானது உடம்பினானும், வாயினானும், மூக்கினானும் அறிவது. இவ்வுயிர் தொடுதல், சுவைத்தல், நுகர்தல், காட்சி போன்ற உணர்வுகளை அறியும். "மூக்கினால் நன்னாற்றம், தீய நாற்றம் அறியும்"[28] தன்மையுடையது.

## நாலறிவுயிர்

நாலறிவுயிராவது உடம்பினானும், வாயினானும், மூக்கினானும், கண்ணினானும் அறிவது. இவ்வுயிர் தொடுதல், சுவைத்தல், நுகர்தல், காட்சி போன்ற உணர்வுகளை அறியும். "கண்ணினால் வெண்மை, செம்மை, பொன்மை, பசுமை, கருமை, நெடுமை, குறுமை, பருமை, நேர்மை, வட்டம், கோணம், சதுரம்"[29] என்பன அறியும்.

## ஐயறிவுயிர்

ஐயறிவுயிராவது உடம்பு, வாய், மூக்கு, கண், இவையோடு சேர்த்து செவியினால் அறிவது. இவ்வுயிர் தொடுதல், சுவை, நுகர்வு, காட்சி, கேட்டல் என்பனவற்றை அறியும். "செவியினால் ஓசை வேறுபாடும், சொற்படும் பொருளும் அறியும்"[30] தன்மையுடையது.

## ஆறறிவுயிர்

ஆறறிவுயிராவது மெய், வாய், மூக்கு, கண், செவியோடு மனத்தினால் அறிவது. "உடம்பினால் உற்றறிதல், நாவினால் சுவைத்தறிதல், மூக்கினால் முகர்ந்தறிதல், கண்ணினாற் கண்டறிதல் ஆகியவற்றுடன் செவியினாற் கேட்டறிதலும் ஆகிய ஐந்தறிவினையுடைய உயிர்கள் ஐந்தறிவுயிர்கள்."[31] இவற்றுடன் மனத்தால் சிந்தித்துப் பகுத்தறியும் ஆற்றல் உடைய மனிதன் ஆறறிவுயிராவான்.

### ஐம்புலன் உணர்வு

மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன ஐம்புலன்கள் ஆகும். இவற்றால் அறியும் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்பன ஐம்புல உணர்வுகளாகும்.

### ஊற்றுணர்வு

மெய்யால் உணரக்கூடியது ஊற்றுணர்வு. இதனைத் தொல்காப்பியர், 'ஒன்றறிவதுவே உற்றறிவதுவே' என முதலில் வைக்கிறார். இம்மெய்யுணர்வை "ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல், இவை மெய்ப்பொறிகளால் செய்யப்படுவன"[32] என்று அபிதான சிந்தாமணி உரைக்கின்றது.

### சுவையுணர்வு

நாவினால் அறியப்படுவது சுவையுணர்வு "புலன்களுக்கும் புலன்களின் வாயிலாக மனத்திற்கும் இன்பம் தருவதைக் குறிக்க முன்னோர் ஒரு செயலைத் தேடினர். அதனைத் தமிழில் சுவை என்றனர்."[33] எனவே புலன்களுக்கும், அதன் வாயிலாக மனத்திற்கும் இன்பம் தருவதை சுவை என மு.வ. விளக்குகிறார். தொல்காப்பியர் இதனை 'இரண்டறிவதுவே அதனொடு நாவே' என இரண்டாவதாக வைத்தார். நா சுவையை மட்டுமின்றி மனிதனின் கருத்தை வெளியிடும் கருவியாகவும் செயல்படுகிறது.

### ஒளியுணர்வு

'நான்கறிவதுவே அவற்றொடு கண்ணே' என்று தொல்காப்பியர் கண்ணை நான்காவதாக வரிசைப்படுத்தியுள்ளார். ஐம்புலன்களில் கண்ணே மிக முக்கியமானது. கண் இல்லை என்றால் காட்சிகளை

இரசிக்கமுடியாது. "கற்பனைக்குக் கட்புலனே (Sense of Sight) அடிப்படையானது என்பது அடிசனின் கொள்கையாகும். இக்கட்புலனே கருத்துக்களாக அமைந்து கற்பனையை நல்குகிறது"[34] எனவே படைப்பாற்றல் உள்ள புலவனுக்கு கட்புலன் மிக அவசியம்.

"ஒரு மாம்பழத்தைப் பார்க்கும்பொழுது அதன் உருவம் பற்றிய புலனுணர்வைப் பெறுகிறோம். உடனே மாம்பழத்தைப் பற்றி நாம் ஏற்கனவே பெற்றுள்ள அனுபவத்தின் பிம்பங்கள் நினைவுக்கு வருகின்றன. இவற்றால் உள்ளத்தில் ஓர் ஒப்புமை விளக்கம் நிகழ்ந்து, நாம் பார்க்கும் பொருள் மாம்பழம் என்று அறிகிறோம். இவ்வாறு புறத்திலுள்ள பொருளைப் பற்றி நாம் பெறும் புலனுணர்வை அடிப்படையாகக் கொண்டு உள்ளத்தின் விளக்கத்தால் அப்பொருள் இன்னதென்று அறிவது காட்சி ஆகும். புலனுணர்வு புறத்திலுள்ள பொருட்களைக் காட்டும் அறிகுறியாகப் பயன்படுகின்றது. காட்சியால்தான் புலனுணர்வின் பொருள் விளங்குகிறது. காட்சி என்பது புறப்பொருட்களைப் பற்றியே நிகழும்"[35] என்று கலைக்களஞ்சியம் காட்சிக்கு விளக்கம் தருகின்றது. இவ்வாறு கண்ணால் உணரக்கூடியது ஒளியுணர்வு ஆகும்.

## நாற்றம்

'மூன்றறிவதுவே அவற்றொடு மூக்கே' என்று மூன்றாம் இடத்தை மூக்குக்கு கொடுத்துள்ளார் தொல்காப்பியர். மூக்கு மணத்தை உணர்த்தும் ஒரு கருவியாக மட்டுமின்றி, நாம் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத சுவாச உறுப்பாகவும் இருக்கிறது. பரிணாம வளர்ச்சியில் மூக்கில்லா உயிர்கள் செதில்களால் சுவாசிக்கின்றன. "நண்டிற்கும் மூக்குண்டோ வெனின் அஃது ஆசிரியன் கூறலான்

உண்டென்று பெற்றாம்”[36] என்பார் பேராசிரியர். இத்தகைய மூக்கால் உணரும் உணர்வு நாற்ற உணர்வு எனப்படும். மூக்கு நன்னாற்றம், தீய நாற்றம் போன்றவற்றை அறியக்கூடியதாக அமையும்.

## ஓசை உணர்வு

ஐம்பொறிகளில் கண்ணும் செவியும் மிக நுட்பமானவையாகவும், மிக இன்றியமையாதவையாகவும் உள்ளன. இவற்றின் வழி முறையே மனிதன் உணரும் காட்சியும், கேள்வியுமாகிய இரண்டில் மனித மூளையின் ஆணையின்றியும் கூட, மனிதனை அடையக்கூடிய தன்மை ஒலிக்குக் கூடுதலாக உண்டு. மனிதன் விரும்பிக் கேட்க வேண்டும் என்று முடிவுசெய்து செவிமடுக்காமலே கூடச் செவிப்பொறியின் வழி, ஒலி மனிதனைத் தடையின்றி அடைவதற்கேற்ற வண்ணம், கண்ணைப் போல செவிக்கு ஒரு மூடியில்லாமை ஒரு வாய்ப்பாக இருக்கிறது. “ஒலியின் இத்தகைய வாய்ப்புக்கு மற்றொரு அடிப்படைக் காரணம் ஒலிபரவுவதற்குரிய ஊடகங்களுள் காற்றும் ஒன்றாக இருப்பதாகும்.”[37]

இங்ஙனம் ஒலியின் பரவல் தன்மையும், செவியின் உணரும் தன்மையும் ஒற்றிணைந்து கேள்விச் செல்வத்திற்குத் தனிச் சிறப்பைத் தருகின்றன. கண்பார்வைக்குரிய தடைகளையும் மீறிச் செவியால் ஒலியைக் கேட்க இயலும். “இயற்கையில் உள்ள வண்ண வேறுபாடுகளையும் மற்றும் வடிவ வேறுபாடுகளையும்விட ஒலி வேறுபாடுகள் எண்ணிறந்தன.”[38]

தொல்காப்பியர் செவியுணர்வை ஐந்தாவதாக வகைப்படுத்தியுள்ளார். இதற்கு கோ.கண்ணன்,

“1. ஒரு பொருளில் தொடு உணர்ச்சி, தனியாக ஒரு பொருளின் தொடு உணர்ச்சி, செவியுணவாகிய ஒலிப்பின்னணியோடு.

2. ஒரு பொருளில் நாச்சுவை அறிதல், தனியாக ஒரு பொருளின் நாச்சுவை அறிதல் செவியுணவாகிய ஒலிப்பின்னணியோடு.

3. ஒரு பொருளின் மணத்தை நுகர்தல் - தனியாக ஒரு பொருளின் மணத்தை நுகர்தல் செவியுணவாகிய ஒலிப்பின்னணியோடு.

4. ஒரு பொருளின் காட்சி இன்பத்தை நுகர்தல், தனியாக ஒரு பொருளின் காட்சி இன்பத்தை நுகர்தல், செவியுணவாகிய ஒலிப்பின்னணியோடு என்ற துய்ப்பு நிலையில் உணர்ந்து பார்த்தல், ஒவ்வொரு பொறி உணர்வும், செவி உணர்வோடு இணையும்போது உணர்வுப்பேறு பன்மடங்காக விரிதல் புலனாகும்"[39] என்கிறார். இதன் வாயிலாகச் செவியுணர்வு தானும் ஓர் உணர்வாக இருத்தலோடு, பிற உணர்வுகளுக்கு உணர்வுப் பெருக்கியாகவும் அமைவதைக் காணமுடியும்.

"செவியும் நாவின் சுவைகொண்டு மகிழ்ந்து இசையின் சுவையை அறிதல் வேண்டும்"[40] என்கிறார் கு.கோதண்டபாணி பிள்ளை. அதாவது இனிப்பு வாய்க்கு எவ்வகைச் சுவையைத் தருமோ, அதுபோல் இசை செவிக்குத் தரும் என்கிறார். இவ்வாறு உணரும் உணர்வாக ஓசை (ஒலி) விளங்குகிறது.

## ஐம்புல உணர்வு அகராதிகள் விளக்கம்

ஐம்புல உணர்வுகளை "ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்"[41] என்று சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் விளக்குகின்றது. "மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவற்றால் அறியும் உணர்வு ஐம்புலன் உணர்வு"[42] என்று பெருஞ்சொல்லகராதி விளக்கம் தருகின்றது. "அறிவு, உடலும், துயிலும் மிலது தெளிவு, புலன் ஒழிபு, ஆன்மா, விஞ்ஞானம் முதலியன உணர்வுகள்"[43] என மதுரை தமிழ்ப் பேரகராதி விளக்குகிறது.

“மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளின் வாயிலாகப் புறத்தேயுள்ள பொருட்களின் பரிசம், சுவை, உருவம், நாற்றம், ஓசை என்பனவற்றை உணர்த்துவது புலனுணர்வு எனப்படும்.”[44] “சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்”[45] எனத் தமிழ் லெக்சிகன் ஐம்புலன்களை உணரும் உணர்வினை எடுத்துக்காட்டுகிறது. “அறிவும், தெளிவும், ஒழிவும் உணர்வெனல், உடல் தீர்கை, துயில் நீங்குகை”[46] என உணர்வு பற்றிப் பெருஞ்சொல்லகராதி விளக்கம் தருகின்றது.

வாழ்வியற்களஞ்சியம் “ஓசை, ஊறு, உரு, சுவை, நாற்றம் என்பனவாம். இவை சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என வடமொழியில் கூறப்படும். எனவே ஐம்புலன்கள் கருவிகளால் அறியப்படும் என உணரலாம். ஐம்புலன்களையும் அறிதற்குரிய கருவிகள் செவி, மெய், கண், நாக்கு, மூக்கு என்பன. இவை அறிகருவிகள் (ஞானேந்திரியம்) எனப்படும். செவி ஓசையை அறியும், மெய் ஊற்றின்பத்தை அறியும், கண் உருவைக் காணும், நாக்கு சுவையை அறியும், மூக்கு நாற்றத்தை அறியும்”[47] என விளக்குகிறது. இவ்வாறு ஐம்புலன்கள் அவை உணரும் உணர்வுகள் பற்றி அகராதிகள் விளக்கம் தருகின்றன.

## இலக்கியமும் ஐம்புல உணர்வும்

இலக்கியம் படைக்க கற்பனை அவசியம். அக்கற்பனை எவ்வாறு உருவாகின்றது என்பதற்குப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. “கற்பனைக்கு கட்புலனே அடிப்படை. இக்கட்புலனே கருத்துக்களாக அமைந்து கற்பனையை நல்குகிறது என்பது அடிசனின் கொள்கையாகும்.”[48]

"கற்பனையாவது புலன் உணர்ச்சிகளை உருப்படுத்திக்காட்டும் ஆற்றலாகும். ஐம்புலன்களாலும் முன்பு உணர்ந்தவற்றை மீண்டும் உள்ளத்தில் நினைவு கூர்ந்து பாடல் அல்லது இலக்கியமாக அமைப்பது கற்பனை என்பது வில்லியம் தெய்லரின் கருத்தாகும்."[49]

உலகெங்கும் மனிதனுக்குத் தெரியாமல் ஒரு நுண்ணிய சக்தி ஊடாடி நிற்கிறது. அந்தச் சக்தியே உணர்ச்சியாகும். உணர்ச்சியற்ற யாரும் உயிருள்ளவர்களாகக் கருதப்படுவதில்லை. அதே போன்று உணர்ச்சியற்ற இலக்கியம் சிறந்த இலக்கியம் என்று கூறமுடியாது" என்பர். எனவே உணர்ச்சி என்பது உடலுக்கு எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியமானது. இலக்கியத்தைப் படைக்கும் படைப்பாளனுக்கு. ஐம்புலன்களின் உணர்வு இருந்தால்தான், அவனால் அவ்விலக்கியத்தை செம்மையாக உணர்ச்சி மிகுந்த இலக்கியமாகப் படைக்க இயலும்.

## தொகுப்புரை

உலகம் இயங்க ஐம்பூதங்களின் செயல்கள் அடிப்படையாக அமைவதுபோல, மனிதன் இயங்குவதற்கு மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன்களும் அடிப்படையாகும். இப்புலன்கள் வெளிப்படுத்தும் ஊற்றுணர்வு, சுவையுணர்வு, ஒளியுணர்வு, நாற்ற உணர்வு, ஓசை உணர்வு என்பன இன்றியமையாதனவாகும்.

மெய்யின்வழித் தோன்றும் உணர்வுகளை வெளிப்படுத்துவது புலன்களாகும். புலன்களின்வழி வெளிப்படும் உணர்வுகளை மெய்ப்பாடுகள் எனத் தொல்காப்பியர் சுட்டுகிறார்.

மெய்ப்பாடு உணர்ச்சியின் அடிப்படையில் அமைவதாகும். நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை

என்ற எட்டும் மெய்ப்பாட்டின் வகைகளாகும். இளம்பூரணர் மெய்யின்கண் தோன்றுதலின் இது மெய்ப்பாடாயிற்று. இதையே சத்துவம் என வடநூலார் குறிப்பிடுகின்றனர் என்பர்.

சத்துவம் என்பது ஒன்பான் சுவை. அது மெய்மயிர் சிலிர்த்தல், கண்ணீர் வார்த்தல், நடுக்கமெடுத்தல், வியத்தல் தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற் சிதைவு என்பனவாகும்.

நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் மெய்ப்பாடுகளை சமநிலையென்ற தமிழண்ணல், மெய்ப்பாட்டிற்கு, கண், செவி, உடல், மூக்கு, நா ஆகியவை முக்கியம் என்பதை எடுத்துரைக்கின்றார்.

பேராசிரியர் நோக்குறுப்பால் உணர்ந்த பொருட்பிழம்பினைக் காட்டுவது மெய்ப்பாடு என விளக்குகிறார்.

பிற இலக்கண நூல்களான அகப்பொருள் விளக்கம், இலக்கண விளக்கம், வீரசோழியம் போன்றவற்றிலும் மெய்ப்பாட்டின் வகைகள் தொல்காப்பியர் சுட்டியுள்ளது போன்றே சுட்டப்பட்டுள்ளன.

தொல்காப்பியத்தில் புலன் என்ற சொல்லாட்சி பொருளியல், மெய்ப்பாட்டியல் ஆகிய இரு இயல்களில் ஐம்புலன் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது.

புலன் என்பதற்கு இளம்பூரணர், கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலன்களால் நுகர்தல் எனச் சுட்டுகிறார்.

ஐம்புலன்கள் உவமை தோன்றுவதற்கும் அடிப்படையாக அமைகின்றன. தொல்காப்பியர் குறிப்பிடும் உயிர்ப்பாகுபாடும்

அவற்றின் உணர்வுகளும் ஐம்புலன்களின் சிறப்பை எடுத்துரைக்கின்றன. உயிர்ப்பாகுபாட்டில் மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவற்றை மெய், வாய், மூக்கு, கண், செவி என வகைப்படுத்தியுள்ளார் தொல்காப்பியர்.

மெய்ப்பாடு எட்டும் ஐம்புல உணர்வை வெளிப்படுத்தும் காரணிகளாகும். இலக்கியம் படைக்கும் புலவன் அல்லது படைப்பாளனுக்கு ஐம்புலனும் அவை பற்றிய உணர்வும் இன்றியமையாதனவாகும்.

## சான்றெண் விளக்கம்

1. தொல்.நூ.1197

2. மு.சண்முகம்பிள்ளை (பதி.), தொல்.பொருள்.மெய்ப்பாட்டியல் இளம்பூரணர் (உரை.), ப.7

3. இருபதாம் நூற்றாண்டு தமிழ்ப் பெயரகராதி, ப.558

4. ஞா.தேவநேயன், பண்டைத் தமிழர் நாகரீகமும் பண்பாடும், ப.245

5. தொல்.நூ.1221

6. மு.சண்முகம்பிள்ளை (பதி.), தொல்.பொருள்.மெய்ப்பாட்டியல் இளம்பூரணர் (உரை.), ப.7

7. தமிழண்ணல் (உரை.), தொல்.பொருள்.தொகுதி - 2, ப.50

8. தொல்.நூ.1460

9. மு.சண்முகம்பிள்ளை (பதி.), தொல்.பொருள்.மெய்ப்பாட்டியல் இளம்பூரணர் (உரை.), ப.156

10. தமிழண்ணல் (உரை.), தொல்.பொருள்.தொகுதி - 3, ப.113

11. மேலது, ப.112

12. அக.பொ.வி.நூ. 231

13. கா.ர.கோவிந்தராச முதலியார் (கு.உ.), அகப்பொருள் விளக்கம், ப.280

14. தி.வே.கோபாலையர் (பதி.), இலக்கண விளக்கம், ப.755

15. கா.ர.கோவிந்தராச முதலியார் (பதி.), வீரசோழியம், ப.102

16. தொல்.நூ.1142

17. ஆ.சிவலிங்கனார், தொல்.பொருள்.பொருளியல் உரைவளம், ப.12

18. மேலது, ப.16

19. மேலது, ப.24

20. தொல்.நூ.1205

21. க.வெள்ளைவாரணன், தொல்.பொருள் உரைவளம், ப.73

22. தொல்.நூ.1222

23. மு.சண்முகம்பிள்ளை, தொல்.பொருள்.இளம்பூணர் (உரை.), ப.34

24. மேலது, ப.35

27. தொல்.நூ.1525

26. மு.சண்முகம்பிள்ளை, தொல்.பொருள்.இளம்பூரணர் உரை., ப.175

27. மேலது, ப.175

28. மேலது, ப.175

29. மேலது, ப.175

30. மேலது, ப.175

31. மேலது, ப.175

32. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.405

33. மு.வரதராசனார், அண்ணல் சுப்பிரமணியனார் மணிமலர், ப.25

34. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.111

35. தி.சு.அவினாசிலிங்கம் (பதி.), கலைக்களஞ்சியம் தொகுதி - 3, ப.439

36. க.வெள்ளைவாரணன், தொல்.மரபியல் உரைவளம், ப.49

37. டி.முருகையன், ஒலியியல், ப.3

38. கோ.கண்ணன், பண்டைத் தமிழரின் ஒலி உணர்வும், இசை உணர்வும், ப.2

39. மேலது, பக்.38-39

40. கு.கோதண்டபாணிப் பிள்ளை, பழந்தமிழ் இசை, பக்.1-2

41. இரா.சாரங்கபாணி (பதி.), சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம், தொகுதி - 1, ப.527

42. பழனி அரங்கசாமி (பதி.), பெருஞ்சொல்லகராதி, தொகுதி - 1, ப.428

43. மதுரை தமிழ்ப் பேரகராதி, முதல்பாகம், ப.321

44. தி.சு.அவினாசிலிங்கம் (பதி.), கலைக்களஞ்சியம் தொகுதி - 3, ப.438

45. தமிழ் லெக்சிகன், தொகுதி - 1, ப.579

46. பழனி அரங்கசாமி (பதி.), பெருஞ்சொல்லகராதி தொகுதி - 1, ப.429

47. நா.பாலுச்சாமி (பதி.), வாழ்வியற்களஞ்சியம் தொகுதி - 6, பக்.132-133

48. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.111

49. மேலது, ப.112.

# மெய்ப்புலனுணர்வுப் புனைவு

அக இலக்கியங்கள் தலைவன், தலைவி இடையே ஏற்படும் அன்பின் மிகுதி, ஊடலின் இறுதியில் ஏற்படும் உணர்வு, பிரிவினால் ஏற்படும் துன்பம், இயற்கையினால் உண்டாகும் ஊற்றுணர்வு போன்றவற்றை மிகச் சிறப்பாக எடுத்துக்காட்டியுள்ளன. இத்தகு மெய்ப்புலன் உணர்வுப் புனைவு பற்றிக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

## தொல்காப்பியம் குறிப்பிடும் மெய்யுணர்வு

தொல்காப்பியர் அகத்திணையியலில் உரிப்பொருள் பற்றி,

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங்காலை திணைக்குரிப் பொருளே"[1]

எனக் குறிப்பிட்டுள்ளார். உரிப்பொருளில் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் என்பது மெய்யுணர்வோடு தொடர்புடையது. மெய்யின் வழியே பிற உணர்வுகள் தோன்றினும் உடம்போடு தொடர்புடையது புணர்தலே என்பதால் அதனை முதலில் வைத்துள்ளதன் மூலம் ஐம்புலன்களில் மெய்யின்ப உணர்வுகளின் இன்றியமையாமையை உணர முடிகின்றது.

## சங்க இலக்கியத்தில் மெய்யுணர்வு

சங்க இலக்கியத்தில் மெய்யுணர்வு தலைவன், தலைவியரின் தழுவுதல், வருடல், அணைத்தல், முயங்குதல், துயிலல், பாராட்டல், அழுதல், புலம்புதல், புணர்தல், பதைபதைத்தல், நடுங்குதல், மருளல், உயிர்ப்புதல் போன்ற செயல்களிலும், வெப்பம், தட்பம் போன்ற இயற்கை உணர்வுகளிலும் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

## தலைவன் தலைவி இடையே ஏற்படும் மெய்யுணர்வு

குடும்ப வாழ்க்கையில் கணவன் மனைவி உறவில் மெய்யுணர்வே முதன்மைப் பங்கு வகிக்கிறது. மெய்யுணர்வே உயிர்களைக் காலம் காலமாக அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்கிறது. அதனாலேயே நம் முன்னோர்கள் இவற்றை மக்கள் கூடும் கோயில்களில் சிற்பங்களாகச் செய்து வைத்துள்ளனர். இதை உணர்ந்தே சங்கப் புலவர்களும் தம் பாடல்களில் மெய்யுணர்வை எடுத்துக்காட்டியுள்ளனர். தழுவுதல், கவவுதல், முயங்குதல், புணர்தல், அணைத்தல் போன்றவை மெய்யுணர்வின் வெளிப்பாடாகும்.

## உள்ளப் புணர்ச்சியும் மெய்யுறு புணர்ச்சியும்

மெய்யுறு புணர்ச்சிக்கு முன் நிகழ்வது உள்ளப்புணர்ச்சி. அதாவது ஒத்த தலைவனும், தலைவியும் காதல் கொள்வது. காதல் குறித்து பிளேட்டோ என்னும் அறிஞர் "ஆண்பெண் என்பன படைப்புத் தொடக்கத்து ஒரு பொருளாம் என்றும் தெய்வ சாபத்தால் பிளவுபட்டு இரண்டாயின என்றும், அன்றுமுதல் ஒன்றாய் இணையப் பாடுபடுகின்றன என்றும் விளக்கம் தருவர்."[2] இதனை வ.சுப.மாணிக்கனார் "உமையொரு பாகம் அருத்தநாரீசுவரன் எனச் சிவனுக்கு ஆண்பாதி பெண்பாதி உருவம் கற்பிக்கும் இந்து புராணத்தைப் போன்றது"[3] என்பர். தொல்காப்பியர் காட்சியை,

"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலதாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப"[4]

என்றுரைப்பர். இதற்கு உயர்ந்த பாலின் ஆணையால் நல்லூழின் ஏவலால் காதற்காட்சி நிகழும் என்பதுபொருளாகும். இளம்பூரணர் தம் உரையில்

“ஒருவரையொருவர் கண்டுழியெல்லாம் புணர்ச்சி வேட்கை தோற்றாமையின், பாலதானையான் ஒருவரையொருவர் புணர்தற் குறிப்போடு காண்பர்”[5] எனக் குறிப்பிடுவர். இக்காதற் புணர்ச்சி விதிகூட்டிய முதலுறவு இயற்கைப் புணர்ச்சி என வழங்கப்படும்.

இங்ஙனம் காதலர்தம் மனவொற்றுமையே அகத்திணையின் உயிர்ப்பண்பாகும். இவ்வொற்றுமையை உள்ளப்புணர்ச்சி என அகஇலக்கணங்கள் குறிப்பிடும். எவ்வகையான அகஇலக்கியங்கள் படைப்பதற்கும் உள்ளப்புணர்ச்சி அடிப்படையாகத் திகழும். பருவ வயதெய்திய தலைவனும் தலைவியும் உள்ளம் புணர்ந்தபின் நிகழும் நிகழ்வே மெய்யுறு புணர்ச்சியாகும். இப்புணர்ச்சி களவுக் காலத்தில் இயற்கைப் புணர்ச்சியில் நிகழும்.

தலைவனும் தலைவியும் மெய்யுறு புணர்ச்சிக்கு முன்னர் செய்துகொள்ளும் இன்ப விளையாட்டுக்களான காதலியின் தோளில் துயிலுதல், மார்பில் துயிலுதல், கூந்தலணையில் துயிலுதல், தொய்யில் எழுதல், எயிற்று நீர் சுவைத்தல், நுதல் உண்ணல் போன்ற இன்பச் செய்கைகள் மெய்யுணர்வின் வெளிப்பாடாக அமையும்.

## தோளில் துயிலுதல்

தலைவன், முல்லை மணம் வீசுகின்ற நறிய நுதலினையுடைய காதலியின் இரு தோள்களில் துயின்று கழித்த நாட்களை,

“பசுமுகைத் தாது நாறும் நறுநுதல்
அரிவை தோள் - அணைத் துஞ்சிக்
கழிந்த நாள் இவன் வாழும் நாளே” (குறுந்.323:5-7)

எனக் குறிப்பிடுவர் பதடிவைகலார். தலைவியின் தோளினைத் துஞ்சிக்

கழித்த நாட்கள் இன்பம் நிறைந்ததாகவும் துஞ்சாத நாட்கள் இன்பம் இல்லாத நாட்களாகவும் கழிந்தன என்று தலைவன் பெற்ற தோளின்ப மெய்ப்புலன் உணர்வு புனையப்பட்டுள்ளது.

## மார்பில் துயிலுதல்

பாசறையில் இருக்கும் தலைவன் தன் வினை முடியாத நிலையில் தன் உள்ளத்துயரை, "என் காதலியைப் பிரிந்ததனால் என்னை வருத்தும் வெம்மை மிக்க பெருமூச்செறிதற்கு ஏதுவான காமநோய் கெட்டொழியுமாறு, என் கண்கள் உறங்குவதற்கு, செவ்விய பண்புகளையுடைய என் காதலியின் இளமுலைகளுக்கிடையே கிடந்து இனிய துயிலைப் பெறும்"[6] என்றுரைக்கின்றான். இதில் தலைவியின் தோள் தழுவலாகிய ஊற்றின்பம் கிடைத்தால்தான் தன்னால் துயில இயலும் என்று தலைவன் உரைப்பது குறிப்பிடத்தக்கது.

கலித்தொகைத் தலைவியொருத்தி, தலைவன் தன் முலையிடத்து துயிலும் துயிலையும் மறந்தான் எனப் புலம்புவதை,

"முலையிடைத் துயிலும் மறந்தீத்தோய்" (கலித்.128:14)

என்ற அடிகள் சுட்டும். "தலைவன் தலைவியின் அழகிய நெற்றியைத் தடவி, கோங்கினது அரும்பு போன்ற குவிந்த இளைய முலைகளையுடைய மார்பகத்து இனிதே துயிலுதல்,"[7] "தலைவனுடைய காதலுக்குரிய இளைய பரத்தை தலைவனுடைய மார்பில் கிடந்து உறங்குதல்"[8] போன்றவை ஊற்றின்பத்திற்குரியனவே.

ஊற்றுணர்விற்குத் தலைமுதல் கால்வரை உள்ள அனைத்து அவயங்களும் காரணியாக அமையும். ஒரு மனிதனின் தோற்றத்தில் தலையில் உள்ள மயிர் சிறப்பிடம் பெறுகிறது. அவ்வகையில் தலைவன் தலைவியது வண்டொலிக்கும் கொண்டை முடியாகிய பூப்பெய்த

கூந்தலிடத்தே கிடந்து துயில் கொண்டதை,

"ஆடுவண்டு அரற்றும் முச்சித்

தோடுஆர் கூந்தல் மரீஇயோரே" (அகநா.231:14-15)

என்பர் ஈழத்துப் பூதன் தேவனார்.

மேலும் "தலைவியின் ஐந்து பகுப்புக்களையுடைய கரிய கூந்தலிற் படுத்துறங்கி இன்பங்கண்ட தலைவன் அத்துயிலின் இனிமையை நினைத்து காலந்தாழ்த்தாது விரைந்து வருவன்"[9] என்றுரைப்பதும் இவ்வுணர்வினை நன்கு புலப்படுத்தும்.

## தொய்யில் எழுதல்

மகளிர் முதுகிலும், தோளிலும் சந்தனக்கோலம் இடுவது தொய்யில் எழுதல் எனப்படும். தலைவன் தான் விரும்பிய தலைவியின் தோளில் தொய்யில் எழுதுவதை,

"தொய்யில் இளமுலை இனிய தைவந்து

தொய்யல் அம் தடக் கையின்" (கலித்.54:12-13)

"கோங்கின் முதிரா இளமுகை ஒப்ப, எதிரிய

தொய்யில் பொறித்த வனமுலையாய்" (கலித்.117:4-5)

எனக் கலித்தொகை சுட்டும்.

## எயிற்றுநீர் சுவைத்தல்

தலைவியின் வாய்ச்சுவையைத் தலைவன் அனுபவித்தலை,

"முள் எயிறு உண்கும்" (கலித்.112:20)

"நின்கூர் எயிறு உண்கு" (நற்.204:6)

"நின் வைஎயிறு உண்ீஇய" (அகநா.325:11)

"அமிழ்தம் ஊறும் செவ்வாய்" (அகநா.335:25)

என்ற அடிகள் சுட்டும். தலைவன் தலைவியிடம் பெற்ற வாயுணர்வை இதன் மூலம் அறியமுடிகின்றது.

## நுதல் உண்ணல்

தலைவன் தலைவியின் அழகிய நுதலின் நலத்தை நுகர்ந்தபின் இனிமையான பால் அருந்துவதையும் மறப்பன் என்பதை,

"நல்நுதல் நலன் உண்டு துறத்தல் - கொண்க
தீம்பால் உண்பவர் கொள்கலம் வரைதல்" (கலித்.133:16-17)

எனக் கலித்தொகை உரைக்கும்.

## தலைவருடல்

தலை வருடல் என்பது அன்பின் வெளிப்பாடாகும். அகநானூற்றில் தலைவன் ஒருவன், மழைத்துளிகளைத் தன்னிடத்தே கொண்ட நீலமணியின் நிறம் போன்ற தலைவியின் அழகிய கூந்தலை முதுகு மறையுமாறு பின்னே கோதி அம்மயிர்க்கொத்தினைப் பிழிந்துவிடுவான்"[10] என்பர் பெருங்குன்றூர் கிழார்.

தோளில் துயிலுதல், மார்பில் துயிலுதல், கூந்தலில் துயிலுதல், தொய்யில் எழுதல், எயிற்றுநீர் சுவைத்தல், நுதல் உண்ணல், தலைவருடல் போன்றவை புணர்ச்சிக்கு முன் நிகழும் மெய்யுணர்வுப் புனைவுகளாகும்.

## தழுவுதல்

தழுவுதல் என்பது அன்பின் மிகுதியைக் குறிக்கும். ஒருவரையொருவர் தழுவி அன்பினை வெளிப்படுத்தும் வழக்கம் உலகம் முழுவதும் பின்பற்றப்பட்டு வருகிறது. ஒத்த உள்ளங்கொண்ட ஆண் பெண் தழுவிக்கொள்வது காதலின் வெளிப்பாடாகும். சங்கப் புலவர்களும் காதல் இன்பத்தை வெளிப்படுத்த, தழுவுதல், கவவுதல், முயங்குதல்,

புணர்தல் போன்ற மெய்யின்பங்களைத் தம் பாடலில் படைத்துள்ளனர். தழுவுதல் என்னும் உணர்வு தலைவன், தலைவிக்கு மட்டுமல்லாது பரத்தை, தாய், புதல்வன் ஆகியோரிடத்தும் நிகழும்.

## தலைவன் தலைவியைத் தழுவுதல்

பேரழகுடைய மகன் மருங்கிலே விளையாடி இன்புற, வண்டுகள் ஆரவாரம் செய்யும் பூக்கள் நிறைந்த முல்லைநிலத் தலைவன் தன் காதலியைத் தழுவி இனிமையோடு அமர்ந்திருத்தலை,

"மாதர் உண்கண் மகன் விளையாட
காதலித் தழீஇ இனிது இருந்தனனே
தாது ஆர் பிரசம் ஊதும்
போதுஆர் புறவின் நாடுகிழ வோனே" (ஐங்.406)

எனும் பாடல் விளக்கும். "மென்புல ஊர்களைக் கொண்ட நாட்டின் தலைவன் தன் அன்பிற்குரிய காதலியைத் தழுவி, காதலின்பத்தை நுகர்ந்து வாழ்தலை"[11] ஐங்குறுநூறு குறிப்பிடும். தலைவன் தலைவியின் அணிகலன்கள் அணிந்த மார்புகள் வருத்தமுறுமாறு முயங்கியதை,

"பூண்தாங்கு இளமுலை அணங்கியோனே" (ஐங்.250:5)

எனும் அடி விளக்கும். இதில் தலைவன் தலைவியை மார்போடு அணைத்து மகிழ்விக்கும் செயல் குறிப்பிடப்பட்டுள்ளது. தலைவியின் மார்பிலே கிடக்கும் மாலை குழையும்படித் தலைவன் முயங்குதல்,

"இடைமுலைக் கோதை குழைய முயங்கும்" (கலித்.12:13)

எனவும்,

"ஊரன் வெம்முலை அடைய முயங்கி" (ஐங்.39:1-2)

எனவும் சுட்டப்பட்டுள்ளது. இங்கு முயங்குதல் என்பது தழுவுதலையே குறிக்கும்.

“தலைவன் காற்றும் இடை நுழைய முடியாத அளவிற்குத் தலைவியை நெருக்கமாகத் தழுவுதலை”[12] ஓதலாந்தையார் புனைவர்.

தோழி இளமையின் சிறப்பையும் காமத்தின் பெருமையையும் தலைவனிடம் “நீ விரும்பிய தலைவியின் தோளில் எழுதிய தொய்யில் தருகின்ற அழகினையும் நின் வலிய மார்பிலே இவர் தழுவுதலால் பெற்ற தேமலையும் கைவிடல் ஒல்லுமாயின், நினைத்து உண்மையைக் காண்பாயாக! நீ நன்கு மதித்த பொருள் சென்றவர்கள் காலம் நீட்டிப்பச் சென்று தேடுவதன்றி முகந்துகொள்ள ஓரிடத்தே குவிந்துகிடப்பதில்லை. பொருள் தேடப்போகாதவர்கள் எல்லாம் உண்ணாமல் அழிந்துவிடுவதில்லை. இளமையும் இருவர் உள்ளத்தே ஒத்த காமத்தையும் ஒன்றாகப் பெற்றவர்கள் பொருட்செல்வத்தை விரும்புவார்களோ? இல்வாழ்க்கையாவது இவ்விரண்டும் உள்ள நாள் வரையும் ஒருவரை ஒருவர் தம்முள் தழுவியும், ஒவ்வொரு சமயம் ஒரே ஆடையை உடுப்பவராக வறுமையுற்று வாழ்ந்தாலும், அதனைப் பற்றிக் கவலை உறாது, ஒன்றிக் கலந்து பிரியாது இருப்பவர்களுடைய வாழ்க்கையே வாழ்க்கை”[13] என்றுரைக்கின்றாள். இதில் இளமை நிலையானது அல்ல என்பதைக் கூறி, பொருளீட்டலை விடுத்து, தலைவியைத் தழுவி வாழ்வியல் இன்பத்தைப் பெறுக எனக் குறிப்பிடுகிறாள்.

புனல்தரு புணர்ச்சியில் தலைவன், “தலைவியின் பூண் அணிந்த மார்பகங்கள் தன் மார்பிலே இறுக்கம் உறும்படித் தழுவி அணைத்துக்கொண்டு வந்து கரையிலே சேர்த்தனன். இதனால் தலைவனுடைய அகன்ற மார்பைத் தலைவியது எழுகின்ற முலைகள் கூடின”[14] என்றுரைப்பர் கபிலர்.

தலைவன் தலைவியது அச்சத்தைத் தெளிவிக்க அவளின் அழகிய மேனி ஒளி மேலும் பெருகுமாறு ஆரத்தழுவியதை,

"இனிப்பிறிது உண்டோ? அஞ்சல் ஓம்புஎன
அணிக்கவின் வளரமுயங்கி நெஞ்சம்" (அகநா.313:1-2)

என்ற அடிகள் சுட்டும்.

"இரவினில் பெய்த மழையினால் ஏற்படும் குளிர்ச்சியைப் போக்க தலைவன் தலைவியைத் தழுவி அவள் நலனை இனிதென நுகர்ந்தான்"[15] என்பர் பெருங்கௌசிகனார்.

தலைவன் இரவினில் வந்து தலைவியின் மார்பகங்களை வடுக்கொள்ளுமாறு தழுவிவிட்டுப்போவதை,

"நல்அகம் வடுக்கொள முயங்கி, நீ வந்து
எல்லினில் பெயர்தல்" (அகநா.100:3-4)

என உலோச்சனார் குறிப்பிடுவர்.

இங்ஙனம் தலைவன் தலைவியைத் தழுவுதலால் பெறும் மெய்யுணர்வுப் புனைவுகள் புலவர்களால் பாடப்பட்டுள்ளன.

## தலைவி தலைவனைத் தழுவுதல்

தலைவி தலைவனுக்கு நிகராகக் காதலின்பத்தை நல்குபவளாக விளங்குதலை சங்கப்புலவர்கள் பல பாடல்களில் புனைந்துள்ளனர். தலைவியொருத்தி தலைவனைத் தழுவிக் கிடக்கும் இன்பமே பெரிது என்பதைத் தலைவனுக்குக் குறிப்பால் உணர்த்த, "செய்து வைத்தாற் போல் எழுகின்ற இளமுலைகள் அழுந்துமாறு விளங்கும் தொடிகளையணிந்த முன்கை வளைந்து, பலமுறை முதுகினைச் சுற்றிக்கொள்ள நின் மார்பினைத் தழுவிக் கிடத்தலைக்காட்டிலும் எமக்கு வேறு இனிமையுண்டோ"[16] எனக் குறிப்பிடுவள்.

களவொழுக்கத்தில் தலைவியைக் கூடி இன்பம் துய்த்து மீண்ட தலைவன், அப்பேரின்பத்தை நினைத்து தன் நெஞ்சிற்குக் கூறுவதை, "திருத்தமாகச் செய்யப்பட்ட யாழ் நரம்பினின்றும் எழுகின்ற இன்னிசை போன்ற இனிய மொழிகளைக் கூறி, வட்டமான முலைக்கண்ணின் வடு உண்டாக நம்மை ஆரத்தழுவினாள்"[17] எனக் குறிப்பர் பரணர்.

தலைவி தலைவனுக்குக் கொடுக்கும் ஊற்றின்பத்தை, "தலைவியைத் தழுவும்போது கூந்தலாலும், நுதலாலும், மெய்யெங்கும் பரவியுள்ள இளமையால் கண்ணிற்கும், நறுமையால் மூக்கிற்கும், தண்ணிய நீரின் தன்மையால் வாய்க்கும், மெல்லிய சில சொற்கள் உரைத்தலால் செவிக்கும், மெல்லிய இயல்பினால் உடம்பிற்கும் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புல இன்பங்களையும் ஒருங்கே தந்தனள். அவளைத் தழுவும்போது பொறுத்தற்கரிய வருத்தத்தைத் தருபவளாக உள்ளாள்"[18] என்று தலைவி கொடுக்கும் உணர்வுகளைப் பாராட்டியுரைப்பர் ஓரம்போகியார்.

தலைவன், தலைவியைப் பிரிந்து எய்தும் பயன் எல்லாம் தலைவியைத் தழுவத்தான். தலைவியைத் தழுவுதல் நிறைவேறின், புணராது கழியும் அரைநாள் வாழ்க்கையும் விரும்பேன் என்று தலைவன் உரைப்பதை,

"பெருந்தோட் குறுமகள் சிறுமெல்ஆகம்
ஒரு நாள் புணரப் புணரின்
அரை நாள் வாழ்க்கையும் வேண்டலன் யானே" (குறுந்.280:3-5)

என நக்கீரர் சுட்டுவர்.

"வயல்கள் நிறைந்த ஊரையுடைய தலைவனுடைய மார்பினை இறுகத் தழுவிய பின்னரும், தேமல்படர்ந்த அல்குலையுடைய தலைவி

பசலைகொண்டு வருந்துவதை ஓரம்போகியார் உரைப்பர்."[19] தலைவன் மார்பைத் தழுவினால் தலைவியது பசலை நீங்குவது இயல்பு. ஆனால் தலைவியின் பசலை நீங்காததற்குக் காரணம் தன் காதலனாகிய தலைவனின் மார்பை இடையறாது தழுவி இன்புற இயலாமையே காரணமாகும்.

தலைவி அலரால் உள்ளம் நடுங்குதற்குக் காரணமான துன்பம் தீரும்படி தலைவனது மார்பைக் குளிரத் தழுவிப் பொருந்திக் கிடப்பதை,

"நடுங்கு அஞர் தீர முயங்கி நெருநல்
ஆகம் அடைந்தோளே" (அகநா.62:11-12)

எனும் அடிகளில் பரணர் சுட்டுவர்.

ஆயமகள் ஒருத்தி தன் காதலனை, "கொலைத் தன்மை கொண்ட ஏறுகள் குத்தியதால் ஏற்பட்ட புண்களைத் தழுவித் தழுவி முலையின் வெம்மையாலே ஆற்றி, கொலைத்தன்மைக் கொண்ட ஏறுகளைத் தழுவியவனுடைய உடம்பிலிருந்து வழிகின்ற குருதி தன்னுடலில் கலக்குமாறு தழுவுதல் தன்னுடைய தோளிற்கு அழகு என்று உரைப்பதை" கலித்தொகை சுட்டும்.

தலைவனின் வரவை அறிந்த தலைவி, அதுவரை நீராட்டாத கூந்தலை மாசு நீங்கும்படியாகக் கழுவி, மலர் கொண்டு அலங்கரித்தாள். அத்தறுவாயில் தலைவன் உள்ளே புகுவதை நோக்கி தலைவி தன் மெய்வருந்தும்படி வந்து குழல் அவிழ்ந்து குழைய அணைத்துக் கொள்ளும் செயலை,

"மண்ணாக் கூந்தல் மாசுஅறக் கழீஇ
சில் போது கொண்டு பல்குரல் அழுத்திய

அந்நிலை புகுதலின் மெய்வருந்துறாஅ

அவிழ்பூ முடியினள் கவைஇய

மடமா அரிவை மகிழ்ந்து அயர் நிலையே" (நற்.42:8-12)

எனக் கீரத்தனார் சுட்டுவர்.

## தலைவி உயிர்ப்புதல்

உயிர்ப்புதல் என்பது பெருமூச்சு விடுதல், தலைவனைப் பிரிந்த தலைவி பெருமூச்சுவிடுதலை,

"புள்ளுப் பதி சேரினும் புணர்ந்தோர்க் காணினும்

பள்ளி யானையின் வெய்ய உயிரினை" (நற்.253:1-2)

எனக் கபிலர் எடுத்துரைப்பர். இதில் துன்பத்தினால் தலைவி அடைந்த மெய்யுணர்வு சுட்டப்பட்டுள்ளது.

மேற்சுட்டியவற்றால் தலைவன் தலைவி ஆகிய இருவரும் ஒருவரை ஒருவர் தழுவுவதால் பெறும் ஊற்றின்பம் புலவர்களால் நுட்பமாக உரைக்கப்பட்டுள்ளமை புலனாகும்.

## கவவுதல்

கவவுதல் என்பது தழுவலிலே நெருக்கமான தழுவுதலையும், புணர்ச்சியையும் குறிக்கும். காதலரைக்கூடி மகிழும் மகளிர் காதலர் அணைத்த கையை நெகிழவிடாது பின்னிக்கிடப்பதை,

"காதலர் புணர்ந்தவர் கவவுக் கை நெகிழாது" (கலித்.33:7)

என்ற அடிகள் சுட்டும். தலைவி கண்களில் கண்ணீர் மல்க முயங்கியதை,

"கண் நிலா நீர் மல்கக் கலவி" (கலித்.35:11)

எனும் அடிகள் குறிப்பிடும்.

"இரவுப்பொழுதிலே தொடியால் பொலிவுபெற்ற தோள்களும், முலையும், கூந்தலும் உடைய தலைவி தலைவனது முயக்கத்தாலே அடிதளர்ந்திருத்தலை"[21] மருதன் இளநாகனார் குறிப்பிடுவர்.

**முயங்குதல்**

முயங்குதல் என்பது தழுவலையும், புணர்ச்சியையும் குறிக்கும். இல்லற வாழ்க்கையில் கணவனும் மனைவியும் கூடிப் பெறும் இன்பமே முயங்குதல். அகநானூற்றில் தலைவி, தலைவனிடம் ஊடல் தீர்ந்த விதத்தைத் தோழியிடம், "நம் தலைவர், கரிய கண்களையுடைய எனது முலைகள் தம் மார்பகம் முழுவதும் அழுந்தப் பொருந்துமாறு என்னைத் தழுவுதலினின்றும் விலகற்க என்று கூறி முயங்குவர். யான் வருந்தி இங்ஙனம் முயங்குதலை விட்டொழிக எனக் கூறியும் அதற்கு உடம்படாதவனாகி பின்னரும் என் மார்பகங்களைப் பலபடப் பாராட்டி முயங்குவன்"[30] என உரைப்பள். மேலும் தலைவனின் காமநோயாகிய வருத்தம் நீங்குமாறு தலைவி தலைவனை இடைவிடாது முயங்குதலை,

"நோய் அசா வீட முயங்கினள்" (அகநா.162:16)

என்ற அடிகள் சுட்டும். ஊர் உறங்கும் நள்ளிரவில் தலைவனைத் தழுவி மகிழ்ந்து செல்லும் தலைவியை,

"துஞ்சுஊர் யாமத்து முயங்கினள், பெயர்வோள்" (அகநா.198:11)

எனப் பரணர் குறிப்பிடுவர்.

தலைவியொருத்தி தலைவனிடம் பெற்ற இன்பத்தை, என்னால் விரும்பப்பட்ட மணங்கமழும் மாலையணிந்த எம் தலைவரது அமிழ்தம் போன்ற மார்பகத்து இடைப்பட்ட வண்டுகள் நீங்குமாறு இன்று யான் பெற்ற செறிந்த முயக்கமும், நீங்காத காதலும் முதல்நாளில் பெற்றது

போன்றே அமையக்காண்கின்றேன் என்பதை,

> "வேட்டோர்க்கு, அமிழ்தத்து அன்ன கமழ்தார் மார்பின்
> வண்டுஇடைப் படாஅ முயக்கமும்
> தண்டாக் காதலும், தலைநாள் போன்மே" (அகநா.332:13-15)

எனக் கபிலர் உரைப்பர்.

இரவு நேரத்து ஏதம் அஞ்சாது வந்த தலைவன் "தலைவியின் முலையிடைப் பொருந்தி அவள் வருத்தத்தைப் போக்கினன். அவளது ஆகத்தை ஆரத்தழுவி அகமகிழ்ந்தான். இன்பம் பொங்க அவன் முயங்கிய முயக்கம், அவன் சூழ்கின்ற காரியம் எத்தன்மையது என்பதைத் தெளிவாக்கும்"[23] என்பர் மதுரை இளந்தேவனார்.

தனக்கும் தலைவனுக்குமிடையே புணர்ச்சி நிகழ்ந்தமையைத் தலைவி, "தலைவன், நரந்தம் பூவின் மணம் நாறும் கரிய கூந்தலை ஒழியாமல் மிகவும் பற்றினன் ; அதிலே கட்டின பற்றமைந்த மாலையை விரலாலே முறையாகச் சுற்றி அதனை மோந்துபார்த்தனன் ; அது மட்டுமன்றி, நரவம்பூ மலர்ந்தாற்போன்ற என் மெல்லிய விரல்களை உடைய கைகளைத் தாங்கிக் கொண்டு, தன் சிவந்த கண்மறையும்படி நெட்டுயிர்ப்புச் செய்தன் ; தொய்யில் எழுதிய என் இளமுலைகளை இனிதாகத் தடவினன் ; தொய்யில் கொணர்ந்த தன் அழகிய அகன்ற கையால், தன் பிடியை மையல்கொண்டு தழுவும் களிறு போல என்மேனி முழுவதும் தடவினான் ; என்னை அவன் வசமாக்கி மயக்கியும்விட்டான். அச்செயலாலே தோழீ யான் காமவாதையால் பட்ட துன்பத்தையும் போக்கினான்"[24] எனத் தோழியிடம் உரைப்பள்.

பரிபாடலில் "மகளிர் முலைகளில் அணிந்த அணிகளும், அவர்தம் காதலர் மார்புகளில் அணிந்த அணிகளும் அவர்களிருவரும்

தழுவும்போது கூடியதை, "முலையும் மார்பும் முயங்கு அணி மயங்க" (பரி.6:20) என்ற அடிகள் சுட்டும்.

## புணர்ச்சிப் புனைவுகள்

"புணர்ச்சிப் பெருக்கத்திற்கு ஊடற்கிளர்ச்சி வேண்டும். தொடுதல், மோத்தல், கேட்டல், பார்த்தல், சுவைத்தல் என்ற ஐம்புலச் செய்கைகள் மென்மெல இன்ப அலைகளை மனக்கடலில் உண்டாக்கும். உயர்ந்தெழச் செய்யும். புணருஞ் செய்கைக்கு முன்னே அதனை உணரும் இன்ப எண்ணங்கள் தழைக்க வேண்டும். காமச் சொற்கள் கனிய வேண்டும் என்ற முன்னிலைக் கூறுகளை அகத்திணைகண்ட தமிழினம் நன்றாக அறிந்திருந்தது"[25] என தமிழ்க்காதல் குறிப்பிடும். கற்பியல் வாழ்வில் கணவன் மனைவியின் பகற்புணர்ச்சியை,

"சாந்து ஆர் கூந்தல் உளரி, போது அணிந்து,
தேம்கமழ் திருநுதல் திலகம் தைஇயும்
பல்இதழ் எதிர்மலர் கிள்ளி வேறுபட
நல்இள வனமுலை அல்லியொடு அப்பியும்
பெருந்தோள் தொய்யில் வரித்தும், சிறுபரட்டு
அம்செஞ் சீறடிப் பஞ்சி ஊட்டியும்
எற்புறந் தந்து நிற்பா ராட்டி
பல்பூஞ் சேக்கையின் பகலும் நீங்கார்
மனைவயின் இருப்பவர் மன்னே" (அகநா.389:2-10)

என்று நக்கீரர் சுட்டுவர். தலைவன் தலைவியின் கூந்தலை வாரிப் புதுமலர் அணிந்தான். நுதலில் பொட்டு வைத்தான். சாந்தணிந்த வண்ண மார்பில் பல இதழ்களையும் மலர்களையும் அப்பினான். பரந்த தோளில் காதற் காட்சிகளை வரைந்தான். சிறிய அடிகளைத் தொட்டுத் தூக்கிச்

செம்பஞ்சுக் குழம்பு தடவினான். பலவாறு தழுவி அணைத்து மெத்தென்ற பூப்படுக்கையில் பகற்காலத்தும் கூட்டுறவு நீங்காதவனாய்க் கிடந்தான் என்ற முறையில் முடிமுதல் அடிவரை தலைமகன் புணர்ச்சிக்குமுன் செய்த செயல்கள் புணர்ச்சி இன்பத்திற்குத் துணைநிற்றலை விளக்கும்.

தலைவியோடு புணர்தலை இடைச்சுரத்தின்கண் வரும் தலைவன் நினைத்துப் பார்த்தலை "பல்வேறு பூக்களைக் கூடை கூடையாகக் கூந்தலில் சூடி, மெல்லிய இனிய உயரமான பூக்கட்டிலின்கண் அமர்ந்திருந்து தலைவியின் மார்பணிகள் தழும்பு செய்யுமளவிற்கு விளக்கொளியில் அவளை முயங்குவோம்"[26] என்றுரைப்பர் நக்கீரர். இதில் வீடு திரும்பும் காலம் மாலைக்காலம் ஆதலின் இரவுக் கூட்டுறவைத் தலைவன் நினைக்கின்றான்.

நாகங்கள் காம இன்பத்தை அனுபவிக்க தொடர்ந்து இறுகப்புணரும் இயல்புடையது. இதேபோல் வையையில் நீராடவந்த மைந்தர்களும் மகளிரும் நாகரைப்போல தடையின்றித் தொடர்ந்து இறுக்கமாகத் தழுவிக்கொண்டு கூடியதை"[27] பரிபாடல் உரைக்கும். புணர்ச்சியில் பாம்பின் புணர்ச்சி சிறப்பாகக் கூறப்படும். இது பரிபாடலில் மனிதர்கட்கு ஏற்றி உரைக்கப்பட்டுள்ளது.

## பரத்தை தலைவன் மாட்டு நிகழும் மெய்யுணர்வு

பரத்தையர் தலைவனுக்கு காதலின்பத்தைத் தரக்கூடியவர்கள். தலைவன் தலைவியிடம் மட்டுமல்லாது பரத்தையருடனும் காதலின்பத்தை நுகர்வதுண்டு. இதனை அக இலக்கியங்கள் பெரிதும் உரைக்கின்றன. தலைவன் பரத்தையரைத் தழுவிப் புனலாடுவதை,

"அலமரல் ஆயமோடு அமர்துணை தழீஇய
நலம் மிகு புதுப்புனல் ஆட" (ஐங்.64:1-2)

"சூதுஆர் குறுந் தொடிச் சூர்அமை நுடக்கத்து

நின் வெம் காதலி தழீஇ, பொருநை நெருநை

ஆடினை என்ப புனலே" (ஐங்.71:1-3)

என்பன போன்ற அடிகள் விளக்கும். மேலையடிகளில் பரத்தையைத் தழுவி இன்பம் நுகர்தல் சுட்டப்பட்டுள்ளது.

பரத்தையொருத்தி தலைவன் பெற்ற காதலின்பத்தை "நம் தலைவன் விரும்பத்தக்க முலைகளைத் தன் மார்போடு நன்கு பொருந்துமாறு அணைத்துப் பின் நம்மிடமிருந்து பிரிந்தான். இங்ஙனம் பிரிந்ததால் எனது பருத்த தோள்கள் மெலிவுற்றன"[28] என இயம்புகிறாள்.

தலைவனைப் பரத்தையர், தம் முலைகள் பொருந்தத் தழுவினர். இதனால் அவர்தம் உச்சியிலிருந்து படிந்த பூந்துகள் அவன் ஆடையிலே சிதறிக்கிடப்பதை,

"முதிர்பூண் முலை பொருத ஏதிலாள் முச்சி

உகிர் துகள் உக்கநின் ஆடைஒலிப்ப" (கலித்.81:30-31)

எனத் தலைவி உரைப்பள். தலைவனைப் பரத்தையர் முயங்கியதால் தலைவி அவனோடு ஊடல் கொண்டு இங்ஙனம் உரைக்கின்றாள். மேலும் "புள்ளிகளையுடைய நண்டுகள் நடந்த தடங்கள் நீர்க்கரையிலே தோன்றுவதுபோல தலைவன் பரத்தையைப் புணர்ந்ததால், அவன் மேனியெங்கும் பெரிய நகங்கள் கீறிய வடுக்களும், பற்கள் பதிந்த குறிகளும், பூவிதழ்கள் உதிர்ந்த கண்ணியும், அவள் சினந்து அடித்தலால் உண்டான சிவந்த மார்புமாக"[29] காட்சியளித்தலைக் கலித்தொகை சுட்டும். இவ்வாறு தலைவனுக்குப் பரத்தையின் மூலம் கிடைக்கும் ஊற்றின்ப உணர்வுகள் புனையப்பட்டுள்ளன.

## தாய் தலைவியை முயங்குதல்

தாயர் தம் மக்களை அணைத்துக்கொண்டு துயில்வது அன்பினாலும், பாதுகாப்பு உணர்வினாலுமாகும். இதனையே சங்ககாலச் செவிலித்தாயும், நற்றாயும் செய்துள்ளனர். "தன்னுடைய முதுகுப்புறம் படுத்து உறங்கிக்கிடந்த தலைவியைப் பெயர்த்து, மார்புப்பகுதியால் முன்புறம் தழுவி உறங்கச் செய்த செவிலியைக்"[30] குறுந்தொகை குறிப்பிடும்.

தாய் ஒருத்தி தலைவியின் பின்னல் தாழ்ந்துள்ள கழுத்தின் பின்பகுதியைத் தழுவி அணைத்தலால் அழகிய இமைகள் மூடாத கண்களோடு தலைவி துயிலின்றி இருத்தலை,

"பின்னுவீழ் சிறுபுறம் தழீஇ

அன்னை முயங்கத் துயில் இன்னாதே" (குறுந்.353:6-7)

என உறையூர் முதுகூத்தன் சுட்டுவர். மேற்சுட்டியவற்றால் தலைவி, தாயின் தழுவலைவிட தலைவனின் தழுவலையே விரும்பியமை பெறப்படும்.

## தலைவனும் தலைவியும் புதல்வனைத் தழுவிக்கிடத்தல்

செல்வத்துள் சிறந்த செல்வமாகப் போற்றப்படுவது குழந்தைச் செல்வமாகும். குழந்தையின் நடை, சிரிப்பு போன்றவற்றை விரும்பாதவர்களே இல்லை. இக்குழந்தைச் செல்வத்தின் சிறப்பை,

"படைப்பு பல படைத்து பலரோடுண்ணும்

உடைப் பெருஞ் செல்வராயினும்

குறுகுறு நடந்து சிறுகை நீட்டி

இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்

நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்

மயக்குறு மக்களை இல்லோர்க்கு

பயக்குறை இல்லை தாம் வாழும் நாளே" (புறநா.188)

எனப் பாண்டியன் அறிவுடை நம்பி சுட்டுவர். இத்தகு அன்புடைய மக்களைப் பெற்றோர்தம் குழந்தையைத் தழுவலும் மெய்யுணர்வில் அடங்கும். "ஒரு மாலைப்பொழுதில் பசிய நிலவொளியில் குறிய கால்களையுடைய கட்டிற்கண் விரிக்கப்பட்ட மணங்கமழும் மலர்ப்படுக்கையில் தலைவன், தன்னுடைய புதல்வனைத் தழுவிக்கிடந்தான். புதல்வனின் தாயாகிய தலைவி புதல்வனைத் தழுவிக்கிடக்கும் தன் கணவனின் புறத்தைக் கையகத்து வளைத்துக்கொண்டதை"[31] ஐங்குறுநூறு குறிப்பிடும்.

"தன்புதல்வனை மார்புற அணைத்துக்கிடந்த தாயின் புறத்தை அன்புடன் தழுவி, அவள் கணவன் விருப்பமுடையவனாய்த் தங்கிய கிடக்கை, பாணர் யாழின் நரம்பில் தோன்றும் இசையைப் போல இனிமையுடையது நல்ல பண்பினையுடையதாகும்"[31] என்பர் பேயனார்.

கணவன், மனைவி, குழந்தை ஆகிய மூவரும் தூய அன்பிலே முழுகி, தழுவிக்கிடத்தலை,

"புதல்வற் கவைஇயினன் தந்தை, மென் மொழிப்

புதல்வன் தாயோ இருவரும் கவைஇயினள்

இனிதுமன்ற அவர்கிடக்கை

நனி இரும்பரப்பின் இவ்உலகுடன் உறுமே" (ஐங்.409)

என்ற பாடல் விளக்கும். புதல்வன் மீதும், தன் கணவன் மீதும் தனக்குள்ள பேரன்பை வெளிப்படுத்த, தலைவி இருவரையும் தழுவியமை மெய்யுணர்வு வெளிப்பாட்டின் சிறந்த படிநிலையாகும்.

## இயற்கை தரும் ஊற்றுணர்வு

*சங்க இலக்கியத்தில் இயற்கை தரும் ஊற்றுணர்வாக, தண், பனி, ஈர், சுரம், தீ போன்ற உணர்வுகள் சுட்டடப்பட்டுள்ளன.*

## தண்

*தண் என்பது குளிர்ச்சியைக் குறிக்கும். இயற்கைப் பொருள்களில் உடலுக்கு அதிக அளவில் உணர்வினைத் தருவது குளிர்ச்சியே. அதனாலேயே சங்கப் புலவர்களும் 'தண்' என்பதை தண்துறை, தண் கலிழ், தண் அருவி, தண் கயம், தண்கடல், தண் அறல், தண்கார், தண் எழிலி, தண்துளி, தண் பொழில், தண்கா, தண்பொதும்பு, தண் புதல், தண் கானம், தண் மலை, தண்மலர்கள், தண்தார், தண் தளிர், தண் மாவடு, தண் முழவு, தண் மண், தண் பழனம், தண் புலம், தண் மனை, தண்சேறு, தண் புறவு, தண் பாக்கம், தண்குடவாயில், தண்பரங்குன்றம், தண்சாய்க் கானம் (ஊர்), தண் கொல்லி, தண் சேர்ப்பு, தண் புலர், தண் வேனில், தண் வாடை, தண் பந்தர், தண் சாந்தம், தண் எருமை, தண் நிழல், தண்ணிய தலைவன், தண் தலைவி, தண் கூந்தல், தண் துவர், தண் ஆடை, தண் மார்பு, தண் பணை, தண் நுதல், தண் மழைக்கண் எனப் பலவற்றோடு இணைத்துக் கூறியுள்ளனர்.*

## தண்துறை

*துறை - நீர்த்துறை. நீர்த்துறை குளிர்ச்சியுடன் காணப்படுவதால் தண்துறை என வழங்கப்பட்டுள்ளது. குவளையும் நெய்தலும் மலரும் குளிர்ந்த நீர்த்துறையை,*

*"பல்லிதழ் நீலமொடு நெய்தல் நிகர்க்கும்*
*தண்துறை" (ஐங்.2:4-5)*

*என்ற அடிகள் விளக்கும். நீரின் ஆழமான பகுதியே அதிக குளிர்ச்சியாகக்*

காணப்படும். அதனாலேயே "முதலைப் போத்து முழுமீன் ஆரும் தண்துறை" (ஐங்.5:4-5) என ஐங்குறுநூறு குறித்துள்ளது. வயல் சூழ்ந்துள்ள பகுதியில் உள்ள துறையை "கழனிஅம்துறை" (கலித்.79:6) எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது. வயல்களுக்கு நடுவில் அமைந்துள்ள நீர்த்துறை, வயல்களின் ஈரத்தன்மையினாலும் நீரின் அளவு அதிகமாக இருப்பதாலும் குளிர்ச்சியாகக் காணப்படும் செய்தி இதில் எடுத்துரைக்கப்படுகிறது.

### தண் கலிழ்

'கலிழ்' என்பது கலங்கல் நீரைக் குறிக்கும். கூதிர் காலத்தில் நீர் கலங்கியும், குளிர்ச்சி பொருந்திய தன்மையுடனும் காணப்படுவதை,

"கூதிர் ஆயின் தண் கலிழ் தந்து" (ஐங்.45:1)

என்பர் ஓரம்போகியார். "கூதிராவது அறுவகை பொழுதுகளில் ஒன்று. ஐப்பசியும் கார்த்திகையும் அதற்குரிய காலப்பொழுதாகும்"[33] இக்காலத்திற்குரிய நீர் கலங்கியும், குளிர்ந்தும் இருத்தலின் தண் கலிழ் எனச் சுட்டப்பட்டுள்ளது.

### தண் அருவி

அருவி, புனல், ஆறு போன்றவை குளிர்ந்த தன்மையினால் 'தண்' என வழங்கப்பட்டுள்ளன. இதனை, "தண் அருவி" (கலித்.32:16), "தண் பொருநை" (ஐங்.69:3), "தண் காவேரி" (அகநா.76:12), "தண் நீர்" (அகநா.34:2) என்பன போன்ற அடிகள் விளக்கும்.

### தண் கயம்

கயம் என்பதற்கு "பெருமை, மென்மை, கீழ்கை, நீர்நிலை, குளம், மடு, ஆழம், குறைவு, கேடு, யானை போன்ற பொருட்களைச்

சுட்டியுள்ளது"[34] வெற்றி தமிழ் அகராதி. சங்க இலக்கியத்தில் 'கயம்' என்பது நீர்நிலைகளைக் குறித்துள்ளது. நெடிய கரைகளைக் கொண்ட காட்டாற்றின் வேகம் மிக்க பெருவெள்ளம், அற்றுப்போன காலத்தில் அகன்ற நீர்த்துறைகள் அறல்ஆகும் தன்மையினைக் கொண்ட பரந்த மணலையுடையனவாயின. அத்துறையிடத்தேயுள்ள குளிர்ந்த மடுக்களை,

"நெடுங் கரைக் கான்யாற்றுக் கடும் புனல் சாஅய்
அவிர் அறல் கொண்ட விரவு மணல் அகன்துறைத்
தண் கயம்..." (அகநா.25:1-3)

என்ற அடிகள் விளக்கும். இதில் கயம் என்பது ஆற்றின் குளிர்ந்த பள்ளத்தைக் குறித்துள்ளது.

### தண்கடல்

கடல் அதன்குளிர்ந்த தன்மையால், "தண் கடல் வலையினும்" (ஐங்.106:3), "தண் பெரும் பௌவம்" (குறுந்.164:4), "தண் பெரும் பரப்பின் ஒண் பதம் நோக்கி" (நற்.4:3) எனக் குறிக்கப்பட்டுள்ளது.

### தண் அறல்

அறல் என்பதற்கு "கருமணல், நீர், புனல், திரை, அரித்தோடுதல், சிறுதூறு, நெறி போன்ற பொருளுண்டு"[35] சங்க இலக்கியத்தில் வெண்காந்தளின் பசுமையான பயிரோடு அறுகங்கிழங்கையும் தின்று தெவிட்டிய ஆண்மான், தன் பெண் மானோடு, குளிர்ந்த நீரினைப் பருகுவதை,

"கோடு உடைந்தன்ன கோடற் பைம் பயிர்
பதவின் பாவை முனைஇ மதவு நடை
அண்ணல் இரலை அமர்பிணை தழீஇ
தண்அறல் பருகித் தாழ்ந்துபட்டனவே" (அகநா.23:6-9)

எனும் அடிகள் விளக்கும். இங்கு தண்அறல் என்பது குளிர்ந்த நீரினைக் குறித்துள்ளது.

### தண்கார்

கார் என்பது கருமையான மழை மேகத்தைக் குறிக்கும். குறுந்தொகையில், "தளிதரு தண் கார்" (குறுந்.65:3) என, குளிர்ச்சியைத் தரும் மேகம் சுட்டப்பட்டுள்ளது. கார் என்பது கார் காலத்தையும் குறிக்கும். "துணைப் பயிர்ந்து அகவும் துணைதரு தண் கார்" (அகநா.85:13) என்பதில் கார்காலம் துணைகள் சேர்வதற்கு இதமான குளிர்ச்சியுடன் இருத்தல் சுட்டப்பட்டுள்ளது.

### தண் எழிலி

'எழிலி' என்பது இடியினைக் குறிக்கும். மழை, குளிர்ச்சி பொருந்தியதால், தண் என்னும் குளிர்ச்சியைக் குறிக்கும் சொல், இடிக்கு ஆகுபெயராகி வந்திற்று. சங்க இலக்கியத்தில் "தண்எழிலி" (அகநா.43:8, நற்.362:3) ஈரிடங்களில் இடம்பெற்றுள்ளது.

### தண்துளி

மழை, பெயல், துளி, சிதர், மாரி, சாரல் போன்றவை சங்க இலக்கியத்தில் 'தண்ணி'யதைக் குறிப்பதாகும். இதனை,

"தண் மழை தழீஇய மாமலை நாட" (ஐங்.292:2)

"மண்கண் குளிர்ப்ப, வீசித் தண் பெயல்" (அகநா.23:1)

"துவலைத் தண்துளி வீசி" (ஐங்.141:2)

"ஒண்பொறி எருத்தில் தண்சிதர் உரைப்பப்" (குறுந்.242:2)

"பெருந்தண் மாரிப்பேதைப் பித்திகத்து" (குறுந்.94:1)

"நறுந்தண் சாரல் ஆடுகம் வருகோ" (நற்.204:4)

என்பன போன்ற அடிகள் விளக்கும்.

## தண் பொழில்

'பொழில்' என்பது சோலையைக் குறிக்கும். சோலையில் மரங்கள், செடிகொடிகள் இருப்பதால் குளிர்ச்சியாகக் காணப்படும். பொழில் தலைவனோடு கூடிய பெண்களின் உடல்கள் மணப்பதுபோல மணப்பதை,

"எக்கர் மாஅத்துப் புதுப்பூம் பெருஞ்சினை

புணர்ந்தார் மெய்ம் மணம் கமழும் தண்பொழில்" (ஐங்.19:1-2)

என ஐங்குறுநூறு குறிப்பிடும். பொழில் ஊற்றுணர்வோடு உவமிக்கப்பட்டுள்ளமை சுட்டத்தக்கது.

## தண்கா

அசோக மரங்கள் நிறைந்த குளிர்ந்த சோலை,

"பொழி பெயல் வண்மையான் அசோகம் தண் காவினுள்"

(கலித்.57:12)

என்றும், மலர்கள் நிறைந்த குளிர்ந்த சோலை,

"இணர்ததை தண்கா" (கலித்.69:6)

என்றும் புலவர்களால் சுட்டப்பெற்றுள்ளது.

## பொதும்பு

பொதும்பு என்பதற்கு "சோலை, மரக்காடு, மரப்பொந்து, குகை"[36] என விளக்கம் தருகிறது வெற்றி தமிழ் அகராதி. "ஆற்றை ஒட்டிய கரையில் மாமரங்களின் கிளைகள் தளிர் மிகுந்து அழகுறக் குளிர்ச்சியுடன் விளங்குவதை பாலைபாடிய பெருங்கடுங்கோ சுட்டுவர்."[37]

## தண் புதல்

நீல மணியால் செய்தது போன்ற கரிய நிறமுடைய காக்கணங்கொடி, ஒளியுடன் விளங்கும் காந்தளுடன் சேர்ந்து மலர்ந்து புதர்க்குக் குளிர்ச்சி

தருதலை,

"மணிகண்டன்ன மாநிறக் கருவிளை

ஒண் பூந் தோன்றியொடு தண் புதல் அணிய" (நற்.221:1-2)

எனும் அடிகள் விளக்கும். மேலும் முல்லைக் கொடியின் தேன் மணக்கும் பசிய மலர்கள் யாவும் நல்ல யானையின் புள்ளிகளும் வரிகளும் அமைந்த புகர் முகம் போல மெல்லிய புதர் தோறும் அழகுற மலர்வதை,

"சிறுவீ முல்லைத் தேம் கமழ் பசுவீ

பொறிவரி நல்மான் புகர் முகம் கடுப்ப

தண்புதல் அணிபெற மலர வண்பெயல்" (நற்.248:1-3)

எனும் பாடலடிகள் குறிப்பிடும்.

## தண் கானல்

கழுவப்படாத முத்துக்கள் அரும்பியிருக்கும் புன்னை மரங்களையுடைய குளிர்ந்த நறுமணங் கமழும் கடற்கரைச் சோலையை,

"மண்ணா முத்தம் அரும்பிய புன்னைத்

தண் நறுங் கானல் வந்து" (அகநா.30:13-14)

எனும் அடிகள் விளக்கும்.

## தண் மலை

மலைகளில் மரங்களும், செடிகொடிகளும் அதிகமாகக் காணப்படுவதாலும், அருவிகள் ஓடிக்கொண்டிருப்பதாலும் அவை எப்பொழுதும் குளிர்ச்சியாகக் காணப்படும். இதனால் புலவர்கள் மலையைத் 'தண்மலை' எனக் குறிப்பிட்டுள்ளனர். காந்தள் மலர்கள் அதிகம் காணப்படும் குளிர்ச்சி பொருந்திய மலையினை,

*"நறுந்தண் சிலம்பின் நாறு குலைக் காந்தள்" (ஐங்.26:2)*

*என்றும், அருவியினால் குளிர்ச்சி பொருந்திய மலையினை,*

*"மாஅல் அருவி தண் பெருஞ் சிலம்ப" (ஐங்.238:3)*

*என்றும் கபிலர் குறிப்பிடுவர். கோடை காலத்தின் வெம்மையைத் தணிக்க குளிர்ச்சி பொருந்திய மலையை, யானை நாடிச் செல்வதை,*

*"தணிவு இல் வெங்கோடைக்கு தண்நயந்து அணிக் கொள்ளும்" (கலித்.20:3)*

*எனக் கலித்தொகை குறிப்பிடும். கோடைக்குச் சிறந்த வசிப்பிடங்களாக மலைகள் விளங்குகின்றன.*

*தேன் உண்ணும் வண்டினங்கள் அஞ்சி, எழுந்து ஆராவரிக்கும்படி கல் என்னும் ஒலியுடன் மலையினின்றும் ஓடிவரும் அருவியானது சந்தன மரத்தில் வீழ்ந்து அதனைத் தட்பமுற நனைத்திடும். அத்தகைய குளிர்ச்சி பொருந்திய பக்கமலையினை,*

*"பிரசப் பல்கிளை ஆர்ப்ப, கல்லென*
*வரைஇழி அருவி ஆரம் தீண்டித்*
*தண்ணென நனைக்கும் நளிர் மலைச்சிலம்பில்" (அகநா.228:1-3)*

*எனப் புலவர்கள் புனைவர்.*

### தண்மலர்கள்

*சங்க இலக்கியத்தில், மலர் (ஐங்.176:2) தழை (ஐங்.147:3), போது (கலித்.17:15), முகை (அகநா.136:17), தாது (நற்.1:3), குவளை (ஐங்.73:3-4), நெய்தல் (ஐங்.190:1), கொன்றை (ஐங்.458:2), கோங்கு (ஐங்.370:1), பிடவம் (கலித்.102:2), செண்பகம் (கலித்.150:21), தாழை (கலித்.131:9), செங்காந்தள் (அகநா.59:14), புன்னை (அகநா.80:12), முல்லை (அகநா.94:6), பாதிரி (அகநா.99:6), நீலம் (அகநா.143:15), கழி*

*(அகநா.150:11), கோடல் (அகநா.154:7), பகன்றை (அகநா.255:11), வேங்கை (அகநா.365:14), ஆம்பல் (நற்.230:3), ஞாழல் (குறுந்.310:6), அறுகு (குறுந்.104:3) போன்றவை குளிர்ச்சியையுடைய மலர்களாகத் 'தண்' என்னும் அடையுடன் சுட்டப்பட்டுள்ளன.*

## தண்தார்

*தார் என்பது மாலை. மாலை குளிர்ச்சியையுடையது. நீண்ட மணமுடைய குளிர்ந்த புன்னை மலர்களால் ஆன மாலை "நீள் நாக நறுந்தண் தார்" (கலித்.39:3) எனக் குறிக்கப்பெற்றுள்ளது.*

## தண் தளிர்

*செடிகளின் மெல்லிய கொழுந்து குளிர்ச்சியுடையதால் "தண்தளிர்" (ஐங்.38:4, கலித்.77:18) என வழங்கப்பட்டுள்ளது.*

## தண் மாவடு

*நறுமணம் மிக்க மாமரத்தினின்றும், காம்பு இற்று வீழ்ந்த ஈரமான குளிர்ந்த பெரிய வடுக்களை, குறவர்கள் திரட்டியதை,*

*"நறுவடி மாஅத்து மூக்கு இறுபு உதிர்த்த*
*ஈர்ந் தண் பெருவடு பாலையில் குறவர்" (ஐங்.213:1-2)*

*எனும் அடிகள் விளக்கும். இதில் மாவடுவின் குளிர்ச்சி உரைக்கப்பட்டுள்ளது.*

## தண் முழவு

*முழவு ஈரமும் குளிர்ச்சியும் உடையதாக இருத்தல் (அகநா.186:11) "முரசு" குளிர்ந்திருத்தல் (குறுந்.365:4) போன்றவையும் புலவர்களால் சுட்டப்பட்டுள்ளன.*

**தண் மண்**

மண், பழனம், சுரம், கானம், புலம், வளி, மனை போன்றவை குளிர்ச்சியுடன் இருத்தலை அகப்பாடல்கள் எடுத்தியம்புகின்றன. "நண்டு செந்நெல்லைக் கொய்து கொண்டு, குளிர்ச்சி பொருந்திய உள்ளிடத்தையுடைய தண்மண் வலைக்குள் செல்வதை ஐங்குறுநூறு சுட்டும்."[38]

**தண் பழனம்**

பழனம் என்பது ஊர்ப் பொது நிலத்தைக் குறிப்பிடும். மென்மையான நெற்றியையுடைய கம்புட்கோழியின் அரித்த குரல் கொண்ட பெட்டை, குளிர்ந்ததும் நறுமணம் மிக்கதுமான ஊர்ப் பொது நிலத்தில் கூடியிருப்பதை,

"வெண்நுதற் கம்புள் அரிக்குரற் பேடை
தண் நறும் பழனத்துக் கிளையோடு ஆலும்" (ஐங்.85:1-2)

எனும் அடிகள் விளக்கும்.

**தண் புலம்**

மழை பெய்தலால் குளிர்ந்த நிலத்தை "தளிபெறு தண் புலம்" (கலித்.101:1) எனச் சுட்டும் கலித்தொகை.

**தண் மனை**

செழுமையும், குளிர்ச்சியும் பொருந்திய மனையை "செழுந்தண் மனை" (நற்.71:3) என நற்றிணை குறிப்பிடும்.

**தண்சேறு**

'சேறு' குளிர்ந்த தன்மையையுடையதால் "தண் சேறு" எனப் (ஐங்.28:2, அகநா.360:4, நற்.8:7) புலவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

## தண் புறவு

புறவு என்பது முல்லை நிலத்தைக் குறிக்கும். காடும் காடுசார்ந்த பகுதியும் முல்லை நிலமாகும். அடர்ந்த வனப்பகுதி எப்பொழுதும் குளிர்ச்சியுடையதாக இருப்பதால் தண் புறவு என வழங்கப்பட்டுள்ளது. "வண்டுகள் பூந்தாதினை உண்டு மகிழ, தேரைகள் ஆராவரிக்க, தண்ணியநறுமணம் வீசும் புறவினிடத்தே முல்லை மலர்ந்து இன்பமூட்டுவதை"[39] பேயனார் குறிப்பிடுவர்.

## தண் பாக்கம்

பாக்கம் மக்கள் வாழும் இடம். பக்கம் என்பது பாக்கம் என மருவி வழங்கப்பட்டுள்ளது. குருந்த மலர்க் கண்ணியைத் தலையில் சூடிய இடையர் வாழும் பாக்கம் மிக்க குளிர்ச்சியுடன் காணப்படுவதை,

"குருந்தங் கண்ணிக் கோவலர்
பெருந்தண் நிலைய பாக்கமும்" (ஐங்.439:23)

என்னும் அடிகள் விளக்கும்.

## குடவாயில்

குடவாயில் என்னும் ஊர் தளராத புதுவருவாயை உடையது. நெல் விளையும் சிறப்பினையுடையது. பலகுடிப் பரப்பினையுடையது. யானைகள் படிந்து நீராடும் குளங்களையும் நெருங்கிய பதமான காவற்காடுகளையும் உடையது. அதுமட்டுமின்றி தலைவனது அழும்பில் என்னும் ஊரினைப்போல் குளிர்ந்தது என்பதை,

"அழும்பில் அன்ன அறாஅ யாணர்
பழம்பல் நெல்லின் பல்குடிப் பரவை
பொங்கடி படிகயம் மண்டிய பதமிளை
தண் குடவாயில்" (அகநா.44:15-18)

எனும் அடிகள் விளக்கும். இதில் ஒரு நகரத்தின் இயல்பு ஊற்றுணர்வோடு உவமிக்கப்பட்டுள்ளது.

### பரங்குன்றம்

*முருகனுக்குரிய திருப்பரங்குன்றம் குளிர்ச்சி பொருந்தியதாக இருந்தமையை, "சினம் மிகு முருகன் தண்பரங்குன்றத்து" (அகநா.59:11) என்ற அடிகள் சுட்டும்.*

### சாய்க் கானம் (ஊர்)

*"நெடிய கதிர்களையுடைய நெல் வயல்களைக் கொண்ட, குளிர்ச்சி பொருந்தியது சாய்க்கானம் எனும் ஊர்"[40] (அகநா.220:18) என்பர் மதுரை மருதனிளநாகனார்.*

### தண் கொல்லி

*பொறையனின் பெருமையுற்ற கொல்லி என்னும் ஊர் குளிர்ச்சியுடன் இருப்பதை "பொறையன் பெருந்தண் கொல்லி" (346:8-9) என நற்றிணை குறிப்பிடும்.*

### தண் சேர்ப்பு

*சேர்ப்பு என்பது நீரும் நிலமும் சேரும் இடம். குளிர்ந்த கடற்கரைத் தலைவனை 'தண் சேர்ப்பன்'[41] என்ற சொல் குறித்துள்ளது.*

### தண் புலர்

*சங்க இலக்கியத்தில் 'புலர்' என்ற சொல் விடியற் பொழுதைக் குறிக்கும். அதிகாலைப் பொழுது குளிர்ச்சியுடன் விடிவதை, 'தண்புலர் வைகுறு விடியல்' (அகநா.100:15-16) என்பர் உலோச்சனார்.*

## தண் வேனில்

தொல்காப்பியர், வேனில் பருவத்தை,

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு

முடிவு நிலை மருங்கின் முன்னிய நெறித்தே" (தொல்.955)

எனப் பாலைக்குரியதாகச் சுட்டுவர். பெரும் பொழுதுகளை கார்காலம், கூதிர்காலம், முன்பனிக்காலம், பின்பனிக்காலம், இளவேனிற் காலம், முதுவேனிற் காலம் என அறுவகையாக வகைப்படுத்துவர். இளவேனிற் காலம் என்பது சித்திரை, வைகாசி ஆகிய இரு மாதங்களுக்குரியது. இளவேனிற் காலத்தில் மரங்கள் புதுத்தளிர் ஈன்று நறுமணமும், குளிர்ச்சியும், செழுமையும் உடையதாகக் காணப்படும். அதனாலேயே தண் வேனில் எனக் குறிப்பிட்டுள்ளனர். ஐங்குறுநூற்றில், "தீப்போல் சுடர்விடும் இலவ மரத்தில் பருவத்தே மலர்ந்து, பின் வாடி உதிர்ந்த பலவாகிய மலர்கள், பொறி போன்ற மலர்களைக் கொண்ட புங்க மரத்தின் புள்ளிகளையுடைய நிழலிடத்து கோலஞ் செய்யும் குளிர்ந்த செழுமிய இளவேனிற் பருவம்"[42] உரைக்கப்பட்டுள்ளது.

## தண் வாடை

காற்று வரும் திசையை அடிப்படையாகக் கொண்டு நம் முன்னோர்கள் கொண்டல், கோடை, தென்றல், வாடை என வகைப்படுத்தியுள்ளனர். இதில் வடக்கில் இருந்து வீசப்படும் காற்று வாடையாகும். இக்காற்று கூதிர்காலத்தில் வீசுவதால் அதிக குளிர்ச்சியையும், உடம்பிற்கு நடுக்கத்தையும் தரக்கூடியது. வாடை பிரிந்தோர்க்கு நீண்ட வாடையாகவும், கூடியிருப்போருக்கு நல்வாடையாகவும் அமைதலை நெடுநல்வாடை உரைக்கும். இதே கருத்தினை அடியொற்றி நற்றிணையும், "பாசறையில் தங்கியிருக்கும் தலைவன் தன்னெதிரே ஒரு

குன்றின்கண் குறமகள் ஒருத்தியும், அவள் காதலனும் மகிழ்ந்திருப்பது கண்டு தன் தனிமைக்கு வருந்துகின்றான். வானத்தின் கண் பாடும்வங்காக் கூட்டம் பறந்து செல்லுதலைப் பார்த்து மகிழ்ந்து, கள்ளருந்தி, கிளை ஒடித்து வீசி, காதலனொடு குறுநொடி பயிற்றி குறமகள் நினைத்தாங்கு வாழ்கிறாள். இவ்வாறு செய்யும் அவட்கு துணைநன்கு அமைந்துள்ளது. ஆனால் தன் காதலி இத்தகைய பேறு பெற்றிலள் எனக் கருதுகிறான். கூதிரும் வாடையும் ஒலிக்கும் காலத்துத் துணையின்மைக்கு வருந்துகின்றான்"[43] என மதுரை மருதன் இளநாகனார் தண்வாடை தலைவனுக்குத் துன்பம் செய்தலை விளக்குவர்.

தலைவன், இளவேனிற் காலத்தே வருவேன்; அதுகாறும் ஆற்றியிருத்தல் வேண்டும் எனத் தலைவியிடத்தே கூறிப் பிரிந்து சென்றனன். முன்பனிக்காலமும், பின்பனிக்காலமும் வந்து வருத்துகின்றமையின் தலைவி ஆற்றாளாயினள்; இதனை, "மழை மிகுதியால் ஆறுகள் கலங்கல் நீராக ஓடின; நீர் வற்றியதால் தெளிந்த நீர் கால்வாய் வழியாக எங்கும் பாய்வதால் நாடெங்கும் அழகுடன் திகழ்ந்தன; நெடிய குளங்களின் அயலே நீர் சேர்ந்ததால் படிந்த நுண் மணல்கள், அம்மணலின் அறல் மறையும்படி, கோலஞ்செய்வன போல ஈங்கையின் வாடற் பூக்காம்புகள் கழன்று வீழ்ந்து கிடந்தன. கணவரைப் பிரிந்த மகளிர் நுதல் போல் முன்னர் பூத்த பீர்க்கம் பூக்கள் இப்போது எங்கும் காணப்படவில்லை. அதற்கு மாறாக காதலரைச் சேர்ந்து நின்ற மகளிர் முகம்போலப் பொய்கைகளிலே தாமரையின் புதுப்பூக்கள் மலர்ந்துள்ளன. உடலை வருத்திய பனிக்காலத்தோடு மேல்நின்ற வாடைக் காலமும் பிரிவுத்துயரை மிகுவிக்கின்றன. ஆற்றியிராதபடி நெஞ்சம் கலங்குகின்றது. யான் எங்ஙனம் ஆற்றுவேன்"[44] எனப் பாலை பாடிய

பெருங்கடுங்கோ வாடைக் காற்றின் தன்மையால் தலைவி ஆற்றாமல் வருந்தும் மெய்யுணர்வைப் புனைந்துள்ளார்.

### தண் பந்தர்

பந்தர் என்பது மூங்கில் கால்களை ஊன்றி, தென்னை ஓலையால் வேயப்படுவதாகும். திருமண நிகழ்விற்காக அமைக்கப்படும். இது மிகவும் குளிர்ச்சிபொருந்தியதாகக் காணப்படும். இதனை,

"நிரைகால், தண்பெரும் பந்தர்" (அகநா.86:2-3)

எனும் அடிகள் சுட்டும்.

### தண் சாந்தம்

சந்தனத்தைச் சாந்தம் எனச் சங்க இலக்கியம் சுட்டும். சந்தனம் குளிர்ச்சி பொருந்தியதால் மார்பிலே பூசப்படுவதை[45] அகநானூறு குறிப்பிடும். மேலும் சந்தனமரம் குளிர்ச்சியுடையதால் 'தண் ஆரம்' எனவும் வழங்கப்பட்டுள்ளது (நற்.292:1).

### தண் எருமை

பொய்கையால் நனைந்த எருமை குளிர்ச்சியுடன் காணப்படுவதை "ஈர்ந்தண் எருமை" (அகநா.316:3) என்பர் ஓரம்போகியார்.

### தண் நிழல்

ஈரமான மணல் மேட்டின் நிழல் குளிர்ச்சியுடன் காணப்படுவதை "இருள் திணிந்தன்ன ஈர்ந்தண் கொழுநிழல்" (குறுந்.123:1) என்ற அடிகள் சுட்டும்.

### தண்ணிய தலைவன்

தலைவியின் மார்பில் பூசிய சந்தனத்தைவிட, தலைவன் தலைவிக்குக் குளிர்ச்சியுடையவனாகத் தோன்றுவதை,

"மார்பின், குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு

நறுந் தண்ணியன்" (நற்.394:7-9)

என்பர் ஔவையார்.

## தண் தலைவி

தலைவி பொய்கையில் மலர்ந்துள்ள தாமரைப் பூவின் நறிய குளிர்ச்சியினும் தண்ணியள் என்பதனை,

"பொய்கைப் பூவினும் நறுந் தண்ணியளே" (ஐங்.97:4)

எனும் அடிகள் சுட்டும். "தலைவி ஆம்பல் மலரினும் தண்ணியளாகக் காணப்பட்டதை, மோசிகீரனும்"[46] "மழைக்காலத்தில் மலரும் செம்முல்லையின் நீர் ஒழுகும் கொழுவிய அரும்புகள் பலவற்றைக் கரிய பனையின் பசிய ஓலையால் ஆன குடையில், ஒருங்கே வைத்து மூடி, பெருமழை பெய்யும் விடியற்காலத்தில், அக்குடைக் கலத்தை விரித்துவிட்டாற்போன்ற நறுமையும், குளிர்ச்சியும் உடையவள் தலைவி"[47] என்பதை சிறைக்குடி ஆந்தையாரும் குறிப்பிடுவர்.

## தண் கூந்தல்

தலைவியின் கூந்தல் மெல்லிய மணத்துடனும் குளிர்ச்சியுடனும் நீண்டு தாழ்ந்து காணப்படுவதை "தண்ணிய கமழும் தாழ் இருங் கூந்தல்" (நற்.137:1) என்றும், தலைவியின் குளிர்ந்த நறிய கூந்தல் வானத்தில் இருந்து கீழே இறங்கும் மயிலின் தோகை போல அழகாகக் காட்சியளிப்பதை,

"விசும்பு இழி தோகை சீர் போன்றிசினே

.......................................................

.......................................................

பண்ணை பாய்வோள் தண் நறுங் கதுப்பே" (ஐங்.74)

என்றும்,

"தண் நறு முச்சி" (அகநா.221:9)

என்றும் அக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. கூந்தலைக் கூந்தல், கதுப்பு, உச்சி எனப் பலவாறாகப் பாகுபடுத்தினாலும், அவை அனைத்தையும் 'தண்' என்னும் ஊற்றுணர்வோடு தொடர்புபடுத்தி உரைப்பது சுட்டத்தக்கது.

### தண் துவர்

பரிபாடலில் நீராடும் பெண்கள், தம் தலைமுடி பொலிவுற குளிர்ந்த துவரினைத் தேய்த்துக்கொண்டு நீராடுதலை "தண் அம் துவர் பல ஊட்டிச் சலம் குடைவார்" (பரி.10:90) என்னும் அடிகள் குறிப்பிடும்.

### தண் ஆடை

ஈர ஆடை குளிர்ச்சியுடன் இருத்தல், "ஈர்ந்தண் ஆடை" (கலித்.52:11) என வழங்கப்பட்டுள்ளது.

### தண் மார்பு

தலைவனின் மார்பு மலர்மாலைகளும், சந்தனமும் அணிவதால் குளிர்ச்சியுடன் காணப்படுகிறது. இதனை,

"நறுந்தண் மார்பன்" (ஐங்.222:2)

"ஆரம் தண்ணிது கமழும் நின்மார்பு" (அகநா.218:14-15)

"தண் கமழ் வியல் மார்பு" (நற்.322:8)

போன்ற அடிகள் குறிப்பிடும்.

### தண் பணை

தலைவியின் தோளுக்கு, குளிர்ந்த மூங்கிலை உவமையாக்குவர்[48] மருதன் இளநாகனார்.

### தண் நுதல்

சிறைக்குடி ஆந்தையார் "தாதுக்களையுடைய அரும்புகள் அசைய, பெரிய காட்டைத் தடவி வரும் காற்றைப் போல, குளிர் மணங்கள் பலவும் கமழும் ஒள்ளிய நுதலை உடையவளாகத்"[49] தலைவி இருத்தலைக் குறிப்பிடுவர். தலைவியது உடலும், மனமும் சமநிலையில் இருந்தது என்பதை இச்செய்தி புலப்படுத்தும்.

### தண் மழைக்கண்

"தலைவியின் கண் குளிர்ச்சியுடன் காணப்படுவதால் மழைக்கண்"[50] என வழங்கப்பட்டுள்ளது.

### தாயை மகள் தண்ணெனத் தழுவுதல்

ஒரு தாய் "செல்வம் மிக்க அழகிய வீட்டின் கண் சிறிது நேரம் பந்து விளையாடினாலும், தன்னைப் போன்ற தோழியருடன் சேர்ந்து கழங்கு ஆடினாலும், 'அன்னையே! என் உடல்வருந்துகின்றது' எனக் கூறித் தளர்ச்சியுறுவாள். அரும்பிய வியர்வையுடன், என் மேனி குளிருமாறு என்னைத் தழுவி என்னிடத்தே தங்குவாள்"[51] என்று தனது மகளைப் பற்றி உரைப்பள். இதில் மகளின் தழுவல் குளிர்ந்த மெய்யுணர்வைத் தாய்க்குத் தந்தமை புலனாகும்.

### தண் பனி

பனி குளிர்ச்சி உடையது. நடுக்கத்தையும் தரக்கூடியது. ஆதலால் இது தண்பனி என வழங்கப்பட்டுள்ளது. "பனியினால் உண்டான நீர் குளிர்ச்சியுடன் காணப்படுவதை"[52] சங்கப் பாடல்கள் விளக்கியுள்ளன.

### பனியினால் ஏற்படும் நடுக்கம்

தலைவி கடும் பனியால் மிக வருந்திப் பற்களை நறநற எனத் தீப்பொறி பறக்கக் கடித்து நடுக்கம் கொள்வதை,

"எயிறுதீப் பிறப்பத் திருகி

நடுங்குறும் பிரியின் யாம் கடும்பனி உழந்தே" (அகநா.217:19-20)

எனும் அடிகளில் கழார்க்கீரன் எயிற்றியார் சுட்டுவர்.

### பனியினால் உண்டாகும் ஊற்றுணர்வு

பனிக் காலத்தில் இயற்கைப் பொருளிலிருந்து செயற்கைப் பொருள்வரை கடும் குளிர்ச்சியுடன் காணப்படும். தொல்காப்பியர் பனிக் காலத்தை முன்பனி, பின்பனி எனப் பிரித்துள்ளார். இதனை,

"பனி எதிர் பருவமும் உரித்தென மொழிப"[53]

"பின்பனி தானும் உரித்தென மொழிப"[54]

என்னும் நூற்பாக்கள் விளக்கும். பனியின் தாக்கத்தை நாட்டுப்புறப் பழமொழிகள் "தையில் தரையும் குளிரும்,' 'மாசியில் மச்சும் குளிரும்" என எடுத்துரைக்கும். சங்க இலக்கியத்தில் "வாடை, வரை, நீர், கடல், இரவு, பொய்கை, தார், சுரம், யாமம், மலர்கள்"[55] போன்றவை பனியினால் குளிர்ச்சியுடன் காணப்படுவது சுட்டப்பட்டுள்ளது.

### ஈர்

சங்க இலக்கியத்தில் ஈர், குளிர்ச்சி, ஈரம் என்ற பொருளைத் தந்துள்ளது. தலைவியின் கூந்தல் நன்னனின் பறம்புமலையைப் போன்று குளிர்ச்சியுடன் காணப்படுவதை,

"நன்னன் ஆஅய் பிரம்பு அன்ன

மின் ஈர் ஓதி" (அகநா.356:19-20)

என்பர் பரணர். கருமையான குளிர்ச்சி பொருந்திய கூந்தலையுடைய

பெண்டிர்களை,

"மைஈர் ஓதி மடநல்லீரே" (அகநா.388:10)

எனவும், கூந்தல், குளிர்ந்த சந்தனம் போன்று இருந்ததை "மயிரும் ஈர் சாந்தும்" (பரி.6:19) எனவும் சங்கப்பாக்கள் புனைந்துள்ளன.

## பைதல்

பைதல் என்பதற்கு ஈரம், குளிர்ச்சி என்ற பொருளுண்டு. குறுந்தொகையில் பாகனால் கழுவப்பட்ட யானையைப் போல பெருமழை பெய்ததனால் கல் குளிர்ச்சியுடன் காணப்படுவதை,

"மாசுஅறக் கழீஇய யானைபோலப்
பெரும் பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகல் பைதல்"

(குறுந்.13:1-3)

என்ற அடிகள் சுட்டும்.

## வெம்மையினால் ஏற்படும் ஊற்றுணர்வு

வெம்மையினால் ஏற்படும் மெய்யுணர்வுகளை சுரம், தீ, கண்ணீர், நெஞ்சு, யாமம், கல், காடு, நிலம், சூரியனின் கதிர் போன்றவைகளின் வழிப் புலவர்கள் புனைந்துரைப்பர்.

## வெஞ்சுரம்

வெஞ்சுரம் என்பது பாலை நிலத்தைக் குறிக்கும். மணலும் மணல் சார்ந்த பகுதியே பாலைநிலமாகும். பாலைக்குத் தொல்காப்பியர் தனி நிலம் வகுக்கவில்லையெனினும் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில்,

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
நல்லியல்பு இழந்து நடுங்கு துயருறுத்து
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"

(சிலம்பு.காடு.காண்.64:66)

என, முல்லையும் குறிஞ்சியும் மழையற்ற காலங்களில் பாலையாகக் காட்சியளிக்கும் எனக் குறிப்பிட்டுள்ளார். பாலைநிலத்தின் கொடுமையை,

"கதிர் தெறு வெஞ்சுரம்" (ஐங்.330:4)

என்பர் ஓதலாந்தையார். "கொன்றை மாலையை அணிந்த இறைவன், திரிபுரத்தை அழித்தமையினாலே தோன்றிய வெம்மையைப் போல, எவ்விடத்தும் செறிந்த கதிர்களையுடைய ஞாயிறு, சுடுகின்றமையின், எழுந்த காட்டுத்தீ விசும்புற ஓங்கி வெம்மையைச் செய்யும் வெஞ்சுரம்"[56] என்று கலித்தொகை வெஞ்சுரம் பற்றிக் குறிப்பிடுகின்றது.

## வெம்மை

ஊற்றுணர்வில் இன்றியமையாதது வெம்மைப் பண்பாகும். இவ் வெம்மைத்தன்மையைப் பற்றிப் பல பாடல்கள் எடுத்துரைக்கின்றன. தலைவனைப் பிரிந்த தலைவியின் கண்ணீர், எரிகின்ற திரியிலிருந்து கொட்டும் நெய் போல சுடுவதை,

"புகை உண்கண் கலுழ்பு ஆனா
திரிஉமிழ் நெய்யே போல் தெண்பனி உறைக்கும்"

(கலித்.15:20-21)

எனக் குறிப்பிடுவர் பெருங்கடுங்கோ. குளிர்ந்த கண்ணீர் இங்கு நெருப்புப் போல சுடுதல் உள்ள உணர்வின் வெளிப்பாடாகும்.

## நெஞ்சம் சுடுதல்

கலித்தொகையில், 'பொய்ச்சாட்சி சொன்னவன் அமர்ந்ததால் பட்டுப்போன மரம்போல, காமத் தீயினால் என் நெஞ்சம் சுடுவதை என்ன செய்வேன் என்றுரைக்கும் தலைவியின் நிலையை,

*"கரிபொய்த்தான் கீழ் இருந்த மரம்போலக் கவின்வாடி*
*எரிபொத்தி என் நெஞ்சம் சுடும் ஆயின் எவன்செய்கோ"*

*(கலித்.34:10-11)*

*என்னும் அடிகள் குறிப்பிடும். தலைவனைப் பிரிந்த தலைவிக்கு இரவு, எரிகின்ற நெருப்பு போல சுடுவதை (கலித்.146:33-34) நல்லந்துவனார் உரைப்பர். இதைத் தான் இருபதாம் நூற்றாண்டுக் கவிஞரும் "நிலவுக்கு என்மேல் என்னடி கோபம் நெருப்பாய் பொழிகிறது" எனப் பாடியுள்ளார்.*

**கல்**

*காட்டிலுள்ள கற்கள் சூரியனின் வெம்மையால் காய்ந்திருத்தலை "கல் காய்ந்த காட்டகம்" (கலித்.150:11) என்னும் தொடர் விளக்கும். மனிதர்கள் மட்டுமன்றி, கல்லும் வெம்மையால் வருந்துதலை இச்செய்தி புலப்படுத்தும்.*

**நெருப்பில் கைகாய்தல்**

*குளிரின் தாக்கத்திலிருந்து விடுபட ஆட்டிடையன், இரவு நேரத்தில் மெலிதாய் தேய்ந்த கொல்லியின் தீயில், தன் உள்ளங்கையை சூடேற்றிக் கொண்டதை, "ஐதுபடு கொல்லி அங்கை காய" (அகநா.94:7) என்ற அடிகள் விளக்கும்.*

**கால்சிவத்தல்**

*உடன்போக்கில் தலைவன் தலைவியைப் பாலை வழியில் பகற்பொழுதில் அழைத்துச் செல்லும்போது, அங்குள்ள வெம்மையான கற்கள் பட்டுத் தலைவியின் அடிகள் சிவப்பதை,*

*"சுரம், அரிஆர்சிலம்பின் சீறடி சிவப்ப" (அகநா.257:3)*

*எனும் அடிகள் சுட்டும்.*

## மெய்ப்பாடுகள்

தொல்காப்பியர் சுட்டிய நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், உவகை, வெகுளி என்ற எட்டு மெய்ப்பாடுகளும் சங்க அகப்பாடல்களில் புலவர்களால் பெரிதும் பாடப்பட்டுள்ளன.

## நகை

தொல்காப்பியர் நகை தோன்றுவதற்குரிய நிலைக்களன்களாக,

"எள்ளல் இளமை பேதைமை மடன் என்ற நான்கையும் "[57]

குறிப்பிடுவர். இகழ்தல், இளமை, அறியாமை, அறிந்தும் அறியாதது போலிருத்தல் என்னும் இந்நான்காலும் நகை தோன்றும்.

தலைவனைப் பிரிந்த தலைவியால் உயிர்வாழ்தல் இயலாது. எனினும் தலைவன், தலைவியைப் பிரியக்கருதினன். அவன் மீண்டு வரும்வரை தம் மனையில் தலைவி வாழ்தல் வேண்டினன். அவனது அறியாமையால் ஏற்பட்ட இக்கூற்று நகைப்பிற்குரியதாக இருத்தலைத் தலைவி,

"பெரு நகை கேளாய் தோழி! காதலர்
ஒருநாள் கழிப்பினும் உயிர் வேறு படுஉம்
..........................................................
..........................................................
படுமழை உருமின் உரற்று குரல்
நடு நாள் யாமத்தும் தமியம் கேட்டே" (நற்.129)

என உரைப்பள். இதில் பேதமையால் ஏற்படும் நகை உணர்வு சுட்டப்பட்டுளது.

## அழுகை

துன்பத்தினாலும், மனஅழுத்தத்தினாலும் மன உணர்வுகளை அடக்கமுடியா சூழலிலும் அழுகை தோன்றும். தொல்காப்பியர் இதற்குரிய சூழலை,

"இழிவே இழவே அசைவே வறுமையென
விளிவில் கொள்கை அழுகை நான்கே"[58]

என்பர். "சிறிய இலைகளைக் கொண்ட நெல்லி மரங்கள் அடர்ந்து வளர்ந்த கற்கள் வெயில் வெம்மையினால் சூடேறிக் கிடக்கும் காட்டினூடே, அறியாமை மிக்க நெஞ்சம் அவரைப் பின்தொடர பல இதழ்களால் மாட்சிமைப்பட்ட நீலமலர்போலும் மையுண்ட என் கண்கள் அழுமாறு பிரிந்த, நம் காதலர் மெய்யாகவே கல்லைக் காட்டினும் வலிய இதயத்தினராவர்"[59] எனத் தலைவி தன் அழுகைக்கான காரணத்தை உரைத்தல் அழுகை எனும் மெய்ப்பாட்டை விளக்கும்.

## இளிவரல்

"மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு
யாப்புற வந்த இளிவரல் நான்கே"[60]

என்பது இளிவரல் தோன்றுமிடங்களாகும். முதுமை, நோய், துன்பம், எளிமை இவற்றால் இளிவரலாகிய இழிபு ஏற்படும். குறுந்தொகையில் தாம் முயன்று தேடாது, தம் முன்னோரால் தேடிவைக்கப்பெற்று, தம்மிடம் உள்ள செல்வத்தை அழிப்பவர் உயிருள்ளவராக உலகோரால் எண்ணப்படார். இறந்தவராக எண்ணப்படுவர். அவ்வுள்ளது சிதைப்பின் இல்லோராய் உயிர்வாழின் இயல்பாகவே வறியவராவர், இரந்து உயிர்வாழ்வதைவிட இது இளிவாகும் என்பதை,

"உள்ளது சிதைப்போர் உளர் எனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு எனச்
சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்
சென்றனர்..." (குறுந்.283:1-4)

எனும் பாடலடிகள் விளக்கும். இதில் இளிவரல் என்னும் உணர்வு குறிக்கப்பெற்றுள்ளது.

**மருட்கை**

தொல்காப்பியர் மருட்கையை,

"புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே"[61]

என்றுரைப்பர். இதற்கு "இதுவரை காணாததைக் கண்ட புதுமை, அளவின் மிக்க பெருமை, அளவின் மிகக் குறைந்த சிறுமை, ஒன்று பிறிதொன்றாகும் ஆக்கம் இவை நான்காலும் அறிவான் அமையாதவியப்பு ஏற்படும்"[62] என்று பொருளுரைப்பர்.

மன்னனுக்கு உற்றுழி உதவும் பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றான். போரில் வெற்றிபெற்றவுடன் தலைவியை நினைத்து விரைந்து மீளத் தேரில் ஏறினன். காற்றின் வேகத்தினும் மனத்தின் வேகத்தினும் விரைவாய்ப் பாகன் தேரைச் செலுத்தியதை வியந்து தலைவன் உரைப்பதை,

"பெருந்தேர்யானும்
ஏறியது அறிந்தன்று அல்லது, வந்த
ஆறுநனி அறிந்தன்றோ இலனே, தாஅய்
முயற்பறழ் உகளும் முல்லைஅம் புறவில்
கவைக்கதிர் வரகின் சீறூர் ஆங்கண்

மெல்இயல் அரிவை இல்வயின் நிறீஇ

இழிமின் என்ற நின்மொழி மருண்டிசினே" (அகநா.384:2-9)

என்னும் பாடல்வழி ஒக்கூர் மாசாத்தியார் உரைப்பர். இதில் தலைவன் தேரில் ஏறி அமர்ந்தவுடன், தலைவியின் வீட்டின்கண் தேரை நிறுத்தி இறங்குக எனப் பாணன் சொல்லக்கேட்டு தலைவன் வியப்பு அடைந்த உணர்வு புனையப்பட்டுள்ளது.

**அச்சம்**

பயத்தின் காரணமாக வரக்கூடியது அச்சம். அச்சத்தினால், நெஞ்சம் படபடத்தல், நோகல், நடுக்க மெடுத்தல், விதுப்புறல், பைதல், மருளல், நொந்தல், பதைபதைத்தல் போன்ற உணர்வுகள் ஏற்படும்.

"தனிமையைக் கண்டு துன்புறும் தலைவி, தலைவனது செலவினைக் கேட்டனள் அழகு பொருந்திய அவளது முகம் விடியற்காலத்து நிலவினைப் போல, மெல்ல மெல்ல தன் புத்தழகினை இழந்தது. நிலம் நோக்கி முகம் கவிழ்ந்தாள். தன்காற் பெருவிரலால் நிலத்தைக் கிளைத்தாள். குளிர்ந்த இமைகளையுடைய கண் மழைபோன்று நீரினைச் சொரிந்தன. அக்கண்ணீர்த்துளிகள் அவள் மார்பின்கண் துளித்து வீழ்ந்தன. கால்கள் நிலைத்து நில்லாது தடுமாறத் துன்பத்தால் நெஞ்சு கலங்கினாள். அறல் போன்ற விரிகூந்தல் அவிழ்ந்து தாழ, கவிழ்ந்த முகத்தை அதனுள் மறைத்தாள். நா நடுக்கமுற திருத்தாத சொற்களால் நும்முடைய பொருள்வயிற் செலவு மாட்சிமைபெற்றுத் திருத்தமுறுவதாக என்று கூறி பெருமூச்சுவிட்டனள்"[63] இதில் தலைவியின் அச்ச உணர்வு எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## பெருமிதம்

தொல்காப்பியர் பெருமிதம் தோன்றுவதற்குரிய காரணிகளாக "கல்வி, தறுகண், இசைமை, கொடை"[64] என்ற நான்கினைக் குறிப்பிடுவர். பரத்தைவயிற் பிரிந்த தலைவன், தன் பிழையுணர்ந்து மீண்டு வந்தனன். அப்பொழுது தலைவன் தோழியை நோக்கி, நான் உங்களைப் பிரிந்து வாழ்ந்த நாட்களில் நீங்கள் யாது எண்ணியிருந்தீர்கள் எனக் கேட்டதற்கு தோழி "தலைவ! எம் மன்னனாகிய ஆதன் அவினி நெடிது வாழ்க! எம் நாட்டு வயல்களில் நெல்வளம் சிறக்குமாக! நாட்டில் பொன்வளம் பெருகுமாக! என விரும்பி வாழ்ந்தாள் எம் தலைவி. அவள் தோழியராகிய யாமோ, அரும்புகள் நிரம்பிய புன்னைமரங்களும், முட்டைகளை மிகுதியாகக் கொண்ட சிறுமீன்களும் நிறைந்த ஊரின் தலைவன் வாழ்க! அவனுடன் அவன் பாணன் வாழ்க! என விரும்பி வாழ்ந்தோம்"[65] என்றனள். இதில் தலைவனைப் பிரிந்த தலைவி தன் துன்பத்தினை நினைத்து வருந்தாமல் தன்னலமின்றி மன்னனையும், மக்களையும் வாழ்த்தும்நிலை உரைக்கப்பட்டுள்ளது. மன்னன் சிறக்க மக்கள் சிறப்பர். நெல்விளைய நாடு செழிக்கும் என்பதால் இதில் தலைவியின் பெருமித உணர்வு வெளிப்படுகின்றது.

## வெகுளி

தொல்காப்பியர், வெகுளி "உறுபறை, குடிக்கோள், அலை, கொலை"[66] என்ற நான்கால் தோன்றும் என்பர். வெகுளி என்பது கோபத்தைக் குறிக்கும். "வெகுளி வெளிப்பாட்டில் முகமே முக்கிய இடம்பெறுகிறது. கண்புதைத்தல், விழிகள் சுழலுதல், சீற்றப்பார்வை, நுதல் வியர்த்தல், பெருமூச்செறிதல், வாயிதழ் கடித்தல், பற்களைத் திருகிக் கறித்தல், கடிய சொற்கூறுதல் என்பன வெகுளியின் முக மெய்ப்பாடுகளாகும்."[67]

“இறைவன் உலகை உருவாக்கக் கருதிய பொழுது, படைத்தல் தொழிலைச் செய்யும் அயன் முதலான தேவர்கள், எல்லையில்லாத கொடுமைகளைச் செய்யும் அவுணர்களை அழிக்க இரந்துநின்றனர், இறைவனும் சினந்து கூற்றுவனைப் போன்று எதிர்நின்று போரிடும் வலிமையுடன் மூன்று கண்களையுடைய இறைவன் மூன்று கோட்டைகளையும் அழிக்க சினந்து எழுந்தனன். அங்ஙனம் எழுந்த பொழுது அவன் முகம் தெறுமாறு போல ஒள்ளிய ஞாயிறு சுடுகின்றது. சீறுதற்குரிய மழுப்படை உடையோன் சினத்தலின் மூன்று கோட்டைகளும் திரிபுரமும் அழிந்தன”[68] என அகநானூறு சுட்டும். இங்ஙனம் முக்கண்ணனான சிவன் அவுணர்களைக் கொன்ற செயல் வெகுளி உணர்வினால் என்பது புலப்படும்.

**உவகை**

தொல்காப்பியர் உவகையை,

“செல்வம் புலனே புணர்வு விளையாட்டு என்று
அல்லல் நீத்த உவகை நான்கே”[69]

என்று குறிப்பிடுவர். உவகை என்பதற்கு “செல்வத்தால் ஏற்படும் நுகர்ச்சியாலும், புலமையில் ஏற்படும் அறிவு முதிர்ச்சியாலும், உள்ள இணைப்பாலும், உள்ளம் ஒத்தாரொடு கூடி ஆடும் விளையாட்டாலும் துன்பம் நீங்கி மகிழ்ச்சி தோன்றும்”[70] என்பர் ச.வே.சுப்பிரமணியன்.

தலைவன் வருகையால் தலைவிபெற்ற மகிழ்ச்சியானது, இன்பம் மிக்க வைகறைப் பொழுதில் இரவு மழை பெய்தமையால் நீர்நிரம்பப் பெற்ற குளங்களைக் கண்ட ஊரவர் அனைவரும் அடைந்த உவகையெல்லாம் ஒருசேரப் பெற்றது போல் இருந்தது என்பதை,

"என்றூழ் வியன்குளம் நிறைய வீசி
பெரும் பெயல் பொழிந்த ஏம வைகறை
பல்லோர் உவந்த உவகை எல்லாம்
என்னுள் பெய்தந்தற்றே" (அகநா.42:9-12)

என்ற பாடலடிகள் விளக்கும். தலைவன் வருகையால் தலைவி பெற்ற மகிழ்ச்சியானது மனஉணர்வின் பாற்பட்டதாகும். மக்கள் மகிழ்ச்சியும் அத்தகையதே ஆகும்.

## தொகுப்புரை

எட்டுத்தொகை அக இலக்கியங்கள் தலைவன் தலைவியரிடையே ஏற்படும் மெய்யுணர்வு, இயற்கையினால் உண்டாகும் மெய்யுணர்வு போன்றவற்றைச் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளன.

தொல்காப்பியர் உரிப்பொருளில் புணர்வை முதலில் வைத்தார். பிற உணர்வுகள் தோன்றுவதற்கும் மெய்யே அடிப்படைக்காரணமாக இருப்பினும். அதனோடு தொடர்புடையது புணர்தலே என்பதால் அவ்வாறாக வைத்துள்ளார்.

தலைமக்களிடையே ஏற்படும் மெய்யுணர்வில் களவு, கற்பு வாழ்வில் அன்பின் வெளிப்பாட்டை உணர்த்த உள்ளப் புணர்ச்சியும், மெய்யுறு புணர்ச்சியும் முதன்மைக் காரணிகளாகும்.

தலைவனும் தலைவியும் மெய்யுறு புணர்ச்சிக்கு முன்னர் செய்துகொள்ளும் இன்பச் செய்கைகளாக காதலியின் தோளில் துயிலுதல், மார்பில் துயிலுதல், கூந்தலில் துயிலுதல், தொய்யில் எழுதுதல், எயிற்றுநீர் சுவைத்தல், நுதல் உண்ணல் போன்ற உணர்வுப் புனைவுகளைச் சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் சுட்டியுள்ளனர்.

தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் தழுவி தங்கள் காதலின்பத்தை வெளிப்படுத்துவர். தலைவன், தலைவியை அவளது மார்புகள் வருத்தமுறுமாறும், மார்பிலே கிடக்கும் மாலை குழையும்படியும், காற்றும் இடைநுழைய முடியாதபடியும், அச்சத்தைத் தெளிவிக்கும் பொருட்டும், மழையினால் உண்டான குளிர்ச்சியை நீக்கும் வண்ணமும் தழுவுதல் புலவர்களால் புனைந்துரைக்கப்பட்டுள்ளன.

தலைவி, தலைவனைத் தழுவும் இன்பமே பெரிது எனக் கருதியமை மேலும் தலைவனைத் தழுவியும் பசலை நீங்காமை போன்றவையும் அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. தலைவி தலைவனுக்கு ஐம்புல இன்பங்களையும் ஒருங்கே தருவதாக அமைகின்றாள். ஐம்புல உணர்வில் கூந்தல், நுதல், இளமை ஆகியவற்றால் கண்ணிற்கும், நறுமணத்தால் மூக்கிற்கும், குளிர்ந்த நீரின் தன்மையால் வாய்க்கும், மெல்லிய சொற்களால் செவிக்கும், மென்மை இயல்பினால் உடம்பிற்கும் இன்ப உணர்வினைத் தருபவளாகத் தலைவி சுட்டப்பட்டுள்ளாள்.

தலைவி தன் காதலனுக்கு ஏறுதழுவுதலால் உண்டான வடுக்கள் மறையும்படி தனது முலைகளால் தழுவி ஒத்தடம் தருவதையும், வடுக்களில் வழியும் குருதியால் தலைவியது தோள்கள் அழகுடன் காட்சியளிப்பதையும் புலவர்கள் புனைந்துள்ளனர்.

தலைவனைப் பிரிந்த தலைவியின் நெஞ்சம் நடுங்கிப் பெருமூச்சு விடுதல் உயிர்ப்புநிலையில் துன்பத்தினால் ஏற்படும் மெய்யுணர்வை வெளிப்படுத்துகிறது. தலைவனைப் பிரிந்த நிலையிலும் உடனிருக்கையிலும் அவனது மார்பே தலைவிக்கு இன்பம் தருவதாக அமைகின்றது.

காதலர்களிடையே தழுவுதலைத் தொடர்ந்து கவவுதல் நிகழும். கவவுதல் என்பது நெருக்கமான தழுவலையும், புணர்ச்சியையும் குறிக்கும். காதலரைக் கூடிய மகளிர், காதலர் அணைத்த கையை நெகிழவிடாது பின்னிக்கிடப்பதையும், கண்களில் கண்ணீர்மல்க தலைவி முயங்கியமையும் ஊற்றின்ப உணர்வுகளின் அடிப்படையென சங்கப் புலவர்கள் சுட்டியுள்ளனர்.

இல்லற வாழ்க்கையில் கணவனும் மனைவியும் கூடிப்பெறும் இன்பமே முயங்குதல். பண்ணிற்கு ஏற்றவாறு நரம்புகளை மாற்றியும், தளர்த்தியும், கூட்டியும் அதன் இசையை நுகர்வதுபோல புதிதாகத் தோன்றும் புணர்ச்சி இன்பத்தைத் தலைவனும், தலைவியும் நுகர்ந்து வாழ்ந்துள்ளனர்.

புணர்ச்சி இன்பத்திற்கு ஊடற்கிளர்ச்சி வேண்டும். தொடுதல், மோத்தல், கேட்டல், பார்த்தல், சுவைத்தல் என்ற ஐம்புலச் செய்கைகளும், புணரும் செய்கைக்கு முன்னே அதனை உணரும் இன்ப எண்ணங்கள் தழைக்க உதவும். சங்கப்புலவர்கள் பகற்புணர்ச்சியையும், இரவுப்புணர்ச்சியையும் நுட்பமாகச் சுட்டியுள்ளனர். இதில் புணர்ச்சிக்கு முன் தலைவன் செய்த இன்பச் செய்கைகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலும் புணர்ச்சி இன்பத்தில் சிறந்தது நாகப்புணர்ச்சி. நாகங்கள் காம இன்பத்தை அனுபவிக்க, தொடர்ந்து இறுகப்புணரும் இயல்பினது. வையையில் நீராடவந்த மைந்தரும் மகளிரும் நாகங்களைப் போல தொடர்ந்து இறுக்கமாகத் தழுவிக்கூடியதையும் புலவர் புனைந்துள்ளனர்.

தலைவனுக்கு, காதலின்பத்தை நல்குபவர்களுள் பரத்தையும் ஒருத்தி. பரத்தையிடம் தலைவன் பெற்ற காதலின்பத்தை அவன் மேனியெங்கும் பெரிய நகங்கள் கீறிய வடுக்களும், பற்கள் பதித்த

குறிகளும், பூவிதழ்கள் உதிர்ந்த கண்ணியும், சிவந்த அடிகளும் எடுத்துரைக்கும். இங்ஙனம் பரத்தையின் மூலம் கிடைக்கும் ஊற்றின்ப உணர்வுகளைப் புலவர்கள் சுட்டுவர்.

தலைவிக்குத் தலைவன் தழுவல் இன்பத்தையும், தாயின் தழுவல் வெறுப்பையும் தோற்றுவித்ததைப் புலவர்கள் பாடியுள்ளமை படைப்பாளி அப்படைப்பாகவே மாறிய நிலையை விளக்கும். தலைவன் தலைவி தங்கள் புதல்வனை தழுவிப் பெறும் ஊற்றின்ப உணர்வுகள் சங்கப் பாடல்களில் புனையப்பட்டுள்ளன.

இயற்கை மனித வாழ்வோடு தொடர்புடையது. இரண்டறக்கலந்தது. இயற்கை தரும் ஊற்றுணர்வில் குளிர்ச்சி முதலிடம் வகிக்கிறது. இதனைப புலவர்கள் பல பாடல்களில் எடுத்துரைத்துள்ளனர்.

பனியினால் ஏற்படும் உணர்வான மெய்நடுங்குதல், பற்கள் வெடவெடத்தல் போன்ற ஊற்றுணர்வு புலவர்களால் புனையப்பெற்றுள. வெம்மையினால் பாலைநிலம், நெருப்பு, கல், காடு போன்றவை சுடுவதையும், தலைவனின் பிரிவினால் தலைவிக்கு, நெஞ்சு, யாமம் போன்றவை சுடுவதையும் சங்கப்பாக்கள் எடுத்தியம்பியுள்ளன.

மெய்யின்வழி உணரப்படும் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்ற எண் வகை உணர்வுகளும் சங்கப்பாக்களில் புலவர்களால் பாடப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## சான்றெண் விளக்கம்

1. தொல்.நூ.960
2. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், ப.39
3. மேலது, ப.40
4. தொல்.நூ.1039
5. இளம்பூரணர் (உரை.), தொல்.பொருள்., இரண்டாம் பகுதி, ப.10
6. ஐங்.450:3-4
7. அகநா.240:10-11
8. நற்.20:9
9. அகநா.233:15
10. அகநா.8:15-16
11. ஐங்.407:1
12. ஐங்.337:2
13. கலித்.18:3-12
14. கலித்.39:4-8
15. நற்.139:8-10
16. கலித்.39:4-5
17. அகநா.142:25-26
18. குறுந்.70
19. ஐங்.29:3-5
20. கலித்.106:34-36
21. கலித்.90:6-9
22. அகநா.26:6-10
23. அகநா.328:4-7

24. கலித்.54:5-15

25. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், ப.329

26. அகநா.93:10-15

27. பரி.11:67

28. ஐங்.39:2-3

29. கலித்.88:10-14

30. குறுந்.84:1

31. குறுந்.359:2-6

32. ஐங்.402

33. அ.தட்சிணாமூர்த்தி (உரை.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.97

34. ச.மெய்யப்பன் (பதி.), வெற்றிதமிழ் அகராதி, ப.112

35. மேலது, ப.29

36. மேலது, ப.264

37. நற்.118:1-2

38. ஐங்.27:2, 30:2

39. ஐங்.494:2

40. அகநா.220:18

41. கலித்.121:16, 124:4, 132:7, 127:5

42. ஐங்.368:3

43. நற்.341:1-7

44. கலித்.31:1-9

45. அகநா.186:12

46. குறுந்.168:1-4

47. குறுந்.168:1-4

48. அகநா.255:9

49. குறுந்.273:1-3

50. அட்டவணை -1

51. அகநா.17:1-4

52. ஐங்.206:5, 223:4, கலித்.77:7, 78:27, அகநா.13:21-24, 178:19

53. தொல்.நூ.953

54. மேலது, 956

55. அட்டவணை - 1

56. கலித்.150:1-6

57. தொல்.நூ.1198

58. மேலது, 1119

59. ஐங்.334

60. தொல்.நூ.1200

61. மேலது, 1201

62. ச.வே.சுப்பிரமணியன் (உரை.), தொல்காப்பியம் தெளிவுரை, ப.485

63. அகநா.299:11-19

64. தொல்.நூ.1203

65. ஐங்.1

66. தொல்.நூ.1204

67. மு.பொன்னுச்சாமி, சங்க இலக்கியத்தில் கொலை, வெகுளி, ப.845

68. கலித்.2:1-9

69. தொல்.நூ.1205

70. ச.வே.சுப்பிரமணியன் (உரை.), தொல்காப்பியம் தெளிவுரை, ப.485.

# நாப் புலனுணர்வுப் புனைவு

மனிதன் உயிர்வாழ்வதற்கு இன்றியமையாதனவாகக் கருதப்படும் காற்று, நீர், உணவு ஆகியவற்றின் தேவை பயன்பாடு பற்றிச் சங்க இலக்கியம் சிறப்புறப் புனைந்துள்ளது. இயற்கைவழிக் கிடைக்கும் உணவுகளில் நீரும் உணவும் சுவையுணர்வோடு தொடர்புடையது. அதனாலேயே தொல்காப்பியரும், 'இரண்டறிவதுவே அவற்றொடு நாவே' எனச் சுவை உணர்வை இரண்டாவதாகக் குறிப்பிடுகிறார். சங்க கால மக்களும் சுவையுடன் கூடிய உணவையே விரும்பி உண்டுள்ளனர். எனவே சங்க அகப்பாடல்களில் இடம்பெறும் நாப்புலன் உணர்வைப் புலவர்கள் புனைந்துள்ள விதம் குறித்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## உணவு

தொல்காப்பியர் 'தெய்வம் உணாவே மாமரம்'[1] என உணவினைக் கருப்பொருளில் ஒன்றாகக் குறிப்பிடுவர். உணவு பற்றி "வாய்வழியாகக் கொள்ளப்பட்டு உயிர் வாழ்வதற்கும், உடல் நலத்திற்கும் தீங்கு விளைவிக்காத இன்றியமையாத பொருளாக அமைவதை உணவென்று தெளியலாம்"[2] என்பர். இவ்உணவு பற்றி "உடலுக்கு வலிமை கொடுப்பது, வளர்ச்சியை அளிப்பது, அங்கங்கள் அழிவுறாமல் பாதுகாப்பது, உடலாகிய பொறியை இயக்க ஆற்றலைக் கொடுப்பது நோயைத் தீர்க்கப் பயன்படுவது"[3] என்பர் சே.நமச்சிவாயம்.

## சுவையும் உண்ணும் முறையும்

நாவினால் அறியப்படும் சுவை. 'கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, புளிப்பு, மதுரம் என அறுவகைப்படும். இவ் அறுவகையையே அபிதான சிந்தாமணியும்'[4] சுட்டும். உண்ணும் முறை, உண்பன, தின்பன,

நக்குவன, பருகுவன என நான்கு வகைப்படும். இதில் உண்பன என்ற சொல் "திடஉணவுப் பொருட்களையும், நீர் உணவுப் பொருட்களையும் உட்கொள்ளுதலைக் குறிக்கும். தின்பன கட்டித்தன்மையான பொருட்களைப் பல்லால் கடித்து, அரைத்து உட்கொள்ளுதலைக் குறிக்கும். நாவினால் துழாவி உட்கொள்ளுவதை நக்குதல் என்பது குறிக்கும்."[5]

மேலும் உண்ணும் முறைகளாக "அசைத்தல், அதக்குதல், அருந்துதல், ஆர்தல், உண்ணுதல், உதப்புதல், உறிஞ்சுதல், ஒதுக்குதல், கடித்தல், கரும்புதல், கறித்தல், குடித்தல், குதப்புதல், கொறித்தல், சப்புதல், சுவைத்தல், சாப்பிடுதல், சூப்புதல், தின்னுதல், நக்குதல், பருகுதல், மாந்துதல், முக்குதல், மெல்லுதல், விழுங்குதல், மிசைத்தல்"[6] என்ற இருபத்தாறினைச் சுட்டுவர் ஞா.தேவநேயன்.

## சங்க மக்களின் சுவையுணர்வுப் புனைவு

சங்ககால மக்கள் இனிப்பு, கைப்பு, புளிப்பு, கார்ப்பு, துவர்ப்பு, உவர்ப்பு ஆகிய அறுவகைச் சுவையுடன் கூடிய உணவினை உட்கொண்டுள்ளதனைப் புலவர்கள் புனைந்துரைத்துள்ளனர். மேலும் பால், தயிர், கள், நீர் போன்ற பருகும் உணவுகளையும் சுவைகூட்டி உண்டமையும் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

## இனிப்புச் சுவை உணர்வுப் புனைவு

சங்க மக்கள் பாலுடன் கலந்த உணவுப்பொருட்களை மிகவும் விரும்பிச் சுவைத்துள்ளனர். இதனால் புலவர்கள் அதன் இனிப்புச்சுவை தோன்றப் புனைந்துள்ளனர்.

## பாற்பொங்கல்

சங்க மக்கள் உலைநீருக்குப் பதிலாக, பாலினை ஊற்றி பசிய அவலினைக் கொண்டு பாற்பொங்கலிட்டு உண்டமையை,

"பல்கோட்டு அடுப்பில் பால்உலை இரீஇ
கூழைக் கூந்தல் குறுந்தொடி மகளிர்
பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்து
பாசவல் இடிக்கும்" (அகநா.141:15-18)

என்பர் நக்கீரர். இதில் கார்த்திகையன்று பெண்கள் அவல் இடித்து பாற்பொங்கலிடும் வழக்கம் சுட்டப்பட்டுள்ளது. இதனால் அக்கால மக்கள் இனிமையான பொங்கலினைச் சமைத்து உண்டுள்ளமையை அறியமுடிகிறது. இதில் பொங்கலின் இனிப்புச் சுவை சுட்டப் பட்டுள்ளது.

## வரகுச்சோறு

பாலை வழியில் செல்லும் வம்பலர்களின் பசியைப் போக்க "இடையர்குலப் பெண்கள் வரகினைத் திரிகையில் இட்டுத் திருகி, சுளகினால் புடைத்து அரிசியாக்கி உரலில் இட்டுத் தீட்டி, மண்ணாற் செய்த பானையில் அவ்அரிசியை இட்டு, சுனை நீரை ஊற்றி, கற்கள் அமைத்து அடுப்பினில் உலைஏற்றி, கொன்றைப் பூந்தாது போன்ற சோற்றை ஆக்கினர். அச்சோற்றினைப் பாலுடன் கூட்டி வழிச்செல்வார்க்கு அளித்து அவர்தம் அழிபசி போக்கி அகம் மகிழ்ந்தனர்"[7] என்பதை மாமூலனார் புனைவர். இதில் சோற்றோடு பாலும் கலந்தமையால் ஏற்படும் இனிப்புச் சுவை சுட்டப்பட்டுள்ளது.

### கொள்ளுக்கஞ்சி

உழவர்கள் தொழிற்களைப்பு தீரக் "கொள்ளுப் பயிறுடன் பால் கலந்து ஆக்கிய வெள்ளிக்கம்பியை நறுக்கி வைத்தாற்போன்ற வெள்ளிய அவிழ்க் கஞ்சியை போதும் என்ற அளவிற்கு வளைத்து உண்டமையை"[8] விற்றூற்று மூதெயினார் புனைவர். இதனால் பாலுடன் கலந்து ஆக்கிய கொள்ளுக்கஞ்சி சுவையுடன் இருத்தலும் அதை உழவர்கள் விரும்பி உண்டலும் புலப்படும்.

### பாசவல்

சங்க மக்கள் இறைச்சி, பால், கரும்புப் பாகு, செந்நெல்லான பசிய அவல் ஆகியவற்றைக் கலந்து செய்யும் உணவினைப் 'பாசவல்' என்று அழைத்தனர். உறையூர் என்னுமிடத்து, "செந்தீயில் சுட்ட வளமான நிணத்தினது கொழுவிய துண்டங்கள் சொரியப்பெற்ற மெல்லிய தினைச் சோற்றினோடு, கரும்பினது முற்றிய தண்டினைப் பிழிந்தெடுத்த சாறு காய்ச்சிய பாகுடன் பால் ஊற்றிக் கலந்த செந்நெல்லால் ஆன பசிய அவலினையும் கலந்து உண்ணக் கொடுத்தமை"[9] தாயங்கண்ணனாரால் புனையப்பட்டுள்ளது. கரும்புச்சாறும், பாலும் கலந்ததால் ஏற்படும் இனிப்புச் சுவை இதில் சுட்டப்பட்டுள்ளது. இங்ஙனம் இனிப்புச் சுவை பாலுடன் சேர்ந்த உணவிற்குக் கிடைத்தலை சங்கப் புலவர்கள் புனைந்துள்ளனர்.

### பழங்கள்

பழங்கள் உடலுக்கு ஊட்டத்தையும், ஆற்றலையும் தரவல்லது. உலகியல் வாழ்விற்கு மட்டுமின்றி ஆன்மீக நெறியில் செல்பவர்களுக்கும் பழங்கள் சிறந்த உணவாகப் பயன்படுகிறது. பிற உணவுகளைத் தவிர்த்து காய்கனிகளை மட்டுமே உண்டுவந்தால் 'மனம் ஒருமைப்படும்' என்பது

ஆன்றோர் வாக்கு. அவ்வகையில் சங்க மக்களும் காலம் அறிந்தும், இடமறிந்தும், அளவறிந்தும் இப்பழங்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

### மாம்பழம்

கனிகளில் மிகச்சிறந்தவைகளாகச் சுட்டப்படுவது மா, பலா, வாழை என்னும் முக்கனிகளாகும். பழங்களின் சுவையை அடிப்படையாகக் கொண்டே இவ்வாறு வரிசைப்படுத்தியுள்ளனர். மாம்பழத்தின் சுவை இனிமையாக இருத்தலால் அது "தீம்பழம்"[10] எனக் குறிக்கப்பட்டுள்ளது.

### தேமா

மாவில் இரண்டுவகை உண்டு. புளிப்புச் சுவை உடையதைப் புளிமா என்றும், இனிப்புச் சுவை உடையதைத் தேமா என்றும் சங்கப் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர். குறுந்தொகையில் திரண்ட கொம்பினையுடைய வாளை மீனின் இளைய பெட்டைமீன் கொத்தாக உள்ள தேமாவின் இனிய கனிகளைப் பற்றிக் கொள்வதை,

"கனைக் கோட்டு வாளைக் கமஞ்சூழ் மடநாகு
துணர்த் தேக் கொக்கின் தீம்பழம் கதூஉம்" (குறுந்.164:1-2)

என்பர் மாங்குடி மருதனார். இதில் தேமாங்கனியின் இனிப்புச்சுவையை உணர்ந்தமையால் புலவர் அதனைத் 'தீம்பழம்' எனச் சுட்டியுள்ளார்.

### பலாப்பழம்

மலைச்சாரலில் காணப்படும் பழவகைகளுள் ஒன்று பலா. பலாப்பழம் பச்சையாகவும் முட்கள் நிறைந்து சொர சொரப்பாகவும் பெரியதாகவும் காணப்படும். உள்ளேயுள்ள சுளைகள் மஞ்சள் நிறத்தில் மிகுந்த சுவையுடன் காணப்படும். இப்பலாவில் வேர்ப்பலாவின் பழங்கள் மிகுந்த இனிப்புச் சுவையுடன் காணப்படுவதை,

"வேரல் வேலி சிறுகுடி அலற

செங்காற் பலவின் தீம்பழம்" (நற்.232:4-5)

என நற்றிணை குறிப்பிடும்.

## வாழைப்பழம்

அகநானூற்றில் கொழுவிய இலைகளையுடைய வாழையின் காய்ப்புமிகுந்த பெரிய குலையிலுள்ள முதிர்ந்த இனிய கனி தம்மை உண்போர் பிற கனிகளை உண்ணாதவாறு தடுத்தலை.

"கோழிலை வாழைக் கோள்முதிர் பெருங்குலை

ஊழுறு தீம்கனி உண்ணுநர்த் தடுத்த" (அகநா.2:1-2)

என்றுரைப்பர் கபிலர். மேலும் இனிக்கும் கனிகளைக் கொண்ட வாழை "தீம் குழை வாழை" (அகநா.141:20) என்றும் இனிப்புச் சுவையோடு சேர்த்துச் சுட்டப்பட்டுள்ளது.

## இருப்பைப்பழம்

வறட்சியுற்ற பாலைநிலத்தின் விடியற்காலத்தே "இறையைக் கைக்கொள்வதில் வல்லதான கரடி இருப்பை மரத்தின் இனிய பழங்களைத் தின்று வெறுத்ததை"[11] ஆலம் பேரிச்சாத்தனாரும், "வேம்பின் ஒள்ளிய பழத்தை வெறுத்து இருப்பை மரத்தினது தேன் போலும் பால் வற்றிய இனிய பழத்தை விரும்பி வாவல் பறந்ததை"[12] கயமனாரும் புனைந்துரைக்கின்றனர். இதில் இருப்பைப் பழத்தின் சுவை 'தீம்' எனச் சுட்டப்பட்டுள்ளது.

## அத்திப்பழம்

அத்திப்பழத்தின் சுவையை 'அதவத் தீம்கனி' (நற்.95:3) எனக் கொட்டம் பலவனார் புனைவர்.

## பனம்பழம்

இதன் பழம் தேன்போல இனிமையுடன் இருத்தலை 'கானற் பெண்ணைத் தேனுடை அளிப்பழம்' (நற்.372:2) என உலோச்சனார் புனைவர். இங்ஙனம் பழங்களின் இனிப்புச் சுவை 'தீம்' என்னும் சொல்லால் புலவர்களால் புனையப்பட்டுள்ளது.

## பாலின் சுவை உணர்வு

சங்க மக்கள் பசு, எருமை, ஆடு போன்ற விலங்குகளின் பாலினை இனிமையென உண்டு மகிழ்ந்துள்ளனர்.

## எருமைப்பால்

மருதநில இளஞ்சிறார்கள் எருமைகளின் இனிய பாலைக் கறந்துகொள்ளும் பொருட்டு, அவற்றின் கன்றுகளைத் தொழுவத்திலே விட்டுவிடுதலை,

"மன்ற எருமை மலர்தலைக் காரான்

இன்தீம் பாற்பயம் கொண்மார் கன்றுவிட்டு" (நற்.80:1-2)

எனப் பூதன் தேவனார் புனைவர். இதில் எருமையின் இனிய பாலைத் 'தீம்பால்' எனச் சுட்டியுள்ளதன் மூலம் அதன் சுவையுணர்வு அறியப்படுகின்றது.

## தேன்கலந்த பால்

சங்க மக்கள் பாலின் இனிமையைக் கூட்ட அதனுடன் தேன் கலந்து பருகியுள்ளனர். செவிலித்தாய் தேன்கலந்த இனிய பாலைக் கையில் ஏந்தியவண்ணம், தலைவியின் கூந்தலைக் கோதியவாறு நயமாகப் பேசி உண்ணச் செய்தாலும் தலைவி உண்ணமறுத்தலை"[13] அகநானூறு சுட்டும். பால், தேன் கலந்தாற்போன்று சுவையுடன்

இருந்தமையை "பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்" (நற்.110:1) எனப் போதனார் குறிப்பிடுவர். நெய் சேர்த்த பால் மிக இனியதாக இருந்தமையை, "நெய் பெய் தீம்பால்" (நற்.172:3) என்ற அடிகள் விளக்கும். இங்ஙனம் பாலின் இனிப்புச் சுவையை 'தீம்'[14] என்னும் சொல்லால் சங்கப் புலவர்கள் புனைந்துரைத்துள்ளனர்.

### நீரின் சுவை

உலகம் இயங்க இன்றியமையாதது நீர். இதனையே வள்ளுவர் 'நீரின்றி அமையா உலகம்' என்பர். அருந்துதல், உறிஞ்சுதல், குடித்தல், பருகுதல் என்ற நிலைகளில் நீர் உண்ணப்படுகிறது. சங்க மக்கள் பருகிய அருவி, புனல், சுனை, கிணறு, துறை, கூவல், அழுங்கல் ஆகியவற்றிலுள்ள நீரினை 'தீம்'[15] என்ற சொல்லால் புலவர்கள் புனைந்துள்ளனர். தீம் என்பது இனிமைச் சுவையினைக் குறிக்கும். கலித்தொகையில் நீர் உண்போர் நீர் வேட்கையைத் தணிக்க இனிது என உண்பதையும், அந்நீர் இனிதாய் இல்லையெனில் உண்ணாததையும்,

"வேட்டார்க்கு இனிது ஆயின் அல்லது நீருக்கு இனிது என்று
உண்பவோ நீர் உண்பவர்" (கலித்.62:10-11)

எனக் கபிலர் புனைவர். "மலைப்பிளவுகளின்று ஓடிவரும் குளிர்ந்த நீர் தேன் கலந்தது போன்று இனிப்புடன் இருந்தமை"[16] வெள்ளிவீதியாரால் புனையப்பட்டுள்ளது.

### கூவல் நீர்

தலைவனது நாட்டிலுள்ள நீரின் தன்மையைத் தோழி வினவியபோது, அதற்குத் தலைவி, நம் காதலர் நாட்டிலுள்ள உதிர்ந்த தழையால் மூடப்பட்ட கிணறுகளின் அடிகளில், விலங்குகளால் உண்ணப்பட்டு எஞ்சி நிற்கும் கலங்கிய சின்னீரும், தன்னுடைய வீட்டின் புறத்தேயுள்ள

தோட்டத்தில் கிடைக்கும் இனிய தேனொடு கலந்த பாலினும் மிக்க நீரைக் காட்டிலும் இனிமையுடையதாக இருத்தலை,

"நம்படப்பைத், தேன் மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு

உவலைக் கூவற் கீழ்

மான் உண்டு எஞ்சிய கலிழிநீரே" (ஐங்.203:1-4)

எனக் கபிலர் உரைப்பர். இதில் கலிழிநீர் உண்ணத்தக்கதன்று. எனினும், தலைவன் மேல் கொண்ட காதல் மிகுதியால் அவன் நாட்டுக் கலங்கல் நீர் தலைவிக்கு இனிப்புச் சுவையுடன் இருப்பதாக உரைப்பது புலவனின் காதல் மனநிலைக்குச் சான்றாகும். கணவனோடு ஒன்றுபட்ட மனதை உடைய மனைவியின் உணர்வை விளக்க இனிப்புச் சுவையைக் கபிலர் பயன்படுத்தியுள்ளார்.

## கரும்பு

கரும்பின் சாறு மிக இனிய சுவையை உடையது. இதன் சாறிலிருந்து சர்க்கரை, வெல்லம் போன்ற உணவுப் பொருட்கள் தயாரிக்கப்படுகின்றன. இதன் சுவையை,

"தீம்கண் கரும்பின் கழை" (கலித்.40:28)

"தேம் பொதி கொண்ட தீம்கழைக் கரும்பு" (குறுந்.85:4)

"தீம்சுவை மென்கழைக் கரும்பு" (அகநா.346:6-7)

எனச் சங்கப் புலவர்கள் புனைந்துள்ளனர். இங்ஙனம் இனிப்புச் சுவை 'தீம்' என்னும் சொல்லால் புனையப்பட்டுள்ளது. இனிப்புச் சுவையுணர்வு அனைத்தும் மனம் ஒத்தவர்களின் அன்பு வாழ்வை வெளிப்படுத்த புனையப்பட்டுள்ளமை சுட்டத்தக்கது.

### கைப்புச் சுவை உணர்வு

சங்கப் புலவர்கள் கைப்புச் சுவை உணர்வை வேப்பங்காய், பாகற்பழம் ஆகியவற்றின் சுவையை விளக்கும் நிலையில் புனைந்துள்ளனர். வேப்பங்காய் மிகுந்த கசப்புச் சுவையுடையது. இளமைப் பருவத்தில் தலைவி தலைவனுக்கு வேம்பினது பசிய காயைத் தரினும் அதனை இனிய கரும்புக் கட்டி என்று தலைவன் உண்டதை,

"வேம்பின் பைங்காய் என்தோழி தரினே

தேம்பூங்கட்டி என்றனிர்" (குறுந்.196:1-2)

என்பர் மிளைக்கந்தனார். இதில் திருமணம் முடிந்த சூழலில் கைப்புச்சுவையுடைய உணவும், தலைவியின் கைப்பட்ட நிலையில் இனிப்பதாக உரைப்பது அன்பின் மிகுதிக்கு இனிப்புச் சுவையுணர்வு பயன்படுத்தப்பட்டதை விளக்கும்.

"கசப்புத் தன்மை மிகுந்த பாகற் பழத்தின் செங்கனியை மயில்கள் விரும்பி உண்டமை"[17] இரு பாடல்களில் மட்டும் இடம்பெற்றுள்ளது. இதனால் கைப்புச்சுவையைப் புலவர்கள் விரும்பிப் பாடவில்லை என்பது புலனாகும்.

### புளிப்புச்சுவை உணர்வு

சங்க மக்கள் அறுசுவைகளில் புளிப்புச் சுவையையே பெரிதும் விரும்பியுள்ளனர். இதனைப் பின்வரும் பகுதிகள் விளக்கும்.

### தயிர்ச் சோறும் ஈசலும்

தலைவன் தலைவியை விரைந்து மணமுடித்தால், "தலைவி, சிறிய தலையினையுடைய செம்மறியாட்டின் பாலிலிருந்து கிடைத்த தயிரினை உலைநீராக்கி, கொல்லையில் விளைந்த வரகினைக் குற்றி அரிசியாக்கி

அதிலிட்டு, மழை மிகுதியாகப் பெய்தமையால் புற்றிலிருந்து வெளிவரும் ஈசலையும் அதிலிட்டுச் சமைத்து அச்சோற்றில் பசுவின் வெண்ணெய்யும் பெய்து ஏவலர்களுக்கு உண்ணக்கொடுப்பள். தலைவனுக்குப் பாலிற்செய்த உணவினை உண்ணக் கொடுப்பள்"[18] என உரைப்பள் தோழி. இதில் தயிரும் ஈசலும் சேர்ந்த சோறு புளிப்புச்சுவையுடன் இருந்தது என்பது புலவரின் புளிப்புச்சுவையுணர்வினை விளக்கும்.

### பிரம்பங்கறி

பிரம்பங்கொடியின் கனி புளிப்பும், இனிப்பும் கலந்த சுவையுடையது. பாண்மகளிர் தங்கள் கணவன்மாராகிய பாணர்களுக்கு "இருள் புலரும் விடியற்காலத்தே ஆம்பலது அகன்ற இலையில் சுடுகின்ற சோற்றுத் திரள்களில் பிரம்பின் புளிப்பும் இனிப்பும் கலந்த திரட்சியான பழத்தினைக் கொண்டு ஆக்கிய புளியங்கறியை இட்டு உண்பிக்கக்"[19] கொடுத்தமையைப் பரணர் புனைவர். இதில் புளிப்பும் இனிப்பும் கலந்த சுவையுணர்வு சுட்டப்பட்டுள்ளது.

### தீம்புளிப்பாகல்

குறுந்தொகையில் புதிதாகத் திருமணமான பெண் (தலைவி) தன் கணவனுக்குக் குழம்பு சமைத்தலை,

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇ
குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்
தான் துழந்துஅட்ட தீம்புளிப் பாகர்
இனிதுஎனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே" (குறுந்.167)

எனப் புனைவர் கூடலூர்கிழார். இதில் புளிப்புச்சுவையை விரும்பிய

மக்கள் கட்டித் தயிரினைக் கொண்டு தீம்புளிப்பாகல் என்னும் ஒருவகைக் குழம்பினை ஆக்கியமை சுட்டப்பட்டுள்ளது. மேலும் இக்குழம்பு இனிப்பும் புளிப்பும் கலந்த சுவையுடையது. தற்காலத்தில் இது மோர்க்குழம்பு என அழைக்கப்படுகிறது. புதிய தயிரினில் மோர்க்குழம்பு செய்தால் இனிப்பும் புளிப்பும் கலந்த சுவையில் காணப்படும். நாள்பட்ட தயிரினில் குழம்பு செய்தால் புளிப்புச் சுவையுடன் காணப்படும். இதனை நுட்பமாகப் புலவர்கள் புனைந்துள்ளமை அவர்தம் சுவையுணர்விற்குச் சிறந்த சான்றாகும்.

## ஊன் உணவில் புளிப்புச் சுவை

சங்க காலத்தில் இறைச்சியோடு கலந்த உணவினை ஊன்புழுக்கு எனச் சுட்டியுள்ளனர். இறைச்சித் துண்டங்களை நெய்கொண்டு வதக்கி அதனுடன் நீர், தயிர் சேர்த்து அரிசியையும் அதிலிட்டு ஆக்கப்படும் உணவிற்கு ஊன்புழுக்கு என்று பெயர். சங்க மக்கள் திருமணமாகிய வதுவைக்கு வந்திருந்தவர்களுக்கு நெய்மிக்க வெண்மையான அரிசியை இறைச்சியுடன் சேர்த்துக் குற்றமற ஆக்கி, உண்பிக்கச் செய்தமையை,

"மைப்பு அறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணி" (அகநா.136:1-2)

என்று விற்றூற்று மூதெயினார் குறிப்பிடுவர். இதில் திருமண விருந்தாக ஊன்புழுக்கு இடம்பெற்றுள்ளமையை அறியமுடிகின்றது.

## மான் இறைச்சியில் ஊன் புழுக்கு

மான் இறைச்சியோடு மூங்கில் அரிசியைச் சேர்த்து ஊன் புழுக்கு, சமைத்து உண்டமையைக் காரிக்கண்ணனார் குறிப்பிடுவர். இதனை, "புலியானது ஆண்மானை அடித்துக் கொன்று வயிறு நிறையுமளவு தின்றுவிட்டுப்போன காய்ந்த இறைச்சியை, வழிச்செல்லும் வம்பலர்கள்

கண்டு மகிழ்ச்சி அடைந்தனர். அவ்விறைச்சியை அவ்விடத்தே தழைத்த மூங்கிலின் விளைந்த நெல்லரிசியுடன் ஒருங்கே கூட்டி ஆயர் சேரியிலுள்ள தயிரையும் இட்டு, வெள்ளிய நிணத்தை உருக்கிக் கூட்டிச் சமைத்த வெண்மையான சோற்றை, அகன்ற தேக்கு மரத்தின் இலைகளில் வைத்து உண்டுள்ளனர்"[20] இதில் மானின் இறைச்சியில் சுவை சேர்க்க, அதனோடு தயிர் சேர்த்துச் சமைக்கப்பட்டமையும் அதனால் அவ்விறைச்சி புளிப்புச் சுவையுடன் இருந்தமையும் புலனாகும்.

## அயிலைமீன் குழம்பு

சங்க மக்கள் ஊன் உணவில் மீன்களையும் சுவையுடன் ஆக்கி உண்டுள்ளனர். மீனினைப் பெரும்பாலும் குழம்பாக்கிச் சோற்றுடன் உண்டு மகிழ்ந்துள்ளமையைப் புலவர்கள் புனைந்துள்ளனர்.

"அயிலை என்பது வேலைக் குறிக்கும். வேல் போன்ற உருவுடன் காணப்படும் மீன் அயிலை என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பர்."[21] அகநானூற்றில், மீன்பிடித் தொழிலில் ஈடுபட்டுள்ள தந்தைக்கு, அவனது மகள் உப்பு விற்று வாங்கிவந்த நெல்லாலே ஆக்கப்பட்ட மூரலாகிய வெண்சோற்றில் புளிக்கரைசல் இட்டு ஆக்கிய அயிலை மீன் குழம்பினை ஊற்றி உண்ணக் கொடுத்தலை,

"நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு
உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு
அயிலை துழந்த அம் புளிச் சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்" (அகநா.60:3-6)

எனக் குறிப்பிடுவர் குடவாயிற்கீரத்தனார்.

## வரால் மீன் குழம்பு

வராலில் பெரியதையே சங்க மக்கள் பெரிதும் விரும்பி உண்டுள்ளனர். "வரால் மீனின் தலை தட்டையாக, பெரிய செதில்களுடன் பாம்பின் தலைபோன்று காணப்படும். வரால் மீனில் மூன்றுவகை உண்டு. வரியுடன் இருப்பதை வரிவரால் என்று சங்க நூல்கள் குறிப்பிடும். இந்த வராலே பெரும்பாலும் காணப்படுவது"[22] என்பர் பி.எல்.சாமி.

செல்வச் செழிப்பு மிக்க "மருதநில உழவன், விடியற்காலத்தே, கரிய கண்களையுடைய வரால் மீனின் பெரிய துண்டங்களை, அவைமிளிரும் வண்ணம் குழம்பிலே பிறழவிட்டு சோற்றுத் திரள்களுடன் மிகவும் விரும்பி உண்டுள்ளதையும், அவ்வுணவை உண்ட மயக்கத்தோடு உழவு வேளைக்கு உழத்தியரோடு சென்றதையும்"[23] தூங்கலோரி புனைவர். இதில் குழம்பின் சுவை சுட்டப்படவில்லை. எனினும் மீன்குழம்பு புளிகொண்டு செய்யப்படும் குழம்பாதலால் புளிப்புச் சுவையை உணர்ந்த புலவர்கள் அவை செய்யும் முறையை விரிவாகப் புனைந்துள்ளனர். இங்ஙனம் இறைச்சி, மீன் ஆகியவற்றைப் புளிப்புச் சுவையுடன் தொடர்புபடுத்திப் புலவர்கள் உரைத்துள்ளனர்.

## காய், பழங்களின் சுவையுணர்வு

இயற்கையில் விளையும் பொருள்களில் காய்கறிகளுக்கு முதன்மையான இடமுண்டு. "புலால் உணவைக் காட்டிலும் உடல் நலத்திற்கும், உரத்திற்கும் காய்கறி உணவே சிறந்தது என்னும் கோட்பாடு உலகெங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாகும். புலால் உணவை மட்டும் உண்ட மேல்நாட்டினரும்கூட இன்று காய்கறி உணவே சிறந்தது என்ற கருத்தினை வழிமொழிகின்றனர். Vegeturian congress என்ற

இயக்கம் உலகெங்கும் பரவியுள்ளமை சிறந்த சான்றாகும்”[24] என்பர் பி.சரசு.

## புளியங்காய்

காய்களை “தோன்றிய நிலையில் பிஞ்சு என்றும், சற்று பருத்த நிலையில் காய் என்றும், பழுத்த நிலையில் பழம் அல்லது கனி என்றும் பெயரிட்டனர்.”[25] புளியங்காயின் பிஞ்சு, காய், செங்காய், கனி என யாவும் மிகுந்த புளிப்புச்சுவையுடையன. இதன் புளிப்புச்சுவையை நினைத்தாலே நாவில் எச்சில் ஊறும். இதனை “புளியங்காய் வேட்கைத்து” (ஐங்.51:3) என்பர் ஓரம்போகியார்.

## நெல்லிக்காய்

நெல்லிக்காய் புளிப்பும், துவர்ப்பும், இனிப்பும் கலந்த சுவையுடையது. நீர் வேட்கையைத் தணிக்கக்கூடிய கோடைகாலத்தில் இக்காய் மிகுதியாகக் கிடைக்கும். அதிக சத்துக்கள் அடங்கிய காய் என்பதால் ஏழைகளின் ஆப்பிள் எனப் போற்றப்படும். நாட்டுப்புறங்களில் ‘தினமும் ஒரு நெல்லிக்காய் உண்டுவந்தால் நீண்ட நாள் வாழலாம்’ என்ற வழக்கே நெல்லிக்காயின் சிறப்பினை உணர்த்தும்.

நெல்லிக்காய் பசிய நிறத்தில் காணப்படுவதால் “பைங்காய்”[26] என்றும், மிகுந்த புளிப்புச் சுவையுடன் இருத்தலால் “அம்புளி நெல்லி”[27] என்றும் புளிப்புச்சுவை இனிமையாக இருப்பதால் “தீஞ்சுவை நெல்லி”[28] என்றும், “சுவைக்காய்”[29] என்றும் புலவர்களால் சுட்டப்பட்டுள்ளது. மேலும் நெல்லிக்காயை உண்டு நீர் அருந்தினால் நீர் மிகுந்த இனிப்புச்சுவையுடன் மாறுவதை,

“புன்காழ் நெல்லி பைங்காய் தின்றவர்

நீர்குடி சுவையின் தீவிய மிழற்றி” (அகநா.54:15-16)

என்று குறிப்பிடுவர் மாற்றூர் கிழார் மகனார் சொற்றங்கொற்றனார். இவ்வாறு நெல்லிக்காயின் அனைத்துச் சுவைகளும் மிகச் சிறப்பாகப் புனையப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## பழங்களின் புளிப்புச் சுவையுணர்வு

பழங்களில் புளிப்புச்சுவையுடைய களாம்பழம், புளியம்பழம் ஆகியன சங்க இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளன. களாம் பழம் கருநிறமாகக் காணப்படும். இதன் கனி புளிப்புச்சுவையுடன் இருப்பதை அகநானூறு (39:4) சுட்டும். களர்நிலத்தில் விளைந்த புளியம்பழம் வழிச் செல்வோரின் பசியைப் போக்குதலை,

“களரி புளியின் காய்பசி பெயர்ப்ப” (நற்.374:3)

என்பர் வன்பரணர். இதில் புளியம்பழம் புளிப்புச்சுவையுடையதாக இருத்தலும் அதனைச் சுவைக்கும் பொழுது நாவில் எச்சில் ஊறுவதால் பாலைநிலத்தில் செல்வோரின் பசியினையும் நீர் வேட்கையையும் தணிக்கும் செயலும் சுட்டப்பட்டுள்ளது. இதில் நேரடியாகச் சுவை சுட்டப்படவில்லை.

## கள்ளின் சுவையுணர்வு

சங்க மக்கள் உணவில், ‘கள்’ முக்கிய இடம்வகித்துள்ளது. விருந்தினரை உபசரிக்கவும், புலவர்களைச் சிறப்பிக்கவும், வீரத்தை வெளிப்படுத்தவும், நட்பினைப் பாராட்டவும், மகிழ்ச்சியை வெளிப்படுத்தவும் கள் உண்ணப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் கள் மகிழ், தேறல், களி, நறவு, பிழி, அரியல், மது எனப் பல்வேறு பெயர்களால் குறிக்கப்பட்டுள்ளது.

கள்ளை கலங்கிய கள்ளென்றும், தெளிந்த தேறல் என்றும் இருவகைப்படுத்தியுள்ளனர். கலங்கிய கள் களிப்பு மிகுதியுடையது. தேறல் எனும் கள் தெளிவும் இனிமையும், புளிப்புச் சுவையும் உடையது.

## இன்கடுங்கள்

மருதநிலச் சேரியில் மத்தளத்தின் இசையோடு காண்பார் மிக மகிழுமாறு பெண்கள் கூத்தாடினர். இப்பெண்களுக்கு அகுதை என்பான் இனிமையும் கடுப்பும் கொண்ட கள்ளினைப் பரிசாக நல்கியதைப்”[30] பரணர் சுட்டுவர். “உறையூர் என்னுமிடத்தைச் சுட்டும் பொழுது கரும்புமிக்க கள்ளினையுடைய ஊர்”[31] என்று உறையூர் முதுகூத்தனார் புனைவர். கள் தயாரிக்கும் பொழுது இனிப்புச்சுவையுடனும், நாள்பட்ட கள் புளிப்பும் கடுப்பும் நிறைந்த சுவையுடனும் இருப்பதைப் புலவர்கள் புனைந்துரைத்துள்ளனர்.

## கடுப்புச்சுவையுடைய கள்

குறிஞ்சி நிலத்தில் குறவர்களின் வீட்டின் முற்றத்திலுள்ள மாமரத்தின் தேனெனக் கூறத்தக்க சுவையினையுடைய இனிய முதிர்ந்த கனிகளுடன், தேன்நாற்றமுடைய பூநாறு பலாப்பழத்தின் சுளைகளையிட்டுத் தேன்கலந்து கூட்டியாக்கிய கள்ளினை நீண்ட மூங்கில் குழாய்களுள் ஊற்றி அடைத்தனர். நாட்பட்டு முதிர்ந்தமையால் கூடிய வேகங்கொண்ட பாம்பினது சீற்றத்தை ஒத்த வெறியையுடைய அக்கள்ளினை முதலில் தெய்வம் வாழும் மலைக்குப் படைத்துப் பின்னர் தளிரால் ஆன தழையாடையை அணிந்த மகளிர் உண்பிக்க, அதனைப் புனங்காக்கும் குறவர்கள் வயிறார உண்டு மயங்கியிருந்தமையை”[32] சேந்தன் கூத்தனார் புனைவர். இதில் பலாவின் சுளையிலிருந்து தயாரித்த கள் இனிப்புச் சுவையுடன் இருப்பதால் கடும் புளிப்புச்சுவை வேண்டி

அதனை நீண்ட நாள்கள் மூடிவைத்ததும் அக்கள் பாம்பு கொட்டியது போன்ற கடுப்புச்சுவையுடன் இருப்பதும் சுட்டப்பட்டுள்ளது.

## தேறல்

அழகிய மூங்கிற் குழாயிலே இருந்து முற்றின தேனாற் செய்த கள்ளின் தெளிவை, வண்டுகள் வந்து வீழ்ந்து உழக்கிய மாலையை அணிந்த மகளிரும் மைந்தரும் உண்டு மகிழ்ந்ததை,

"அம்பணை விளைந்த தேக்கட் தேறல்

வண்டுபடு கண்ணியர் மகிழும்" (அகநா.368:14-15)

என்பர் மதுரை மருதனிளநாகனார். இவ்வாறு கள்ளினை இனிப்பும் புளிப்பும் கலந்த சுவையில் தயாரித்து உண்டுள்ளனர். இனிமை நிறைந்த கள்ளினையும் புளிக்கவைத்து உண்ட சுவையினால் புலவர்கள் இச்சுவையைச் சிறப்புறப் புனைந்துரைத்துள்ளனர்.

## கள்ளின் மயக்கம் தீர்க்கும் புளிப்புச்சாறு

உழவர்கள் கள்ளுண்ட மயக்கத்தைப் போக்க, "வளப்பம் பொருந்திய தளிர்களையுடைய மாமரத்தில் கிளி போன்ற வடிவினையுடைய காய்களைக் கிளைகளினின்றும் கொத்தாகக் கிள்ளி எடுத்து, அவற்றைப் புதிய குடங்களில் இட்டு அவற்றொடு புளிக்கும் பதனைச் சேர்த்து, அக்காய்களினின்றும் மிகுதியாக ஊறிப்பெருகிய சாற்றினை, வெய்யிலில் காயவைத்துப் பதப்படுத்திக் குடித்துத் தொழிற்களைப்பும், கள்ளுண்ட மயக்கமும் தீர்ந்தனர்"[33] என விற்றூற்று மூதெயினார் புனைவர். இதில் மாங்காயின் ஊறிய புளிப்புச் சாறினை உண்டமை சுட்டப்பட்டுள்ளது. மேற்சுட்டியவற்றால் சங்க மக்களின் புளிப்புச்சுவையுணர்வை அறிய இயலும்.

## கார்ப்புச்சுவையுணர்வு

சங்க மக்களின் கார்ப்புச்சுவை உணர்வைப் புலவர்கள் வெளிப்படச் சுட்டவில்லை. எனினும் தலைவனின் வரைவு முயற்சியை அறிவித்த குற்றேவல் செய்பவனுக்குத் தலைவி அவன் விரும்பும் உணவான காடைக்கறியை மிளகு சேர்த்து ஆக்கி உண்ணக் கொடுத்ததை,

"நெய்கனி குறும்பூழ் காயமாக
ஆர்பதம் பெறுக" (குறுந்.389:1-2)

என்பர் வேட்டக்கண்ணனார். இதில் 'காயம்' என்பது மிளகினைக் குறிக்கும். நெய்யும், மிளகும் சேர்த்த காரக்கறியான குறும்பூழ் இறைச்சியை உண்ணக் கொடுத்தலைப் புலவர் புனைந்துள்ளார்.

## துவர்ப்புச்சுவையுணர்வு

சங்க மக்கள் விளாம்பழத்தினை மிகவும் விரும்பி உண்டுள்ளனர். இதனை,

"கம்பலத் தன்ன மைப்பயிர்த்தாம், வெள்ளில்வல்சி" (நற்.24:4-5)

என்னும் அடி விளக்கும். இதில் வெள்ளில் என்பது விளாம்பழத்தினையும், வல்சி என்பது உணவினையும் குறிக்கும். இவ்விளாம்பழம் பாலைவழிச் செல்வோர்க்கு உணவாகப் பயன்பட்டுள்ளது. விளாவின் கனி புளிப்பும், துவர்ப்புமான சுவையையுடையது. இதன் துவர்ப்புச் சுவையைப் போக்க வெல்லம் சேர்த்து இன்றைய மக்கள் உண்பர். சங்க மக்களும் விளாம்பழத்தின் சுவையினை உணர்ந்துள்ளனர் என்பதைப் புலவர்களின் புனைவால் அறிய முடிகின்றது.

## உவர்ப்புச் சுவையுணர்வு

உவர்ப்புச் சுவையுடைய உப்பினை சங்க மக்கள் அதிகளவில் பயன்படுத்தியுள்ளனர். 'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே'

என்பதற்கேற்ப உப்பில்லா உணவு முழுமையான சுவையைத் தருவதில்லை. ஆதலால் உப்பின் சுவையை “வெண்கல் அமிழ்தம்” (அகநா.207:2) என அமிழ்தத்தின் சுவையுடன் போற்றி உரைப்பர் சேந்தம்பூதனார்.

## நீரின் உவர்ப்புச்சுவை

குறுந்தொகையில், பாரியின் பறம்புமலையிலுள்ள குளிர்ந்த இனிமையுடைய சுனை நீர் தலைவியின் கைபட்ட காரணத்தால் தலைவனுக்கு உவர்ப்புடையதாயிற்று என்பதனை,

“பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கட் டண்ணிய தரினும்
வெய்ய வுவர்க்கும் மென்றனிர்” (குறுந்.196:3-5)

என்பர் மிளைக்கந்தனார். இதில் தலைவன் தலைவியின் மீது கொண்ட அன்பு மாறுபாட்டை நீரின் தன்மை மூலம் புலவர் புனைந்துள்ளார். இவ்வாறு உவர்ப்புச் சுவையுணர்வு புலவர்களால் சுட்டப்பட்டுள்ளது.

## இறைச்சியின் சுவையுணர்வு

சங்க மக்கள் பல்வகையான இறைச்சி உணவுகளைச் சுவைத்து மகிழ்ந்துள்ளனர். இங்கு சுவைத்தல் என்று சுட்டப்படுவது மக்கள் இறைச்சி மீது கொண்ட விருப்பத்தினைக் குறிக்கும். பெரும்பாலும் இறைச்சியை நெய்சேர்த்தும் வேகவைத்தும் சுட்டும் உண்டு மகிழ்ந்தமையைப் புலவர்கள் புனைந்துள்ளனர்.

“சந்தன விறகால் தீமூட்டிச் சமைக்கப்பட்ட ஊன்கலந்த உணவினை வேடர்கள் உண்டு ஆடிப்பாடி மகிழ்ந்தமையை”[34] மதுரைப் பாலாசிரியர் நப்பாலனார் புனைவர். இதில் இறைச்சியினைச் சுட்ட

செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. தலைவி இரவினில் வந்த விருந்தினர்களுக்கு நெய்விட்டு வறுத்த கொழுவிய தசையினையுடைய ஊனினை உண்ணக் கொடுத்தலை,

"எல்லி வந்த நல்லிசை விருந்திற்குக்
கிளரிழை அரிவை நெய்துழந்து அட்ட
விளர் ஊன்" (நற்.41:6-8)

என இளந்தேவனார் குறிப்பிடுவர். இதில் நெய்யினால் வறுத்த கறியின் சுவை சுட்டப்பட்டுள்ளது. இதனால் நெய் சுவையைக் கூட்டும் காரணியாக உள்ளமை விளக்கும்.

## தொகுப்புரை

மனிதன் உயிர்வாழ்வதற்கு இன்றியமையாதனவற்றுள் உணவும் ஒன்று. உடம்பை வளர்ப்பதற்கு மட்டுமின்றி உயிரைப் பேணிக் காப்பதற்கும் சிறந்த மருந்தாக உணவு திகழ்கிறது.

தொல்காப்பியர் நாவினால் உணரப்படும் சுவையுணர்வை இரண்டாவதாக வரையறுத்துள்ளார். நாவினால் கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, புளிப்பு, மதுரம் போன்ற சுவையுணர்வை உணரமுடியும்.

சங்க மக்கள் உணவில் இனிப்புச் சுவை சிறப்பிடம் பெற்றுத் திகழ்ந்துள்ளது. பாலின் இனிமை கருதி அதனுடன் சோற்றினைச் சேர்த்து, பாற்சோறும் பாற்பொங்கலும் ஆக்கி உண்டுள்ளமையும், பாலோடு பசியஅவல், கரும்புச்சாறு, தினையரிசி, இறைச்சி போன்றவற்றைக் கலந்து 'பாசவல்' என்ற இனிப்புச் சுவையுடைய உணவினை ஆக்கிச் சுவைத்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது.

பழங்கள் பெரும்பான்மை இனிப்புச் சுவையுடையது. சங்க இலக்கியத்தில் மா, பலா, வாழை, இருப்பை, அத்தி ஆகிய பழங்களின் சுவை, 'தீம்' என்னும் சொல்லால் வழங்கப்பட்டுள்ளது.

பால் இயல்பிலே இனிப்புச்சுவையுடையது. அதன் இனிமையை மேலும் கூட்டுவதற்காக, தேன் கலந்தும் நெய்கலந்தும் சுவையாக உண்டமையைப் புலவர்கள் புனைந்துள்ளனர்.

புலவர்கள் அக்கால மக்களின் புளிப்புச்சுவை உணர்வை முற்றிய தயிரினால் சோற்றுணவு தயாரித்தல், அத்தயிரினால் தீம்புளிப்பாகல் என்ற இனிமையும், புளிப்பும் நிறைந்த குழம்பினை ஆக்குதல், தயிரோடு ஈசல், மானின் இறைச்சி சேர்த்துச் சமைத்தல் அயிலை, வரால் மீன்களில் புளிக்கறியாக்கியமை போன்றவற்றின் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர்.

மேலும் காய் பழங்களில் புளியங்காய், நெல்லிக்காய், களாம்பழம் ஆகியவற்றின் புளிப்புச் சுவையுணர்வு புலவர்களால் பாடப்பட்டுள்ளது. நெல்லிக்காயை உண்டபின் நீர் அருந்துவதால் ஏற்படும் இனிப்புச் சுவையும்கூடப் புலவர்களால் நுட்பமாக விளக்கப்பட்டுள்ளது.

கள் புளிப்புச்சுவையுடைய பானமாகும். இதன் இனிமையைக் கூட்ட பல நாட்கள் மூடிவைத்து, புளிப்பேறியவுடன் உண்டு மகிழ்ந்தமையும், ஆண்களும் பெண்களும் கள்ளின் புளிப்புச் சுவையை விரும்பி உண்டமையும் புலவர்களால் நுட்பமாகச் சுட்டப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

கள்குடித்த மயக்கம்தீர ஊறுகாயின் புளிப்பேறிய சாற்றினை உண்டு களைப்புத்தீர்ந்தமையும் புலவர்களால் புனைந்துரைக்கப்பட்டுள்ளது.

நெய்யில் வறுத்த குறும்பூழின் இறைச்சியுடன் மிளகினைச் சேர்த்துக் காரமாக உண்ணுதலில் கார்ப்புச் சுவையுணர்வு புனையப்பட்டுள்ளது.

விளாம்பழத்தின் துவர்ப்புச் சுவைபுலவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது. உப்பின் உவர்ப்புச் சுவை அமிழ்தம் என வழங்கப்பட்டுள்ளது.

புலவர்களின் நாப்புலனுணர்வுப் புனைவு, சுவையை உணர்த்துவதற்கு மட்டுமின்றி, தலைவன் தலைவியரின் அன்பை வெளிப்படுத்துவதற்கும் புலவர்களால் கையாளப்பட்டுள்ளது. உவர்ப்புச்சுவையுடைய தலைவன் நாட்டுக் கூவல் நீர் தலைவிக்கு, தேன் கலந்த பாலினும் இனிமையாக இருத்தலும், களவில் வேம்பின் காய் தலைவனுக்கு, தீஞ்சுவைப் பழமாகத் திகழ்தலும் அன்பு வெளிப்பாட்டில் சுவையுணர்வு முக்கிய இடம்பெற்றுத் திகழ்ந்தமையைப் புலப்படுத்தும்.

## சான்றெண் விளக்கம்

1. தொல்.நூ.964
2. சே.நமச்சிவாயம், தமிழர் உணவு, பக்.1-2
3. சே.நமச்சிவாயம், தமிழர் உணவு, ப.48
4. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.866
5. சே.நமச்சிவாயம், தமிழர் உணவு, பக்.149-152
6. ஞா.தேவநேயன், சொல்லாராய்ச்சிக்கட்டுரைகள், பக்.54-55
7. அகநா.394:2-11
8. மேலது, 37:12-14
9. மேலது, 237:9-14
10. குறுந்.8:1, நற்.280:1
11. அகநா.244
12. மேலது, 81:1-3, நற்.279:1-3
13. அகநா.89:19-20, 105:4-5, 207:14-16
14. கலித்.111:1, அகநா.14:10, குறுந்.27:2, 187:2, நற்.57:5, 80:2
15. நற்.70:7, குறுந்.62:1, ஐங்.44:1
16. அகநா.362:1-2
17. அகநா.15:3-4, 177:9
18. அகநா.394:2-11
19. மேலது, 196:5-7
20. மேலது, 107:4-10
21. பி.எல்.சாமி, சங்க நூல்களில் மீன்கள், ப.20
22. மேலது, ப.67
23. நற்.60:1-6

24. பி.சரசு, தமிழ் இலக்கியத்தில் உணவியல், ப.23

25. சே.நமச்சிவாயம், தமிழர் உணவு, ப.81

26. ஐங்.381:1

27. அகநா.69:7

28. அகநா.241:13, குறுந்.209:1

29. அகநா. 271:7

30. மேலது, 76:1-3

31. மேலது, 137:6

32. மேலது, 348:2-9

33. மேலது, 37:7-11

34. மேலது, 172:13.

# கட்புலனுணர்வுப் புனைவு

சங்க இலக்கியம் காலத்தைக் கடந்தும் போற்றப்படுவதற்குக் காரணம் அதில் பொதிந்துள்ள கருத்துச் செழுமையே ஆகும். எல்லாப் பொருளும் இதன்பால் உள. இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லையாம் என்பதற்கேற்ப எல்லாவகை நிகழ்வுகளும் சங்கப் பாக்களில் இடம்பெற்றுள்ளன. சங்கப் புலவர்களும் தாம் கண்டதை, கேட்டதை, உணர்ந்ததை அப்படியே தம் கவிதைகளில் புனைந்துள்ளனர். புனைவுகளை வெளிப்படுத்த கண்ணே முக்கிய ஊடகமாகப் பயன்படுகிறது. கற்றலில் கேட்டலில் பார்த்தலே சிறந்தது என்ற தொடரும் கண்ணின் சிறப்பினை உணர்த்தும். தொல்காப்பியரும், "நான்கறிவதுவே அவற்றொடு கண்ணே"[1] என உரைப்பர். இதற்கு நாலறிவுயிராவது உடம்பினானும், வாயினானும் மூக்கினானும், கண்ணினானும் அறிவது. கண்ணினால் வெண்மை, செம்மை, பொன்மை, பசுமை, கருமை, நெடுமை, குறுமை, பருமை, நேர்மை, வட்டம், கோணம், சதுரம் என்பன அறியும்"[2] அறிவு என்பர் இளம்பூரணர். கண்ணினால் உணரப்படும் காட்சியினை, "பிறந்த மூன்றாம் வாரத்தில் குழவி, நகருகின்ற பொருட்களின் மீதும், வெளிச்சம் மிகுதியாக உள்ள பகுதிகளை நோக்கியும் தன்னுடைய கண்களைத் திருப்புகிறது"[3] என்பர். இங்ஙனம் சிறுவயதிலிருந்தே கண்களால் பார்ப்பவற்றை மனது பதிவுசெய்து கொள்கிறது. குழந்தை வளர்ந்து படைப்பாளியாக மாறுகின்ற பொழுது கண்ட காட்சிகள் படைப்புகளில் புனைவுகளாக வெளிப்படுகின்றன. இத்தகு சிறப்புடைய கட்புலனுணர்வுப் புனைவு பற்றி விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

## இயற்கைப் புனைவு

கட்புலனுணர்வுப் புனைவில் முதலிடம் பெறுவது இயற்கையாகும். இவ் இயற்கையைப் பற்றி, "வாழ்க்கைக்கு உள்ள முதன்மையும் தலைமையும் இல்லாவிடினும் புறக்கணிக்க முடியாத அளவுக்கு சிறந்த மதிப்பு இயற்கைக்கு உண்டு என்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் தெளிவாக்குகின்றன. மனித வாழ்க்கையை விளக்கும் முறையிலோ வாழ்வினை இயக்கும் இன்பதுன்பங்களின் பாவையாய் மனிதன் ஆடும் ஆட்டத்திற்குரிய பேரரங்கு என்னும் முறையில் இயற்கை அமைந்துள்ளது"[4] என்பர் மு.வரதராசனார்.

தமிழர்கள் இயற்கையை நிலத்தோடு தொடர்புபடுத்தி குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் பாகுபடுத்தினர். இதில் முதலாவதாக இடம்பெறும் குறிஞ்சி மலையும், மலைசார்ந்த பகுதியுமாகும்.

### மலை

தமிழ்நாட்டில் ஓடும் மலையை கிழக்குத் தொடர்ச்சிமலை, மேற்குத்தொடர்ச்சிமலை என இரண்டாகப் பிரிப்பர். இதில் மேற்குத்தொடர்ச்சிமலை இடைவெளியின்றி அகன்றும் விரிந்தும் பச்சைப்பசேல் என இயற்கை அழகுடன் காணப்படும். இம் மலையில் பல்வகை மரங்கள், பழமரங்கள், மணங்கமழும் பூச்செடிகள், செடிகொடி நிறைந்த புதர்கள், தேனுண்ணும் வண்டுகள், ஒலியெழுப்பும் பறவை இனங்கள், விலங்குக் கூட்டங்கள், மலைமீது தவழும் மேகங்கள் குளிர்ச்சியான காற்று, வீழும் அருவிகள், நீர் நிறைந்த ஏரிகள் என அனைத்தும் அமைந்து மனதிற்கு இதமாகவும் பார்ப்பதற்கு அழகுடனும் காட்சியளிக்கும். சங்க இலக்கியத்தில் இயற்கை எழில் சூழ்ந்த

மலையினைக் கபிலர், "மகளிர் நாணிநிற்குமாறு அழகுடைய தினைப்புனத்தில் தினைக்கதிர்கள் முற்றித் தலைசாய்ந்துள்ள மலை; மூங்கில் ஒலிக்கின்ற முழஞ்சினையுடைய மலை; கைகள் இரண்டையும் குவித்து தொழுவதுபோல கொத்துக்கள் அசையும் காந்தள் நிறைந்த மலை; கடுவனும் மந்திக்கூட்டமும் நிறைந்த மலை; முறுக்குவிரிந்த கொம்பு மறைந்த அடர்த்தியான மலர்கள் நிரம்பிய மலை; பூக்களில் தேனை உண்ணும் வண்டினங்கள் மிகுந்த மலை : களிற்றுயானை ஒன்றுதன் பெண் யானைக்குத் தலைச்சூலால் ஏற்பட்ட வயாநோய் நீங்குவதற்காக, இனிய கண்ணிலே கிளைத்த நீண்ட கிளைகளை உடைய கரும்புகளை அளிக்கக்கூடிய மலை"[5] என்று காட்சிப்படுத்துவர். இதில் மலையின் தோற்றத்தைக் குறிப்பிடாமல் அதில் இடம்பெற்றுள்ள மூங்கில், காந்தள்மலர், குரங்குக் கூட்டம், பூக்கள் நிறைந்த செடிகள், தளிர்கள் நிறைந்த மரங்கள், யானைகள் நிறைந்த கரும்புத்தோட்டம், தேன் உண்ணும் வண்டுகள் என அனைத்துக் கூறுகளும் அழகுறப் புனையப்பட்டுள்ளன.

## பலாவும் தேனும் நிறைந்த மலை

பலாமரங்களும் தேனடைகளும் நிறைந்த மலையினை,

"சாரற் பலவின் கொழுந் துணர் நறும் பழம்
இருங்கல் விடர் அளை வீழ்ந்தென வெற்பில்
பெருந்தேன் இறாஅல் சிதறும் நாடன்" (ஐங்.214:1-3)

என்று விளக்குவர் கபிலர். இதில் மலைச்சாரலின்கண் நிற்கின்ற பலாமரத்தின் செழுமை மிகுந்த கொத்தில் உள்ள இனிய பழம் கரிய மலைப்பிளவின்கண்ணுள்ள முழைஞ்சியில் வீழ்ந்தமையால், அங்குள்ள பெரிய தேனடை சிதறுவது சிறப்பாகப் புனையப்பட்டுள்ளது. மேலும்,

"குறவர்கள் குடம்போன்ற காயைக் கொண்ட ஆசினிப்பலாவையுடைய தோட்டத்தில் நீண்ட பலாவாய மரங்களின் உயர்ந்த கிளைகளில் உள்ள மின்மினிகளை விளக்காகக் கொண்டு வானிற் செல்லுகின்ற மழைமுகிலின் இயக்கத்தைக் காணுகின்ற நல்ல மலை"[6] என்று புனைவர் பெருங்கௌசிகனார்.

வானத்தில் மேகங்கள் ஊர்ந்து செல்வது பார்ப்பதற்கு அழகானதாகத் தோற்றமளிக்கும். அதிலும் இரவுநேரத்தில் பலாமரத்தோட்டத்தில் மின்மினிப் பூச்சிகளின் ஒளியில் காண்பது மிகமிக இனியது. இயற்கை ஆர்வலர்களுக்கு இன்பம் அளிக்கக்கூடியது. இவ் இனிய காட்சி புலவரால் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

### தேன்கூடு நிறைந்த மூங்கிற்காடு

தலைவனது நாட்டின் மலைச்சிறப்பைத் தலைவி "தேன்கூடுகள் நெருங்கித் தொடுக்கப்பெற்ற குளிர்ச்சி பொருந்திய குகைகளையுடைய பக்கமலைகளோடு கூடிய பெரிய மலைகளின் பிளப்புகளின் இடையே, நீண்டு வளர்ந்த சிறிய இலைகளைக் கொண்ட சந்தனமரத்தின் மெல்லிய கிளைகள் தீண்டுமாறு, மேலே தேன் இறால்கள் தொங்கும் நீண்ட உச்சியினையுடைய மூங்கிற்காடுகளைத் தன்னிடத்தே கொண்ட மலையை"[7] என்றுரைப்பள். இதில் தேன்கூடுகள் நிறைந்த குகைகள், சந்தன மரங்கள் நிறைந்த மலை, தேன் இறால்கள் தொங்கும் மூங்கிற்காடுகள் என மலையினது சிறப்புகள் காட்சிப்படுத்தப் பட்டுள்ளன.

### சாரல்

சாரல் என்பது பக்க மலையைக் குறிக்கும். அதாவது மலையின் சரிவான பகுதி சாரலாகும். சாரலில் மரங்கள் காணப்படுவது, மேலிருந்து

கீழ் வீழும் படுக்கை போலவும், இரண்டு பக்கமலைக்கு நடுவே அருவி வீழ்வது பச்சைக்கம்பளத்தில் வெள்ளிசேர்த்ததுபோல மிக இனிய காட்சியாகத் தோற்றமளிக்கும். இதனை, யானை முழங்குதற்கு இடனான பக்கமலையில் மூங்கில் நெருக்கமாக உயர்ந்து வளர்ந்துள்ள மலைச்சாரலில் தேனொடுகலந்து விளங்குகின்ற வெண்ணிற அருவி இன்னொலி எழுப்பும் வாத்தியத்தைப் போன்று 'இம்' என்னும் ஓசையுடன் மலைக்குகைகளும், மலைப்பிளப்பிடங்களும் எதிரொலிக்குமாறு வந்து வீழ்தலை,

"வாரணம் உரறும் நீர்திகழ் சிலம்பில்
பிரசமொடு விரைஇய வயங்குவெள் அருவி
இன் இசை இமிழ் இயம்கடுப்ப, இம்மெனக்
கல்முகை விடர் அகம் சிலம்ப, வீழும்
காம்புதலை மணந்த ஓங்கு மலைச்சாரல்" (அகநா.172:1-5)

என்ற அடிகள் விளக்கும்.

**இமயமலை**

இமயமலை பனிப்போர்வை போர்த்தி அழகாகக் காட்சியளிப்பதை,

"புகையின் பொங்கி, வியல் விசும்பு உகந்து
பனிஊர் அழற்கொடி கடுப்பத் தோன்றும்
இமயச் செல்வரை" (அகநா.265:1-3)

என்பர் மாமூலனார். இதில் அகற்சியையுடைய விண்ணகரப் பரப்பில் உயர்ந்து தோன்றி, புகைபோலப் பொலிவுற்றுத் திகழும். எரிகின்ற தீச்சுடர் போன்று தோற்றம் தரும் பனியொழுகும் இமயமலை என இமயமலையின் காட்சி அழகுறப் புனையப்பட்டுள்ளது. இப்புனைவின்வழி புலவர் இமயமலைக்குச் சென்றுவந்தமை புலனாகும்.

### அருவிப் புனைவு

குறிஞ்சி நிலத் தலைவனின் மலைநாட்டில் உள்ள அருவியின் சிறப்புகளைக் கபிலர் "ஒன்றுக்கொன்று எதிர் எதிர் ஓங்கிய பெருமையுடைய இருமலைகளின் அடுக்கடுக்கான மலைத்தொடர்கள் கொண்ட அகன்ற சாரல், விரிந்துவரும் கதிர்களைக் கொண்ட இளஞாயிற்றின் கிரணங்கள் பட்டு ஒளிவீசிக்கொண்டிருக்கும் பாறையில், அதிர்ந்த ஓசையுடன் இரு மலைகளினின்றும் அருவி வீழுகின்றது. அழகிய இலைகளின் மேலே அருவிநீர் வீழ்தலின் முதிர்ந்த கொத்துக்கொண்ட முழவு போலும் தளிரினை உடைய வேங்கையிடத்தே நெருப்புப் போலும் மலர்கள் மலர்ந்துள்ளன என்றுரைப்பர். மேலும் இக்காட்சியானது அழகிய புள்ளிகள் பொருந்திய மத்தகத்தோடு விளங்கும் இரு யானைகள் இரு பக்கங்களிலும் நின்று தம் துதிக்கைகளால் பூவொடு கூடிய நீரினைச் சொரிய தாமரை மலரில் அழகுடன் வீறுபெற்று விளங்கும் திருமகள் போன்று காட்சியளிப்பதாக உரைப்பர்."[8]

இன்றைக்குத் திருக்கோயில்களிலும், நிழற்படங்களிலும் காணப்படும் இலக்குமியின் தோற்றத்திற்கு, கபிலர் இயற்கையை இலக்குமியாகக் காட்சிப்படுத்தியதே அடிப்படை ஆகும்.

### ஆற்றுப் புனைவு

பெரிய இடமகன்ற நிலவுலகில் உலக உயிர்கள் யாவும் தழைக்கும்படியான தன் தொழிலைச் செய்துமுடித்த ஆறானது பல புள்ளிகளைக் கொண்ட பாம்பு ஓடும்போது அதன் முதுகு நெளிவதைப் போல நெளிந்து ஓடுதலை,

"பல்பொறி அரவின் செல் புறம் கடுப்ப
யாற்று அறல் நுணங்கிய" (நற்.157:3-4)

என்றுரைப்பர் இளவேட்டனார். ஆறு ஓடுகின்ற காட்சி பாம்பு நெளிந்து செல்வதோடு ஒப்புமைப்படுத்தப் பட்டுள்ளது.

## வானம்

வானத்தில் தோன்றும் வண்ணக் கோலங்களைக் கண்டு மயங்காதவர்கள் கிடையாது. அத்தகு வானத்தின் அழகை அகநானூறு,

"வெந்து ஆறு பொன்னின் அந்தி பூப்ப
ஐயறிவு அகற்றும் கையறு படரோடு
அகல் இரு வானம் அம்மஞ்சு ஈன" (அகநா.71:6-8)

என எடுத்துரைக்கிறது. இதில் உலைக்களத்துத் தீயில் வெந்து மெல்லமெல்ல ஆறிவரும் பொன்னின் நிறம் போல அந்திவானம், இருத்தலும் அவ்வானில் அழகிய மேகங்கள் தோன்றுவதும் அழகுறப் புனையப்பட்டுள்ளது.

## மின்னற் புனைவு

கடலிலிருந்து ஆவியாகும் நீர் மேகமாக உருவாகுகிறது. இம்மேகங்கள் அடுக்கடுக்காகச் சேரும் பொழுது கருமை நிறம் கொள்கின்றன. கருமைநிறங்கொண்ட கார்மேகங்கள் குளிர்ந்த காற்றுப் படுவதால் நீர்த்திவலைகளாக மழையைப் பொழிகின்றன. மழை மேகங்கள் ஒன்றை ஒன்று மோதிக்கொள்வதால் இடியும் உரசிக்கொள்வதால் மின்னலும் தோன்றுகின்றன. கரிய மேகத்தில் மின்னல் தோன்றுவது மலையானது கண்ணை விழித்து இமைப்பது போல காட்சியளிப்பதை,

"மலை இமைப்பது போல் மின்னி" (நற்.112:8)

என்ற அடிகள் விளக்கும். "இதுவரை மழைபெய்யாதிருந்த மேகங்கள், நிறைய மலர்ந்திருக்கின்ற காயா மரங்களையுடைய மலையிடத்தில்

இடையிடையே சரக்கொன்றை மலர்ந்ததுபோல, பெரிய மலைப்பிளப்பிடங்கள் எல்லாம் விளங்கும்படி மின்னலைச் செய்தலை,

"காயாங் குன்றத்துக் கொன்றை போல

மாமலை விடரகம் விளங்க மின்னி" (நற்.371:1-2)

என்றுரைப்பர் ஔவையார். இதில் காயா மலர்கள் இருள்நிறத்திலும், கொன்றைமலர்கள் மஞ்சள் நிறத்திலும் காணப்படுவதால் மேகத்திற்கும், மின்னலுக்கும் இவை காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

## கார்காலம் பற்றிய புனைவு

கார்காலம் முல்லைத்திணைக்குரிய பெரும்பொழுதாகும். இதற்குரிய சிறு பொழுது மாலையாகும். இக்காலம் ஆவணித்திங்களும், புரட்டாசித் திங்களும் ஆகிய இரு மாதங்களில் காணப்படும். அவ்வகையில் சங்க இலக்கியங்களைப் பாடிய புலவர்கள் கார்காலப் புனைவைச் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளனர். 'வெண் முல்லைக்கொடிகள் செம்முல்லைக் கொடிகளைத் தழுவி, நிலவொளி போலும் அரும்புகளைத் தோற்றுவித்து, கார்காலம் வந்தமையை

"தளவின் பைங்கொடி தழீஇ, பையென

நிலவின் அன்ன நேர் அரும்பு பேணி

கார்நயந்து எய்தும் முல்லை" (ஐங்.454:1-3)

எனப் பேயனார் உரைப்பர். அகநானூறு கார்கால வரவை "நீண்ட மேகம் நீலமணிபோலும் கருக்கொண்டு கரிய வானிலே இடியினை முழக்கி மழையினைப் பெய்தது. அதனால் நிலம் குளிரக் காடு தழைத்தது : உழு தொழிலுக்கு இனமாவாரையும், எருதினங்களையும் ஆராயும் உழவர்கள் இனிய குரல்கொண்டு ஒலிஎழுப்புவர். குட்டியினையுடைய இளைய பெண்மானைத் தழுவிக்கொண்டு முல்லைக்காட்டில், முறுக்குண்ட

கொம்பினையுடைய ஆண்மான் பசிய பயிரிடையே துள்ளித்திரியும். இவ்வாறாக மேகம் பெருமழை பொழியக் கார்ப்பருவம் வந்தது"[9] எனக் காட்சிப்படுத்துகின்றது.

கூரிய நுனியையுடைய களாவின் பூக்கள் மலர்ந்து மணம் செய்ய, பிடவமலர்கள் மொட்டு அவிழ்ந்து மலர்ந்து விளங்க, மேகம் மழையைப் பொழிந்து கார்ப்பருவத்தைத் தொடங்குதலை,

"களவுடன் கமழ, பிடவுத் தளை அவிழ

கார்பெயல் செய்த காமர் காலை" (நற்.256:7-8)

என்ற அடிகள் சுட்டும். கார்காலத்தில் மழை பெய்வதால் வறண்டிருந்த நிலம் குளிர்ச்சியடையும். புல், பூண்டுகள், மரஞ்செடி கொடிகள் தழைத்து தளிர் ஈன்று பூக்களைத் தோற்றுவிக்கும். பறவைகள் இன்பமாகப் பாடும். விலங்குகள் மகிழ்ச்சியுடன் தன் இணைகளோடு உலாவித்திரியும். மக்கள் வேளாண் தொழிலைச் சிறப்புடன் செய்ய முயலுவர். பிரிந்த காதலர்கள் ஒன்றுகூடுவர். இப்படி அனைத்து உயிர்க்கும் ஒருசேர மகிழ்வுறுதலைச் செய்யும் கார்காலப் புனைவை சங்கப் புலவர்கள் பலபட எடுத்துரைக்கின்றனர்.

## கூதிர் காலம்

குறிஞ்சித்திணைக்குரிய பெரும்பொழுதாக, கூதிர்காலத்தைச் சுட்டுவர்"[10] தொல்காப்பியர். இத்தகைய கூதிர்காலத்தைச் சங்கப்புலவர்கள் தம் பாடல்களில் புனைந்துள்ளனர். "மேகமற்ற வானத்தில் விண்மீன்கள் பூத்ததுபோல, முசுண்டைச்செடியில் வெண்ணிறப் பூக்கள் மலர்ந்து அழகுசெய்தன. கோவலர்கள் வெண்காந்தள் பூக்களை மிகுதியாகச் சூடிக்கொண்டனர். பகலில் பெய்த மழையால் வருந்திய பசுக்கூட்டங்களோடு, நனைந்த மாலைகளை உடையவராக ஊர் நோக்கி வந்துகொண்டிருந்தனர்.

மேகங்கள் ஒன்றொடொன்று இடித்து மழைபெய்தது. அதனால் தெருக்கள் தோறும் நீர் பெருகி ஒடிற்று"[11] எனக் கூதிர்பருவத்தைப் புனைந்துரைப்பர் உம்பற்காட்டு இளங்கண்ணார்.

## முன்பனிக்காலம்

பனிக்காலத்தை முன்பனி, பின்பனி என இரண்டாகப்பகுப்பர். யாமத்தின் முற்பகுதியிலிருந்து பனிபெய்யும் காலம் முன்பனிக்காலம் என்றும், பிற்பகுதியில் பனிபெய்யும் காலம் பின்பனிக்காலம் என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. முன்பனிக்காலத்தில் நடைபெறும் நிகழ்வுகளை "இருண்ட மேகமானது மிக்க மழையினைப் பெய்து ஓய்ந்தது ; பனித்துளிகள் பூக்களின் உள்ளே நிறைந்தன. தம் காதலரைப் பிரிந்த மகளிரது கண்களைப் போல கருநிறக் காக்கணம் பூவும் மலர்ந்தது. தூய்மையான சிவந்த மலர்களைக் கொண்டதும் புதர்களில் படரும் தன்மையதுமான ஈங்கைக் கொடியின் அழகிய தளிர்கள் அசைந்தாடின. அவரையின் பசிய பூக்கள் எங்கும் மலர்ந்து காணப்பட்டன. அகன்ற வயலிடத்தே கண்ணுக்கு இனிமைதரும் முற்றிய நெற்கதிர்கள் மண்ணோக்கித் தலைசாய்த்து கிடந்தன. வண்டுகள் கிளைகளில் மலரைச் சுற்றி மொய்த்துக் கிடந்தன"[12] எனக் காட்சிப்படுத்துவர் கழார்க்கீரன் எயிற்றியனார்.

## பின்பனிக்காலம்

மேகம் மழை பொழிதலை விட்டொழிந்தது. கரும்பினது வெண்ணிறப் பூக்கள், கோடைகாலத்துப் பூக்கும் பூளைப் பூக்களைப் போல வாடைக்காற்றில் அசைந்தாடின. புதல்கள் தோறும் பகன்றையானது நீலம் ஊட்டற்பெற்ற தோற்கிடுகின் நிறம் மறையும்படி அதன் மேல் பதித்த வட்டக்கண்ணாடி போல வெண்மைநிறத்துடன்

மலர்ந்தது. கொழுத்த இலைகளையுடைய அவரையின் அரும்புகள் அலர்ந்தன. பேரரும்புகள் மலர்ந்து விரிந்தன. குளங்கள் தோறும் பறவைக் கூட்டங்கள் கல்லென்று ஒலிசெய்தன. ஆடவரைப் பிரிந்து வாழும் பெண்கள் தம் நலமிழந்து நடுக்கம் கொண்டனர். இவ்வாறாக, பின்பனிக்காலம் வந்தமையை,

"பெய்துபுறந் தந்த பொங்கல் வெண்மழை,
எஃகுஉறு பஞ்சித் துய்ப்பட் டன்ன,
துவலை தூவல் கழிய, அகல் வயல்
நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்
கோடைப் பூளையின் வாடையொடு துயல்வர
பாசிலை பொதுளிய புதல்தொறும் பகன்றை
நீல்உண் பச்சை நிறம்மறைத்து அடைச்சிய
தோல்எறி பாண்டிலின் வாலிய மலர,
கோழிலை அவரைக் கொழுமுகை அவிழ
ஊழ்உறு தோன்றி ஒண்பூத் தளைவிட
புலம்தொறும் குருகினம் நரல, கல்லென
அகன்று உறை மகளிர் அணிதுறந்து நடுங்க
அற்சிரம் வந்தன்று" (அகநா.217:1-13)

என்ற பாடல் புனைந்துரைக்கும். பின்பனிக்காலத்தில் நிகழும் நிகழ்வுகளை கழார்க்கீரன் எயிற்றியனார் இதில் காட்சிப்படுத்தியுள்ளார்.

## இளவேனிற்காலம்

பனிக்காலம் முடிந்து தொடங்கும் காலம் வேனிற்காலமாகும். சித்திரையும், வைகாசியும் இளவேனிற்காலத்திற்குரிய மாதங்களாகும். இதனை வசந்த காலம் என்றும் கூறுவர். "புன்மையான காம்பினையுடைய

பாதிரியின் வரிகள் கொண்ட மலரானது மெல்லிய கொடிகளையுடைய காட்டுமல்லிகை மலரோடு சேர்ந்து, நுண்ணிய கருமணலிற் சிதறி அழகுசெய்தது. தென்றலானது, பாம்பின் பல்லைப்போன்று அரும்புகள் முதிர்ந்த மணங்கமழும் கிளைகளையுடைய குராவினை ஊடறுத்துவந்து வீசியது. வண்டுகள் ஒலித்தன. குயில்கள் கூவின. அத்தகைய இளவேனிற்காலம் வந்திற்று"[13] என்பர் தாயங்கண்ணனார். இதில் பாதிரிப்பூக்கள் புனலிப்பூக்களோடு கருமணலிற் சிதறி அழகு செய்தலும் தென்றல் வீசுதலும், நறிய கிளைகளில் வண்டுகள் ஒலித்தலும், குயில் கூவுதலும் உடைய இளவேனிற்காலப் புனைவு காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. இங்ஙனம் பருவகாலப்புனைவில் புலவர்கள் மேகம், மழை, இடி, மின்னல், பனி, மலர்கள், விலங்குகள், காதலரைப் பிரிந்த மகளிர் நிலை ஆகியவற்றைச் சிறப்பாகப் புனைந்துள்ளமை சுட்டத்தக்கது.

## மாலைப்பொழுதின் காட்சிப்புனைவு

மாலைப்பொழுது தொடங்கியவுடன் நிகழும் நிகழ்வினை "பலகதிர்களையுடைய சூரியன் பகற்பொழுதை முடித்துக்கொண்டு, தொலைவில் உள்ள பெரிய மலையின்கண் மறைந்தது. பறவைகள் தத்தம் குஞ்சுகள் உள்ள காட்டிற்குச் சென்று அடைந்தன. காட்டிலுள்ள கரிய கழுத்தையுடைய கலைமான் இளமை மிக்க தன் பிணை மானைத் தழுவிநின்றது. முல்லை மலர்களும் மலர்ந்தன. புதர்கள் எல்லாம் காந்தள் மலர்கள் தழைத்து விளக்கெனத் தோன்றுமாறு இருந்தன. பசுவின் கழுத்தில் கட்டிய மணியின் ஓசை, கோவலர்கள் ஊதும் குழலோசையோடு சேர்ந்து ஒலித்தன. இவ்வாறாக மாலைப் பொழுது வந்திற்று"[14] என்று சேகம் பூதனார் வரிசைப்படுத்தியுரைப்பர்.

மேலும், "பெரிய கடலானது முழங்க, கடலருகில் அமைந்த சோலைகளிடத்துள்ள மரங்களில் மலர்கள் நிறைய, கரிய கழியின் நீர் வெள்ளம் மனையெல்லையைக் கடந்து நிறைவனவாய் வர பெரிய இதழுடைய நெய்தல் மலர்கள் குவிய மணம் வீசும் பூஞ்சோலைகளிடத்துள்ள கூடுகளில் காக்கைகள் சென்று தங்க, சிவந்த தாழ்ந்த கதிரவன் ஒளி மண்டிலம் மேற்கே மலையைச் சேர்கின்றது. முன்பு எங்கனும் பரவிய சுடர்க்கதிர்கள் ஒளி மங்கின"[15] என்று மாலைப்பொழுதில் நிகழும் காட்சிகளைக் குறிப்பிடுவர் குன்றியனார். கடல் காலைப் பொழுதில் உள்வாங்கி, மாலைப்பொழுதில் கரையைக் கடந்து வரும் இயல்பு புலவரால் படம்பிடித்துக்காட்டப்பட்டுள்ளது. இது, கடல் காலையில் மேயச் சென்று மாலையில் வீடுதிரும்பும் என்ற மக்கள் வழக்கோடு பொருந்தியுள்ளமை சுட்டத்தக்கது.

## மலர்களின் தோற்றப் புனைவு

சங்க இலக்கியத்தில் பல்வகை மலர்கள் சுட்டப்பட்டுள்ளன. மலர்களின் நிறம், மலரும் தன்மை, மணம், பூக்கும் காலம் போன்றவை புலவர்களால் பெரிதும் எடுத்தியம்பப்பட்டுள்ளன.

மழையைப் பெற்றுக் குளிர்ந்த நிலத்தில் "கார்காலத்திற்குரிய முதல் மழையால், உலர்ந்த சிறுசெடிகளிடத்தே அரும்புகள் தோன்றியுள்ளன. முள்ளைப்புறத்தேயுடைய பிடவம், கள்ளுண்டான் நிலைபோல அசைந்தாடும்; வளைந்த துடுப்பு போன்ற மொட்டினை முதலிலே தோற்றுவித்து, பின்னர்த் தீயைப் போன்ற தோற்றம் அளிக்கும் அலர்ந்த இதழ்களைக் கொண்ட செங்காந்தள் ; நீலமணி போன்ற காயா போன்ற மலர்களும் இன்னபிற மலர்களும் மலர்ந்து அழகாகக் காட்சியளித்தன"[16] என்பர் சோழன் நல்லுருத்திரன். இத்தகு பூக்களின்

காட்சிப்புனைவு புலவரின் புலமைத்திறத்தையும், நுண்நோக்கினையும் புலப்படுத்தும்.

## மலர்க் கண்காட்சி

காயாவும், கொன்றையும், நெய்தலும், முல்லையும், அரும்பி மலர்ந்த செம்முல்லையும், பிடவமும் மலர்ந்து அழகுறப் புறவம் பூவணி கொண்டுள்ளதை,

"காயா கொன்றை நெய்தல், முல்லை

போதவிழ் தளவமொடு பிடவு அலர்ந்து கவினிப்

பூஅணி கொண்டன்றால் புறவே" (ஐங்.412:1-3)

எனும் அடிகள் விளக்கும். கோடை வெப்பத்தால் வாடிய மரம், செடி, கொடிகள் கார் மழையால் தளிர்த்து பூக்களால் நிறைந்திருக்கும் இக்காட்சி காண்பதற்கு மலர்க்கண்காட்சி போலத் தோற்றமளிக்கும்.

## இருப்பைப்பூ

சங்க இலக்கியத்தில் இருப்பை என வழங்கப்படும் மரம் தற்காலத்தில் இலுப்பை என வழங்கப்படுகிறது. இம்மரத்தை ஊர்ப் புறங்களில் அதிகமாகக் காணலாம். இதன் எண்ணெய் கோயில்களில் விளக்கெரிக்கப் பயன்படுகிறது. இருப்பை மரத்தின் மொட்டு, தளிர், பூ, காம்பு போன்றவற்றை அகநானூறு மிகச் சிறப்பாகப் புனைந்துள்ளது. இதனை, "கொல்லும் தொழிலில் சிறந்ததும் கூர்மையானதும் குறும்புழுகு எனப் பெயர்கொண்டதும் வில்வீரர்களின் அம்பறாத் தூணிகளில் மிகுதியாக இட்டுவைக்கப்படுவதுமாகிய குப்பியின் நுனிகளைப் போன்று இருப்பை மரங்களின் மொட்டுக்கள் அரும்பின; செப்புத் தகடுகள் போன்ற அம்மரங்களின் சிவந்த தளிர்களின் இடம் எல்லாம் நெய்யை ஒத்த இனிய துளையுள்ள பூக்கள் தமது ஆர்க்குகள்

கழன்று, காம்பினை நீக்கிக் காணத்தக்க துளையினையுடையவாய் வானிலிருந்து வீழுகின்ற பனிகட்டி போல காற்றால் சிதறுண்டு விழுந்தன; அப்பூக்கள் பவளம் போன்ற சிவந்த மேடாகிய வழிகளில் வீழ்ந்துகிடப்பது குருதி மீது கொழுப்பு பரந்துகிடப்பது போல காணப்பட்டது"[17] எனக் கல்லாடனார் வருணிப்பார்.

## இலவம் பூ

சங்க இலக்கியத்தில் பாடப்பட்ட அழகிய நிறமுள்ள பூக்களுள் இலவம் பூவும் ஒன்று. "சங்ககால இலவமரம் தற்காலத்தில் இலவம் என்றழைக்கப்படும் மரமன்று. பஞ்சிற்காகப் பெரிதும் வளர்க்கப்படும் தற்கால இலவமரம் வெண்மையான, அழகற்ற, கவர்ச்சியற்ற பூக்களையுடையது. சங்க இலக்கியத்தில் கூறப்படும் இலவமரத்தின் பூக்கள் சிவந்த நிறத்தில் காணப்படும். இது பூக்கும் காலத்தில் இலைகள் முழுவதும் உதிர்ந்து பூக்கள் மட்டுமே காணப்படும்"[18] என்பர் பி.எல்.சாமி. இதனை,

"இலை இல மலர்ந்த முகை இல் இலவம்
கலி கொள் ஆயம் மலிபு தொகுபு எடுத்த
அம் சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றும்" (அகநா.11:3-5)

என்பர் ஔவையார். இதில் இலவம் பூக்கள் கார்த்திகை விளக்குபோல காட்சியளித்த செய்தி சுட்டப்பட்டுள்ளது. இலவம் பூக்கள் கிண்ணம் போன்றும், நடுவில் மகரந்தத் தூள்கள் விளக்கின் பருத்த திரிபோன்றும் காணப்படுவதால் விளக்கிற்கு ஒப்புமையாக்கப்பட்டுள்ளது.

இலவம் பூக்கள் சிவந்து காணப்படுவதால் இதன் பூக்களை நெருப்புக்கு உவமைப்படுத்துவர் சங்கப் புலவர்கள்.

"நிழல்படக் கவின்ற நீளரை யிலவத்து

அழலகைந் தன்ன அலங்குசினை யொண்பூ" (அகநா.245:14-15)

"எரிப்பூ விலவத் தூழ்கழி பன்மலா்" (ஐங்.368:1)

"எரியுரு உறழ இலவ மலர" (கலித்.33:10)

என்பன போன்ற அடிகள் இலவின் பூவை 'எரிப்பூ' என்று சுட்டுவது குறிப்பிடத்தக்கது. "கடுங்காற்றில் இலவமரத்தின் பூக்கள் விழுவது இடியிடித்து மின்னல் விழுவது போன்றுளதாகவும்"[19] "மலைச்சாரலில் இலவம் பூத்திருப்பது மலையே தீப்பற்றி எரிவது போலக் காட்சியளித்ததாகவும்"[20] ஒதலாந்தையார் குறிப்பிடுவர். இங்ஙனம் இலவம் பூவின் தோற்றம் சங்கப்புலவர்களால் புனையப்பட்டுள்ளது.

## ஈங்கை மலர்

இம் மலர் உருக்கிய அரக்குப் போன்று சிவந்த நிறமுடையது. வட்டமான மொட்டினையும் பஞ்சு போன்ற தலையினையும், புதிய மலர்களில் தேன்துளியையும் நிரம்பிவைத்திருக்கும்"[21] இயல்பினது. இம்மலரை "தேன்துளி மிகத் திரண்டு விளங்கும் ஈங்கை மலர்கள், கற்பாறையின்மேல் உதிர்ந்து பரவியிருக்கும் காட்சியானது, கூரையுடைய நல்ல மனையின் கண் அமைந்தமுற்றத்தில் மகளிர், மணற்பரப்பில் விளையாடுவதற்கு இட்ட கழங்கு போல இருந்தது"[22] என கண்ணகனார் சுட்டுவர். இதில் ஈங்கை மலரின் நிறம், வடிவம், உருவம் போன்றவை அழகாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

## கமுகம் பூ

கமுக மரமானது சிறுசிறு கோடுகளையும் திரண்ட அடியினையும் உடையது. பல மலர்மாலைகளின் தொகுதியைப் பொதித்துக்கட்டி வைத்த குடையைப் போன்ற காய்த்தல் பொருந்திய கழுத்தினைக்

கொண்டது. அக்கமுத்தின்கண் உள்ள வாளை வடித்து வைத்தாற்போன்ற வயிற்றுப் பொதியில் அழகிய புதுப்பூக்கள் வண்டுகள் உண்ணுமாறு வீசும் கவரிபோல் பூத்துத் தொங்கக்கூடியது. இதனை,

"மாட மூதூர் மதிற்புறம் தழீஇ
நீடுவெயில் உழந்த குறியிறைக் கணைகொல்
தொடைஅமை பன்மலர்த் தோடு பொதிந்து யாத்த
குடை ஓரன்ன கோள்அமை எருத்தின்
பாளைபற்று அழிந்து ஒழிய, புறம் சேர்ப்பு
வாள்வடித்தன்ன வறுடைப் பொதிய
நாள் உறத் தோன்றிய நயவரு வனப்பின்
ஆரத்து அன்ன அணிகிளர் புதுப்பூ
வார்உறு கவரியின் வண்டு உண விரிப்ப" (அகநா.335:9-19)

என்றுரைப்பர் மதுரைத் தத்தங்கண்ணனார். கமுகு தற்காலத்தில் பாக்கு மரம் என வழங்கப்படுகிறது.

## காந்தள் பூ

தமிழிலக்கியத்தில் போற்றப்படும் அழகிய பூ காந்தளாகும். இது மழைக்காலத்தில் வேலியோரங்களில் பூத்துக்குலுங்கும். "காந்தள் கார்த்திகைப்பூ என்றும், கலப்பைக் கிழங்கு என்றும், காக்கை மூக்குச் செடி என்றும் தற்காலத்தில் வழங்கப்படுகின்றது. இதன் தண்டு மெல்லியதாகவும், இலைகள் ஒள்ளிய நெய்ப்புடன் அழகாகக் காட்சியளிக்கும். ஒரே பூவில் மாறுபட்ட நிறங்கள் கண்களை ஈர்க்கும். இதன் பூவில் ஆறு அழகிய பூவிதழ்கள் புரிவுகளோடு இருக்கும். பூக்கும் போது இவ்விதழ்கள் இளம்பச்சை நிறமாகவும், பின்னர் மஞ்சளாகவும் கிச்சிலி நிறமாகவும், இறுதியில் சிவப்பு, கருஞ்சிவப்பாகவும் மாறும்

தன்மையுடையது. மற்றும் இதழ்களின் அடிப்பகுதி ஒரு நிறமாகவும், நடுப்பகுதி வேறு நிறமாகவும், நுனிப்பகுதி பிறிதொரு நிறமாகவும் ஓரங்கள் வெவ்வேறு நிறமாகவும் காணப்படுவது இப்பூவின் தனித்தன்மை"[23] என்பர் பி.எல்.சாமி.

மாலையில் மலையில் பெய்த மழையருவி காலையில் காந்தள் செடியைக் கிழங்கோடு அடித்துக்கொண்டுவந்ததை,

"அவர்மலை, மாலைப்பெய்த மணங்கமழ் உந்தியொடு
காலைவந்த முழுமுதற் காந்தள்
மெல்இலை குழைய" (குறுந்.361:2-5)

எனக் கபிலர் புனைவர்.

காந்தள் பூவின் மொக்கு நீண்டு சிறிது நுனி வளைந்து கூர்மையாகக் காணப்படும். மொக்கு மலரும் பருவத்தில் நுனியில் மட்டும் மலர்கள் சிவந்துகாணப்படும். மற்ற பகுதிகள் பச்சையாக இருக்கும். இதை,

"கொன்ற யானைக் கோடுகண்டன்ன
செம்புடைக் கொழுமுகை யவிழ்ந்த காந்தள்" (நற்.294:6-7)

"புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல
உயர்முகை நறுங் காந்தள் நாள்தோறும் புதிதுஈன" (கலித்.53:4-5)

என்ற பாடல்கள் வருணிக்கும். இதில் யானையின் குருதி தோய்ந்த கோடு போல, கொழுமுகை இருந்தமை குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும் காந்தள் பூ முதிரும் பருவத்தில் நன்றாகச் சிவந்து காணப்படுவதால் குருதியின் நிறத்தோடு ஒப்பிட்டு,

"குருதிப் பூவின் குலைக்காந் தட்டே" (குறுந்.1)

"காந்தட் குருதி யொண்பூ" (நற்.34)

“குருதியொப்பின் கமழ்பூங் காந்தள்” (நற்.399)

என்று பாடப்பட்டுள்ளது.

“காந்தள் பூ முதிர்ந்த பருவத்தில் இதழ்கள் செங்குத்தாக மேல்நோக்கித் தோன்றும். மேல் நோக்கியிருக்கும் இதழ்கள் வளைந்து காணப்படுவது சேவலின் சிவந்த கொண்டை போலத் தோன்றுதலை”[24] குறுந்தொகை குறிப்பிடும். காந்தள் பூ நெருப்புப் போலவும், விளக்குப் போலவும் விளங்குவதை, ‘எரிமருள் தோன்றி’ (அகநா.218), “தோன்றி தீயென மலரா” (பரி.11:21) என்பன போன்ற அடிகள் விளக்கும். காந்தள் நிமிர்ந்த நிலையில் மகளிர் கைகூப்பித் தொழுவது போலத் தோன்றும் காட்சியை,

“கொடிச்சியர் கூப்பி வரைதொழுகைபோல்

எடுத்த நறவின் குலையலங் காந்தள்” (கலித்.40:11-12)

எனக் கபிலர் புனைவர்.

காந்தள் பூ பூக்கும் போது நாகப்பாம்பு படமெடுப்பது போலவும்; காந்தள் பூ வாடிய போது பாம்பு படம் அவிந்தாற் போலவும் காணப்படுவதை சங்கப் புலவர்கள் காட்சிப்படுத்தியுள்ளனர்.

“வெஞ்சின அரவின் பையணந் தன்ன

தண்கமழ் கோடல்தாது பிணியவிழ” (அகநா.154-6-7)

என்னும் அடியில் காந்தள் பூ படம் எடுத்ததுபோல் இருந்த காட்சி விளக்கப்பட்டுள்ளது.

“பாம்புபைஅவிந்தது போலக் கூம்பிக்

கொண்டலிற் றொலைந்த வொண்செங் காந்தள்” (குறுந்.185:5-6)

என்பதில் பாம்பின் படம் குவிவதுபோல் காந்தள் குவிந்திருப்பது

குறிப்பிடப்பட்டுள்ளது. காந்தள் கார்காலத்தில் பூப்பதை,

"கார்என்றுஅயர்ந்து உள்ளமொடு தேர்வில
பிடவும் கொன்றையும் கோடலும்" (நற்.99:8-9)

என்ற அடிகள் விளக்கும். இதன் காரணமாகத்தான் காந்தள் பூவினை, தற்காலத்தில் கார்த்திகைப்பூ என்றழைக்கின்றனர் போலும்.

சங்கப் புலவர்கள் மஞ்சள் பெரிதும் கலந்த காந்தள் பூவை வெண்காந்தள் எனவும், சிவப்பு நிறத்தில் காணப்பட்டதைச் செங்காந்தள் அல்லது தோன்றி என்றும் தங்கள் பாடல்களில் புனைந்துள்ளனர்.

இங்ஙனம் ஒள்ளிய நெய்ப்புடன் பச்சைப்பசேலென்று தோன்றும் இலைகளுடன், பல்வேறு நிறங்களுடன் காணப்படும் காந்தள் கண்ணுக்கு இனியதாக இருக்கும் பாங்கைப் புலவர்கள் கண்டு தங்கள் பாடல்களில் காட்சிப்படுத்தியுள்ளமை சங்கப் பாடல்களில் கட்புலனுணர்வு பெற்ற இடத்தை நன்கு புலப்படுத்தும்.

**கோங்கு**

"கோங்கு மரத்தை, தற்காலத்தில் மஞ்சள் இலவு, மலைப்பருத்தி, காட்டிலவு, காட்டுப்பஞ்சு, மஞ்சள் தணக்கு என்றெல்லாம் அழைப்பர். மஞ்சள் பூ இருப்பதால் மஞ்சள் இலவு என்றும், கோங்கின் காயில் பஞ்சு இருப்பதால் மலைப்பருத்தி, காட்டுப்பஞ்சு என்றும் அழைக்கின்றனர். இலவமரத்தின் இனமான கோங்கும், இலவமரத்தைப் போன்று இலையற்றுக் காணப்படும் காலத்தில் நிறமாகப் பூக்கும் மரம் கோங்கைத் தவிர வேறு மரத்தைக் கூறமுடியாது"[25] என்பர் பி.எல்.சாமி.

கோங்கின் பூ தட்டையான கிண்ணம் போல் காணப்படுவதால், புலவர்கள் மகளிரின் மார்பிற்கு உவமையாக்கி உரைப்பர். இதனை,

"மாணிழை மகளிர் பூணுடை முலையின்

முகைபிணி யவிழ்ந்த கோங்கமொடு அசைஇ" (அகநா.99)

"கோங்கு முகைத் தன்ன குவிமுலை யாகத்து" (அகநா.240:11)

"முலையேர் மென்முகை யவிழ்ந்த கோங்கின்" (குறுந்.254:2)

என்ற அடிகள் விளக்கும். கோங்கின் பூ ஒள்ளிய, பளபளப்பான பொன்னிறமானது என்பதை,

"புதுமலர்க் கோங்கம் பொன்னெனத் தாதூழ்ப்ப" (கலித்.33:12)

"தண்ணறுங் கோங்க மலர்ந்த வரையெல்லாம்

பொன்னணி யானைபோற் றோன்றுமே" (கலித்.42:16-17)

என்னும் அடிகள் விளக்கும். மேலும் "கார்த்திகைத் திங்களில் விண்ணில் ஒளிபரவும்படி எடுக்கப்பட்ட விளக்குகளின் வரிசை போல, கோங்க மரங்கள் நிறைந்த காட்டிலே கோங்கம் பூக்கள் மஞ்சள் நிறத்தில் காட்சியளிப்பதை"[26] பாலைபாடிய பெருங்கடுங்கோ புனைவர். இங்ஙனம் கோங்கம் பூவின் உருவும், நிறமும் புலவர்களால் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

## தளவம் பூ

தளவு என்பது செம்முல்லைப் பூவைக் குறிக்கும். இது குளிர்காலத்தில் மலரக்கூடியது. இதன் நிறம் சிவந்தும் கூர்மையாகவும் காணப்படுவதால் மீன் கொத்திப் பறவையின் அழகுடன் ஒப்பிடப்பட்டுள்ளது. இதனை,

"பனி வளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை

ஆடுசிறை வண்டு அவிழ்ப்ப" (ஐங்.447:2-3)

என்னும் அடிகள் விளக்கும்.

## தாமரைப் பூ

தாமரைப்பூ சிவந்த நிறமுடையது. கையினைக் குவித்து வைத்திருப்பதுபோல மொட்டுகளையுடையது. இது கொடிவகையைச்சேர்ந்தது. ஒரு தண்டிற்கு ஒரு பூ பூக்கும். இதன் இலை நீரில் ஒட்டாது. குளங்களில் அதிகமாகக் காணப்படும். கோயில் குளங்களில் அழகிற்காகவும், அர்ச்சனைக்காகவும் வளர்க்கப்படும். "கடலைக் கண்டாற் போன்ற பரந்தகன்ற நீர்ப்பரப்பில் நிலம் பிளக்குமாறு கீழ் இறங்கிய வேரில் முதிர்ந்த கிழங்கினையும், மூங்கிலைப் போன்ற துளையையுடைய திரண்ட தண்டினையும், ஆண் யானையின் காதுபோன்ற பசுமைநிற இலைகளையும், அவற்றிடத்தே அரும்புகளையும், புன்முறுவல் பூத்த முகத்தினைப் போன்று விளங்கப் பூத்த பல மலர்களையும் உடைய தாமரை சூழ்ந்த வயலினை"[27] மருதம் பாடிய இளங்கடுங்கோ குறிப்பிடுவர். இதில் தாமரை மலரின் அழகு நன்கு காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

## வேழப் பூ

வேழப் பூ வெண்மை நிறமுடையது. இதனை "நாணல்"[28] என்றும் வழங்குவர். இது ஆற்றுப்படுகைகளிலும், நீர்த்துறையின் ஓரங்களிலும் காணப்படும். அருகுபோல் அடிப்பகுதி பத்தையாகக் காணப்படும். பத்தையிலிருந்து தனித்தனிக் குச்சிகளாக வளரக்கூடியது. இஃது உள்ளீடற்றுக் காணப்படும். வளரும் போது பசிய நிறத்திலும் பூக்கும்போது மஞ்சள்நிறத்திலும் காண்பதற்கு அழகிய நீண்ட வெண்சாமரம் போல் தோற்றமளிக்கும். ஐங்குறுநூற்றில், 'உயர்ந்த ஜாதிக் குதிரையின் நீண்ட பிடரி மயிரினைப் போல, குளிர்ந்த துறையின் கரைகளில் வளரும் வேழத்தின் வெண்பூக்கள் மலர்ந்திருக்கும் காட்சியை,

"பரியுடை நல்மான் பொங்கு உளை அன்ன

அடைகரை வேழம் வெண்பூப் பகரும்" (ஐங்.13:1-2)

என ஓரம்போகியார் புனைந்துரைப்பர். இவ்வாறாக, பூக்களின் தோற்றமும், நிறமும் மிக நுட்பமாக சங்கப் புலவர்களால் புனைந்துரைக்கப்பட்டுள்ளன.

## பறவைகள் பற்றிய காட்சிப் புனைவு

### எருவை

"எருவை பிணந்தின்னிக் கழுகு வகைகளுள் ஒன்று. இதன் தலையும், கழுத்தும் இறகுகள் இல்லாமல் வழுக்கையாய்ப் புதிதாக வெட்டப்பட்ட விலங்கின் இறைச்சியைப் போல காணப்படும். அதிலும் காது சிவப்பாகக் காணப்படும்"[29] என்பர். "பொறித்து வைத்தாற்போலும் வெண்ணிறம் வாய்ந்த கழுத்தினையும், செய்து சூட்டியது போலும் சிவந்த செவியினையும் உடைய எருவையை அகநானூறு (193:5-6) சுட்டும். இதில் எருவையின் சிவந்த செவியும், வெண்மையான கழுத்தும், கரிய சிறகுகளும் காட்சியாக்கப்பட்டுள்ளன.

### கானக்கோழி

சங்க இலக்கியத்தில் கானக்கோழி, கானவாரணம் என்றழைக்கப்படும். இது காட்டில் வாழும் கோழி இனமாகும். இத்தகு கோழியின் தோற்றச்சிறப்பை "கானக்கோழி உருக்கிய நெய்யில் பாலைச் சிதறினாற் போல, அழகிய நுண்ணிய பலவாகிய புள்ளிகளையும், கடைகின்ற குரலையுடைய மிடற்றினையும் கொண்டது. அது கண்டார்க்கு விருப்பம் தரும் தகுதியையுடையது. அக்கோழி மழைபெய்து நீர்வடிந்த அகன்ற நெடிய காட்டில் ஈரம் காயாத மணலை நன்றாகப் பறித்து, நாட்காலையில் இரையாகிய நாங்கூழ்ப் புழுவைக் கவரும். அப்புழுவைக்

கொன்று தன் பேடைக்கு ஊட்ட வேண்டிப் பெருமையோடு அப்பேடையை நோக்கும் நிலையை"[30] சிறப்பாகப் புனைந்துரைப்பர் மருதன் இளநாகனர். இதில் கானக்கோழியின் உருவச் சிறப்பும், தன் பெடை மீது கொண்ட அன்பின் மிகுதியும் நுட்பமாக இயம்பப்பட்டுள்ளது.

**கிளி**

கிளிகளின் மேனி பச்சையாகவும் வாய் சிவப்பு நிறத்திலும் காணப்படும். ஆண்கிளியின் கழுத்தில் சிவப்பு நிற வளையமும், பெண் கிளியின் கழுத்தில் பச்சை நிற வளையமும் காணப்படும். இதனை "செந்தார்க்கிளி" (நற்.301:4), "பைந்தார் செவ்வாய் சிறுகிளி" (அகநா.192:4-5) என்ற அடிகள் விளக்கும்.

**குருவி**

குரீஇ என்பது சங்க இலக்கியத்தில் சிறு பறவைகளின் பொதுப்பெயராக வழங்கப்பட்டுள்ளது. "ஆம்பல் பூவின் வாடலைப் போன்ற குவிந்த சிறகுகளையுடைய குருவிகள் வீட்டின் முற்றத்தில் உலர்த்திய புழுக்களை உண்டு, பொது இடத்திலுள்ள நுண்ணிய புழுதியால் குடைந்து விளையாடி, தன்னுடைய குஞ்சுகளோடு வீட்டின் இறைப்பின்கண் தங்கியிருக்கும்"[31] என்பர் மாமிலாடனார்.

கதிர் அறுக்கப்பட்ட வயல்களிலுள்ள அரிதாளில் தங்கியுள்ள குருவிகள் மகளிர் பந்தடித்தலைப்போல மேலும் கீழுமாக வீழ்ந்து எழும் அழகிய காட்சியை,

"இருவி இருந்த குருவி வருந்துற
பந்து ஆடு மகளிரின் படர்தரும்" (ஐங்.295:4-5)

என ஐங்குறுநூறு சுட்டும். குருவிகள் இரைக்காக வீழ்வதும் எழுவதும்

மகளிர் விளையாடும் பந்து மேலும் கீழுமாக எழுவதுபோல் புனையப்பட்டுள்ளமை அழகிய காட்சிப்புனைவாகும்.

## வாவல்

வெளவால் மரங்களில் தலைகீழாகத் தொங்கும். கருமை நிறத்தில் காணப்படும். இதன் இறகுகள் நீளமானதாகவும் வளைந்தும் காட்சியளிக்கும். இதன் நகங்கள் மிகக் கூர்மையானவை. நீல நிறமுடைய மெல்லிய சிறகுகளையும், கூரிய நகங்களையும் கொண்ட வெளவால் என்னும் பறவை, பாலொடு தேன் கலந்தாற் போன்ற தேனின் சுவையையுடைய மாம்பழத்தை அருந்துவதற்காக, நெல்லிக்காயின் இனிய புளிப்புச் சுவையைச் சுவைத்து, அதன் அயலில் உள்ள முள் இல்லாமல் பருத்து விளங்கும் மூங்கிலின் கிளைகளில் தொங்குவது,

"பால் கலப்பன்ன தேக்கொக்கு அருந்துபு
நீல மென்சிறை வள்உகிர்ப் பறவை
நெல்லி அம்புளி மாந்தி, அயலது
முள்இல் அம்பணை மூங்கிலில் தூங்கும்" (குறுந்.201:2-5)

என்னும் அடிகளில் சுட்டப்பட்டுள்ளது. இதில் வெளவாலின் உருவமும், அதன் உணவும் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

## தும்பி

"தும்பி - தூம்புள்ள கைபோன்றது. துளையுள்ள யானையின் கை தும்பிக்கை என வழங்கப்படுவது போல, தும்புள்ள - தேனை உறிஞ்சுவதற்கும், துளையிடுவதற்கும் ஏற்ற துளையுள்ள கையை உடைய வண்டு, தும்பு - தும்பி என குறிப்பிடப்படுகிறது."[32] சங்க இலக்கியத்தில் தும்பியின் செயலை "பெருமையினையும் அழகுடைத்தாகிய சிறகினையும் நீலமணி போலும் நிறத்தினையுமுடைய தும்பி, தான்

நுகர்ந்த பூவினை விடுத்து, தான் விரும்பிய பூவினை நாடிப் போனது வாயிடத்தே வீழ்கின்ற மதநீரையும் வெள்ளிய மருப்பினையும் உடைய யானையோடு, அழகினையும் வரியினையும் உடைய புலி போர் செய்தது. அப்பொழுது தும்பி, வேங்கையினது அழகையுடைய பூங்கொம்பு என்று கருதி வலிமை பெற்ற புலியைச் சுற்றியது. வேங்கையினது சினை என்று கருதி, பொலிவுபெற்ற புள்ளிகளையுடைய யானையினது புகர்முகத்தை அணுகியது, புலியையும், களிற்றின் முகப் புள்ளிகளையும் மலர் என்று கருதி தும்பி அங்கும் இங்கும் மாறிமாறி வட்டமிட்டது. தும்பியின் இச்செயல் சினத்தாலே வாட்போர் செய்து நின்ற வலிமிகுந்த மன்னர் இருவரை நட்பாக்கும் உபாயத்தை ஆராய்ந்து சந்து செய்விப்பாரைப் போல் இருந்தது"[33] என்றுரைப்பர் கபிலர். இதில் தும்பியின் ஒவ்வோர் அசைவும் சிறப்பாகப் புனைந்துரைக்கப்பட்டுள்ளது.

## விலங்குகள் பற்றிய காட்சிப் புனைவு

### காளை

'ஆ' வினத்தின் ஆண் 'காளை' எனப்படும். காளை என்பது கன்றிலிருந்து வளர்ந்து இளமைப் பருவத்தை அடைந்த நிலையைக் குறிக்கும். கன்றாயிருக்கும் பொழுது என்ன நிறத்தில் காணப்பட்டாலும் காளையாகும் போது அதன் கண்ணைச்சுற்றிய பகுதி திமில், வால், தொடைப் பகுதி ஆகியவை கருமைநிறங்கொள்ளும். இந்நிலையிலுள்ளது பொலிகாளை என வழங்கப்படும். இப்பருவத்தில் காளைகள் அடங்கா ஆற்றலுடனும், கடுங்கோபத்துடனும், செருக்கிய நடையுடனும், அஞ்சா வீரனைப் போல் காட்சியளிக்கும். காளைகளின் நிறத்தை வைத்தே வெள்ளை, மயிலை, காரி, செவலை எனப் பெயரிட்டு வழங்குவர்.

கலித்தொகையிலும் “வானத்தைப் பொருந்தும்படி ஓங்கி ஒளிவீசும் பனைக்கொடியினையுடைய, பால் போன்ற நிறமுடைய பலராமனைப்போன்ற குற்றம் நீங்கிய வெள்ளை எருது, மாறுபாட்டினால் ஏனையவற்றின் மேலான பொன்னாலாகிய புகழ்பெற்ற சக்கரப் படையை உடையவனும் திருமகளை மறுவாக மார்பிலே கொண்டவனுமாகிய மாயோனின் நிறமுடைய கரிய எருது; ஒளி மிக்கு விளங்குகின்ற தாழ்ந்த சடையினையும், ஒருபக்கத்தே பொருந்திய பிறைபோன்ற நுதலை உடையவனுமாகிய முக்கண்ணனாகிய சிவபெருமானின் உருவினை ஒத்த வலிமையுடைய கபிலை நிற எருது”[34] எனக் காளைகளின் நிறம், தோற்றம் போன்றவை சோழன் நல்லுருத்திரனால் நன்கு காட்சிப்படுத்தப் பட்டுள்ளன.

## குதிரை

குதிரை மக்களுக்கு உதவியாக உள்ள ஒரு விலங்கு. இது நாட்டிலே பிறந்து நாட்டிலே வளரும் இயல்பினது. மக்கள் பயணம் செய்வதற்கேற்ற விலங்கு. ஐங்குறுநூற்றில், குதிரையின் பிடரி மயிர் அந்தணச் சிறுவர்களின் குடுமிபோன்று காட்சியளிப்பதை,

“பார்ப்பனக் குறுமகப்போலத் தாமும்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே” (ஐங்.202:2-4)

என்னும் அடிகள் விளக்கும். இதில் ‘மா’ என்பது குதிரையை குறித்துள்ளது. குதிரையின் பிடரி மயிரினையும், அதன் தலையாட்டத்தையும் புலவர்கள் புகழ்ந்துரைப்பதை, “குரங்கு உளைப் பொலிந்த கொய்சுவற் புரவி” (அகநா.4:8) எனும் அடிகள் விளக்கும். இதில் குதிரையின் வளைந்த தலையாட்டமும், பிடரி கத்தரிக்கோல் கொண்டு நறுக்கியது போன்று செப்பமாக இருந்தமையும் சுட்டப்பட்டுள்ளது.

### புலியும் யானையும் போர் செய்யும் காட்சி

புலியும், யானையும் போர் செய்தலை,

"பூம்பொறி உழுவைப் பேழ்வாய் ஏற்றை
தேம்கமழ் சிலம்பின் களிற்றொடு பொரினே
துறுகல் மீமிசை, உறுகண் அஞ்சாக்
குறக் குறுமாக்கள்" (நற்.104:1-4)

என்றுரைப்பர்.

### பன்றி

காட்டிலும் நாட்டிலும் வாழும் ஒருவகை விலங்கே பன்றி. இது சிறிய கண்களுடன் களாக்கனி போல மிகுந்த கருமைநிறத்தில் காணப்படும். முள்ளம் பன்றியின் முடிபோலப் பன்றியின் பிடரியில் மயிர்க்கற்றைகள் காணப்படும். நன்கு வளர்ந்த ஆண் பன்றிக்கு வளைந்த தந்தங்கள் காணப்படும். கல்முழைகளிலும், தினைப் புனங்களின் அருகிலும் வளையமைத்து வாழும் இயல்பினது.

"முள்ளம் பன்றியின் முள்ளைப் போன்ற பருத்த மயிரை உடைய பிடரியும், சிறிய கண்ணும், வயலிடத்தே சென்று மேயும் விருப்பமும் உடைய பன்றி, உயர்ந்த மலையிடத்தேயுள்ள பெரிய தினைப் புனத்திலே மேயக்கருதியது. அப்பன்றி பெரிய இயந்திரம் அமைத்த குறுகிய வழியிலே சென்று நுழையும் பொழுது தாழ்க்காமல் விரைவாக ஒரு பக்கத்தே இருந்து பல்லி ஓசைசெய்தது. அதனைக் கேட்ட பன்றி அங்கு சென்றால் துன்பம் உருமென மெல்ல மெல்லப் பின்னே ஓடிக் கல்முழையில் உள்ள தன் பள்ளிக்கண் தங்கும்"[35] என்று பன்றியின் செயலை உக்கிரப் பெருவழுதி சிறப்புறப் புனைந்துள்ளார். இதில்

மனிதர்கள் மட்டுமன்றி பன்றியும் நற்சொல் கேட்டு அதன்படி செயல்படும் என்ற பண்பு பதிவுசெய்யப்பட்டுள்ளது.

## முயல்

மிகச் சிறிய விலங்கு வகைகளுள் ஒன்று முயல். இது வெண்மை நிறமுடையது. நீண்ட செவிகளையுடையது. இதன் கண்கள் நீர்க்குமிழ் போல் தோன்றும் தன்மையுடையது. இத்தகைய முயலின் தோற்றத்தை அகநானூறு,

“சிறியிலை நெல்லிக் காய்கண்டன்ன
குறுவிழிக் கண்ண கூரல் அம் குறுமுயல்
முடந்தை வரகின் வீங்குபீள் அருந்துபு
குடந்தைஅம் செவிய கோட்பவர் ஒடுங்கி
இன்துயில் எழுந்து துணையொடு போகி
முன்றில் சிறுநிறை நீர்கண்டு உண்ணும்” (அகநா.284:1-6)

எனக் குறிப்பிட்டுள்ளது. இதில் ‘சிறிய இலைகளையுடைய நெல்லியின் காயைக் கண்டாற் போன்ற குறுகிய விழிபொருந்திய கண்களையும், வளைந்த அழகிய காதுகளையும், கூர்மையான மயிரினையும் உடைய குறுமுயல்கள் வளைந்து கிடக்கும் வரகினது இளங்கதிர்களைத் தின்று, காய்களைக் கொண்ட கொடிகளுள் புகுந்து உறங்கும். பின்னர்தம் இனிய உறக்கத்தினின்றும் எழுந்து தத்தம் துணையொடு சென்று வீட்டின் முற்றத்தேயுள்ள சிறிய சால்களிலுள்ள நீரைக் கண்டு பருகும்’ என முயலின் உருவப் புனைவும், அதன் செயலும் அழகாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

## வெள்ளெலி

எலிகளுள் ஒருவகை வெள்ளெலி. இது வெண்மை நிறத்தில் சிறிது கருப்பும், வெள்ளையும் கலந்து காணப்படும். எலிகள் கருமைநிறமாதலால்,

வெள்ளை முடிகளை உடைய எலி வெள்ளெலி என வழங்கப்பட்டுள்ளது. குன்றிமணியொத்த கண்களையும், நல்ல நிறம் பொருந்திய மயிரையும், புல்லிய தாளையுமுடைய, தாடி மயிருள்ள வெள்ளெலி,

"குன்றியன்ன கண்ண குரூஉ மயிர்
புன்தாள் வெள்ளெலி" (அகநா.133:1-2)

எனச் சிறப்பாகப் புனைந்துரைக்கப்பட்டுள்ளது.

### யாமை

ஆமை இருவாழ் உயிரி. அதிகமாக கடலில் வாழக்கூடியது. ஆறு, குளங்களிலும், வயல்வெளிகளிலும் காணப்படும். இது ஊர்வன வகையைச் சேர்ந்தது. தட்டையான, குட்டையான நான்கு கால்களையும், கடினமான மேற்புற ஓட்டினையும் உடையது. முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும். முட்டையிடும் காலத்தில் கடலின் நீங்கி நிலப்பரப்பிற்கு வந்து மணலில் குழிதோண்டி முட்டைகளை இட்டு மூடிவிடும். ஆண் யாமை குட்டிகளைப் பாதுகாக்கும். "மரக்காலை யொத்த யானையின் முதுகில், செம்பினைப்போன்ற செந்நிறம் வாய்ந்த அதன் பார்ப்புகள் ஏறித்துயில்வதை"[36] ஐங்குறுநூறு சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளது.

## ஊர்ப்புனைவு

சங்க மக்கள் இயற்கை சூழ்ந்த இடங்களைத் தங்கள் வசிப்பிடமாகக் கொண்டுள்ளதை சங்கப் புலவர்களின் பாடல்கள் வாயிலாக அறியமுடிகின்றது. மேலும் ஐந்நில அடிப்படையில் புலவர்கள் ஒவ்வொரு நிலத்தின் ஊர்களையும் சிறப்புறப் புனைந்துரைத்துள்ளனர்.

## கழனி சூழ்ந்த ஊர்

"பறவைகள் ஒலிக்கின்ற அகன்ற வயலிடத்து, ஒலிக்கின்ற செந்நெல் இடையிலே பூத்த, முள்ளைத் தண்டிலே கொண்டுள்ள தாமரை,

பயிர் தலைசாய்க்கும் பொழுது, ஒரு செந்நெல்லின் முதல், தாமரையின் வளவிய இதழை உறும்படி வளர்ந்து அதன்மீது சாய்ந்து கிடந்தது. அவையில் உள்ளோரால் புகழப்பட்ட அரங்கின்மேலே ஆடுகின்ற ஆடல் மகளுடைய அழகிய நெற்றியிலே தாழும்படி அழகுடன் செருகி இருந்த வயந்தகம் போல, தாமரை இதழிலே கிடந்த அந்நெற்கதிர் விளங்கிற்று; இத்தகைய தன்மைகளைப் பெற்ற கழனிகள் சூழ்ந்த அழகிய குளிர்ந்த துறையினை உடைய ஊர்"[37] என ஓரூர் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

## தாமரைப் பொய்கை சூழ்ந்த ஊர்

கலித்தொகையில் ஊர்ப்புனைவு அழகுறச் சுட்டப்பட்டுள்ளது. "விரிந்த கதிர்களையுடைய இளஞாயிறு, அகன்ற விசும்பின்கண் தன் கதிர்களைப் பரப்பி வந்தனன்; விடியற்காலத்தே முறுக்குண்ட தலைகளையுடைய முகைகள் முறுக்கவிழ்ந்து மலரத் தொடங்கின; நெகிழ்ந்த செவ்விப் பூவிடத்தே அழகிய தேனை, வரியினையுடைய வண்டுகள் அனைத்தும் கூடி நுகர்ந்தன; அதனினும் அமையாது பின்னும் நுகர்தற்கு அவ்விடத்தே சூழ்ந்து திரிந்தன; செல்வம் மிக்க பொய்கையிடத்து, பசிய இலைகளுக்கிடையே நின்ற தாமரையானது தனித்த ஒரு மலரில் கதிர் ஒளிபடாததால், வருத்தத்தைச் செய்யும் பனி ஒரு கூற்றிலே வடியாநின்றது ; கதிரவன் ஒளிக்கதிர் அதன் மேல் படவும் அத்தனிமலர் ஊடல் தீர்ந்தாள் முகம்போல அலர்ந்தது. இத்தகைய குளிர்ந்த துறைகள் பலவும் உடைய வளமுள்ள நல்ல ஊர்"[38] என மருதநில ஊரினை மருதன் இளநாகனார் சிறப்புற வெளிப்படுத்தியுள்ளார். மேலும் பலா மரங்கள் சூழ்ந்த வயலினை,

"பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை
கழனி நாரை உரைத்தலின், செந்நெல்
விரவு வெள்ளரிசியின் தாஅம் ஊரன்" (நற்.180:1-3)

என்றுரைப்பர். இதில் வயலிலுள்ள பலாமரத்தின் இலைகளைக் கூடாக்கிக் கொண்டு முயிறுகள் முட்டையிட்டு உறையும், அக்கூடுகளைக் கழனியில் இரைதேடுவதற்கு வந்த நாரை சென்று உறிஞ்சும். அதனால் சிவந்த முயிறுகளும் அவற்றின் வன்மையான முட்டைகளும் செந்நெல்லிற் கலந்த அரிசி உதிர்வது போல உதிர்ந்து பரவும் வயல் சூழ்ந்த ஊர் என ஊர் புனைந்துரைக்கப்பட்டுள்ளது.

## மலைநாட்டுப் புனைவு

பொதும்பில் கிழார் மலை நாட்டின் சிறப்புக்களை "சிங்கம் முதலான விலங்கின் கூட்டம் நெருங்கிய மலையின்கண், வேங்கை மரத்தின் அடியில் வளைந்த கொம்பினையுடைய ஆமான் தன் கன்றொடு தங்கியிருக்கும். அவை துயிலக்கண்ட பஞ்சு போன்ற தலையையுடைய மந்தி, கல்லென ஒலிக்கும் தன் சுற்றத்தாரைக் கையால் அமர்த்தி குரலெழுப்பாது அடக்கும். பின் அருகில் சென்று ஆமானின் பால் சுரந்த மடியை அழுந்தும்படி பற்றியிழுத்து இனிய பாலைக்கறக்கும். கறக்கின்ற பாலானது தன் தொழிலையும் கல்லாத வலியகுட்டியின் கையினை நிறைக்கும் இத்தகைய மலைநாடு"[39] எனப் புனைத்துரைப்பர்.

## நெய்தல் நிலப் பாக்கம் பற்றிய புனைவு

உலோச்சனார் நெய்தல் நிலப்பாக்கத்தை, "எம் குடியிருப்பு நிலவைப்போல் விளங்கும் வெண்மணல் பரந்த தெருவின்கண் புல்லால் வேயப்பெற்ற சின்னஞ்சிறு குடிசைகளையுடையது. நீரால் சூழப்பெற்றது. புன்புலால் நாற்றம் வீசும். ஊர் என்று சொல்லத்தக்கதல்லாத மிகச்சிறிய

குடியிருப்புதான். ஆனால் இது இன்ப எல்லையின் இருப்பிடமாகும். இங்கு எவராவது ஒருமுறை வந்து தங்கினால் பிறகு அவர் சொந்த ஊரையும் மறந்து துறந்துவிடுவர். எம்பதியை விட்டுப் பிரியவே நினையார். அத்தகைய பண்புடையது எம்பதி"[40] என உரைப்பர். இங்ஙனம் நெய்தல் நிலம் செயற்கை மாசுபடாத இயற்கை எழில் சூழ்ந்திருக்கும் காட்சியமைப்பினைத் தம்பாடலில் புனைந்துள்ளார் புலவர்.

**சுரப்புனைவு**

மாமூலனார் சுரத்தின் தோற்றத்தை "நெருப்பு போன்ற ஞாயிற்றின் கதிர்கள் நிலம் பிளக்குமாறு பசுமையறச் சுடுவதால், நிழல் சுருங்கி வாடிய மரங்களையுடையது. பாறைகள் கொதித்து நீரற்ற பைஞ்சுனைகளில் ஈரம் இல்லாமற் போகும்படி காய்தலால் அங்கு சொரியும் மூங்கில் நெல்லும் பொரியும் வெம்மையுடையது. வழிப்போவார் யாரும் இல்லாததால் ஆறலைகள்வரும் தொழிலற்றுச் சோம்பி இருக்கச் சுரம் பொலிவிழந்து இருத்தலை"[41] எடுத்துரைப்பர். இங்ஙனம் பாலைநிலம் வெம்மையால் நிலம் பிளந்து, மரங்கள் காய்ந்திருத்தல், பாறைகள் கொதித்திருத்தல், சுனைகள் ஈரமில்லாமலிருத்தல், மூங்கில் நெல் பாறைகளில் சொரிந்து பொரிதல் என இயற்கையின் சீற்றத்தால் நிலம் அடையும் துயரைக் காட்சிப்படுத்துவர். இயற்கையின் அழகிய தோற்றத்தைப் புனையும் புலவர்கள் இயற்கையின் துயரத்தையும் புனைந்திருப்பது அவர் தம் பொதுமையுணர்வைப் புலப்படுத்தும். செழுமையை மட்டும் காட்சிப்படுத்தாமல் அதன் மறுதலையையும் காட்சிப்படுத்தியுள்ள திறம் குறிப்பிடத்தக்கது.

## தலைவனின் தோற்றப் புனைவு

தலைவன் இரவுக்குறி வந்தவிடத்து, அவன் நிற்கும்நிலையை, "தலைவன் மழைத்துளியிலே நனைந்தும், மாலைபோல் தோளிலிருந்து தொங்குவதுமாகிய ஒளி உமிழும் வாளையும், நீர்ப்பாசியால் சுற்றப்பட்டமையால் பசிய வண்ணம் கொண்ட வீரக்கழலையும், குளிர்ந்த நீர்த்துளி தங்கியதும் வரிந்து கட்டப்பட்டதுமான கச்சையையும் உடையவனாய், மாரிக்காலத்திலே குன்றத்தைக் காத்து நிற்கும் காவலாளி போல நிற்பதை"[42] அழகுறக் கபிலர் புனைந்துரைப்பர்.

## தலைவியின் தோற்றப்புனைவு

சங்ககாலம் தொட்டு இன்றுவரை பெண் நலன்களைப் போற்றிப் புகழாத புலவர்கள் இல்லை. இத்தகு பெண்களின் அழகு நலன்களைக் கலித்தொகை,

"அணைமருள் இன்துயில் அம்பணைத் தடமென் தோள்
துணைமலர் எழில் நீலத்து ஏந்து எழில் மலர்உண்கண்
மணமௌவல் முகை அன்ன மாவீழ் வார்நிரை வெண்பல்
மணம் நாறு நறுநுதல் மாரி வீழ் இருங்கூந்தல்
அலர்முலை ஆகத்து, அகன்ற அல்குல்
சிலநிரை வால் வளை" (கலித்.14:1-6)

என விளக்கும். தலைவி இனிமையாக உறங்குவதற்கு ஏற்ற மென்மையான அணைகளைப் போன்ற அழகிய மூங்கிலை யொத்த மெல்லிய தோள்களையும், எழில்மிகுந்த கருநீல மலரின் எழுச்சிமிக்க அழகோடு மலர்போன்ற மைதீட்டிய இரண்டாகிய அகன்ற கண்களையும், மணமுடைய முல்லை மொட்டுப் போன்ற வண்டுகள் மொய்க்கும் வெண்மையான பற்களையும், நறுமணம் வீசுகின்ற நறியதாகிய நுதலினையும், மேகம் விரும்பும் கரிதாய இருண்ட கூந்தலினையும்,

மார்பிடத்தே பெருத்த முலையினையும், அகன்ற அல்குலினையும் உடையவள் என அவளது தோற்றத்தைப் பாலைபாடிய பெருங்கடுங்கோ குறிப்பிடுவர்.

மேலும் தலைவியின் தோற்றச் சிறப்பை "கோதுதல் உற்ற கடை குழன்ற கூந்தல். வளைந்த முன்கை, நெடிய மெல்லிய தோள். அழகிய நீலமலர் போன்ற மையுண்ட கண், மான்பிணை போன்ற மருண்டநோக்கும் மழையைப் பெற்ற இளந்தளிரைப் போன்ற நிறம், ஒளிர்கின்ற அழகிய நெற்றி, விழுந்தெழாத கூரிய எயிறு, விழுந்தெழாத முகை போலும் வெள்ளிய பல், கொடி போன்ற நுண்ணிய இடை இத்துணையும் சிறக்க அமைந்தவள்"[43] எனக் கபிலர் புனைந்துரைப்பர்.

**தலைவியின் இளமைப் பருவப் புனைவு**

பேதை பருவத்திலிருந்து வளர்ந்து பெதும்பைப் பருவம் அடைந்த தலைவியை, "அறிவினை உடைய இளையமகளே, நினக்கு மார்புகள் அடிவரைந்து கட்புலனாகி நிரம்பின. விழுந்து முளைத்த கூர்மையான பற்கள் ஒளிகொண்டன. கூந்தலும் முடித்தலுக்கு ஏற்றவாறு நன்கு வளர்ந்துள்ளது. தழையாடையை உடுத்தியுள்ளாய், சுழன்று திரியும் நின் தோழியருடன் எவ்விடத்தும் செல்லாதே. நீ பேதைப்பருவத்தினள் அல்லள், பெதும்பைப் பருவத்தினை அடைந்துவிட்டாய்"[44] எனத் தலைவியின் வளர்ச்சியை அழகுற எடுத்துரைப்பர் கயமனார்.

**தலைவியின் உறுப்புகள்**

**வாய்**

தலைவியின் வாய் முள்முருங்கை மலரைப் போன்று சிவந்து காணப்படுவதை, "கவிர் இதழ் அன்ன காண்பு இன் செவ்வாய்" (அகநா.3:15) எனும் அடிகள் குறிப்பிடும்.

**பரத்தையின் கண்**

*"பரத்தையர் கண்கள் நீராடுதலாலும், கள் உண்ணுதலாலும், காதலரோடு ஊடுதலாலும் சிவந்து காணப்படுவதைப்"*[45] பரிபாடல் சுட்டும்.

**அந்தணர் தோற்றப் புனைவு**

மறைபொருளை அறிந்தவரும் நீண்ட தாடியுடன் தவமிருப்பவரும் அந்தணர் எனப்படுவர். அந்தணர் என்ற சொல் முனிவர்களைக் குறிக்கும். தற்பொழுது அப்பெயர் வேதம் அறிந்த அனைவரையும் குறிக்கப் பயன்படுகிறது. இவ் அந்தணர்களின் தோற்றச் சிறப்பை,

*"எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடைநீழல்*
*உறித் தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்*
*நெறிபடச் சுவல் அசைஇ, வேறு ஓராநெஞ்சத்துக்*
*குறிப்பு ஏவல் செயல் மாலைக் கொளை நடைஅந்தணீர்*
*வெவ் இடைச் செலல் மாலை ஒழுக்கத்தீர்"* (கலித்.9:1-5)

என்று கலித்தொகை சுட்டும். இதில் அந்தணர்கள் சூரியனின் வெப்பத்தை தாங்குவதற்காக குடையின் நிழலிலே, உறியிலே வைத்த கமண்டலத்தையும், பெருமைசான்ற முக்கோலையும் முறைப்படத் தோளிலே வைத்துக்கொண்டு மெய்ப்பொருள் அன்றி வேறொன்றையும் கருதாத மனத்தினராய் ஐம்பொறிகளும் தமக்கு ஏவல் செய்வதை இயல்பாகக் கொண்டவர்கள். அவர்களுக்குரிய ஒழுக்கத்திலிருந்து வழுவாதவர்கள். வெவ்விய காட்டிடத்தே செல்லும் ஒழுக்கத்தவர் என வருணிக்கப்பட்டுள்ளது. மேலும்,

*"நீடிய சடையோடு ஆடா மேனிக்*
*குன்று உறை தவசியர் போல"* (நற்.141:4-5)

என்ற அடிகள், குன்றின்கண்ணே தங்கும் நெடிய சடையுடனும் அசையாத மேனியுடனும் தவம் புரியும் முனிவர்கள் என அந்தணர்களின் தோற்றம் சுட்டப்பட்டுள்ளது.

## இடையன்

முல்லைநில ஆயர்குடியில் ஒரு சாரார் இடையர்கள். இவர்கள் ஆடுகளை மேய்க்கும் தொழில் செய்பவர்கள். பகல் முழுவதும் ஆடுமேய்த்தலும், இரவானதும் கிடை அமைத்துப் பாதுகாத்தலுமே இவர்களது வேலையாகும். "மழை பெய்கின்ற காலத்தில் பால்விலை கூறும் இடையன், கையில் பலவாகிய காலிட்டுப் பின்னிய உறியுடன், தீக் கடைக்கோல் முதலான கருவி பலவற்றை இட்ட தோற்பையினையும் ஒரு சேரச் சுருக்கிக் கட்டினன். அவற்றைப் பனையோலைப் பாயொடு சேர்த்துக்கட்டி முதுகில் சுமந்து சென்றனன். அங்ஙனம் செல்கையில் நுண்ணிய பல நீர்த்திவலைகள் அவனுடைய உடம்பின் ஒரு பகுதியை நனைத்தன. கையிலிருந்த கோலையூன்றி அதனிடம் ஒரு காலை ஊன்றியவனாய் ஒடுங்கிநின்ற அவ்விடையன் நாவை மடித்தபடி 'வீளை'யொலியை எழுப்பினான். அவ்வொலி கேட்ட ஆட்டுக்கூட்டம் வேற்றிடங்களில் திரியாது மயங்கி அவ்வண்ணமே தங்கிநிற்கும்"[46] என இடையனின் செயல் திறம்படக் காட்சிப் படுத்தப்பட்டுள்ளது.

## மழவர்கள்

மழவர்களின் தோற்றச்சிறப்பை, "மழவர்கள் ஆட்டுக்கிடாயின் கொம்பினைப் போன்று சுற்றிச் சுருண்ட பிடரியை மறைக்கும் தலைமயிரினையும், சிவந்த கண்களையும் உடையவர்கள். அவர்கள் தம் வாயினின்று எழும் இருமலாகிய பகையைத் தீர்க்கும் பொருட்டு, புற்று மண்ணை வாயில் அடக்கிக் கொள்வர். மிக்க வலிமையுடைய நெருப்பு

உமிழும் சிறிய அம்பினை வில்லோடு கையிற் பிடித்துக்கொள்வர். வெண்ணெயை வெளிக்கொணரும் தயிர் கடையும் மத்தினைக் கவர்ந்துகொண்டு ஆனிரைகள் உள்ள இடத்து, தம் காலடிகளை மறைக்கும் செருப்புகள் தேயச் செல்வர், பகைவரின் காவல்மிகுந்த இடங்களில் கன்றுகளையுடைய ஆனிரைகளைக் கொள்ளைகொண்டு அவற்றை அகன்ற பரப்பினைக் கொண்ட பெருங்காட்டிடத்தே கொண்டுபோவர்”[47] என்பர் மாமூலனார். இதில் தலைமுதல் கால்வரை மழவர்களின் தோற்றம் அவர்தம்செயல் மிக நுண்மையாக வருணிக்கப்பட்டுள்ளது.

## குழந்தை அணிந்துள்ள அணிகலன்களின் புனைவு

சங்க மக்கள் தம் குழந்தைகளுக்குப் பல்வேறு அணிகலன்களை அணிவித்து மகிழ்ந்துள்ளனர். குழந்தையின் தலை, கழுத்து, மார்பு, கை, கால், இடை என்று பல்வேறு இடத்திலும் அணிகள் அணிந்துள்ளனர். அவ்வகையில் ஒரு தாய் தன் மகனுக்கு அணிவித்த அணிகலன்களைக் கலித்தொகை, “பசும்பொன்னை உருக்கி இரண்டு வடங்களாக்கிப் பின்னி நெருப்பிலிட்டு ஒளிபெறச் செய்த அழகிய பாதசரம் காலிலே விளங்குகின்றது. கைவேலைப்பாடு மிகுந்த பொற்காசுகளையும், அதன் மேல் பவளங்களையும் பதித்துக் கோத்து அதன்மேல் நெகிழும் அழகிய மென்பட்டாடை இடுப்பிலே விளங்குகின்றது. நண்டுக் கண்ணைப் போல முழுவதும் சுற்றியமைத்த அரும்பு வேலைப்பாடுகளுடன் உன் கையில் கொடியும், எறியாத வாளும், ஏற்றாத மழுவும் செறியுமாறு கட்டி இடையிலே மழைக்காலத்தில் காணப்படும் கருஞ்சிவப்பு நிறமுடைய தம்பலப்பூச்சி போன்ற தட்டிலே இடப இலச்சினை இட்ட அணிகலன்களையும் அணிந்துள்ளமை”[48] பற்றிக் குறிப்பிடுகின்றது.

இங்ஙனம் பல்வேறு அணிகலன்களைக் குழந்தைகளுக்கு அணிவித்தமையைக் கண்ட புலவர் அதனை நுட்பமாகக் காட்சிப்படுத்தியமை சுட்டத்தக்கது.

## திருமண நிகழ்வு பற்றிய காட்சிப் புனைவு

"பழந்தமிழ் மக்கள் திங்கள் உரோகிணியோடு கூடிய நாளைத் திருமணத்திற்குரிய சிறந்த நாளாகக் குறித்தனர். அந்நாளில் வீட்டிற்கு முன் வரிசையாகக் கால்களை நட்டுப் பந்தலிட்டனர். பந்தலின் கீழ் புதுமணல் பரப்பினர். மனைவிளக்கு ஏற்றி மாலைகளைத் தொங்கவிட்டனர். இடையறாது பெருஞ்சோறு விருந்து அளித்தனர். முதுமையான செவ்விய பெண்டிர் திருமணத்தைச் செய்து வைத்தனர். புதல்வனைப் பெற்றெடுத்த மங்கல மகளிர் நால்வர் கூடி 'கற்பினின்றும் வழுவாது நல்ல பலவற்றினும் உதவியாக இருந்து, நின்னை மனைவியாகப் பெற்ற நின்கணவனைப் பேணிக்காக்கும் பெருவிருப்பத்தை உடைய ஆகுக' என வாழ்த்தினர். நீரொடு நெல்லும் மலரும் கலந்து மணமக்களின் கூந்தலில் தூவினர்"[49] என்று வதுவையாகிய திருமணச் சடங்குகள் நிகழ்ந்தமையை நல்லாவூர் கிழார் புனைந்துரைப்பர். தமிழர்தம் திருமணமுறை பற்றி அறிவதற்கு இக்காட்சிப் புனைவே பெரிதும் துணைநிற்கின்றது.

## தூண்டில் கொண்டு மீன் பிடித்தல்

நீண்ட கழியின் நுனியில் நரம்பினைக் கட்டி அதன் நுனியில் இரும்பாலான வளைந்த முள்ளைக் கட்டுவது தூண்டிலாகும். இதனைப் பயன்படுத்தி வலைஞர்கள் மீன்பிடித்தலை, "பிளந்த வாயினையுடைய பல வரிகளையுடைய பெரிய ஆண்வரால்மீன், வளைந்த வாயினையுடைய தூண்டிலில் தன்னைக் கொல்வதாகிய இரையினை விழுங்கியது. ஆம்பற் கொடியின் மெல்லிய இலைகள் கிழியுமாறும், குவளையின் அரும்பு

மலர்ந்த பல மலர்கள் சிதையுமாறும் பக்கத்தே எழுந்து பாய்ந்தது ; பின்னர் ஒன்றொடொன்று பின்னிப் பிணைந்து கிடக்கும் அழகிய வள்ளையின் நுண்ணிய கொடிகளைக் கலக்கியது. தூண்டிலையிட்ட வலைஞன் அம்மீனை இழுக்கவும் வராது, மூக்கில் கயிறிட்டு இழுக்கப்படும் சினம் மிக்க எருதினைப் போன்று செருக்கு மிகுந்தது"[50] என மீன்பிடிக்கும் காட்சியை நக்கீரர் புனைந்துரைப்பர்.

## எறியுளிபட்ட திமிங்கலத்தின் செயல்

பரதவர்களால் "எறியுளியால் தாக்கப்பட்ட பெருமீன் (திமிங்கிலம்) இரத்தமிழந்து துள்ளிக் குதித்து கடற்பரப்பினை அலைக்கழிக்கும் அப்படி அலைக்கழிக்கும் போது ஆகாயத்தை அழகு செய்யும் வானவில்லைப் போன்று உயரத் தாவிக் குதித்து கடலில் விழும். கடல் நீரை நீண்ட தூரத்திற்கு நீர்த்துவலைகளால் பீய்ச்சியடிக்கும். இறுதியில் வலுவிழந்து வரிசையாக நின்றிருந்த படகுகளின் பக்கத்தில் சோர்ந்துபோய் மிதந்து கிடக்கும்"[51] என்று திமிங்கிலத்தின் செயலை விவரிப்பர் உலோச்சனார்.

## கோட்டுமீனை (சுறா) வேட்டையாடுதல்

நீண்ட கொம்புகளையுடைய சுறாமீன் கோட்டுமீன் என வழங்கப்படும். "பெரிய கொம்பன் சுறாமீன்கள் 30 அடிவரை நீண்டு வளரும்"[52] என்பர் பி.எல்.சாமி. பெருமீன்களைப் போலவே கோட்டு மீனையும் வேட்டையாடியதை அறியமுடிகின்றது. கூரிய வாயையுடைய எறியுளியை உறுதியான மூங்கில் கோலில் பிணைத்து நீர்பரப்பில் சுறாமீன் மீது எறிந்து, பின்னர் அதே விசையோடு மூங்கில் கழியை இழுப்பர். இம்மீன் வேட்டையினை,

"கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறிஉளி
முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்
தாங்குஅரு நீர்ச்சுரத்து எறிந்து, வாங்குவிசைக்
கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய" (குறுந்.304:1-4)

எனக் குறுந்தொகை சுட்டும்.

## தைந்நீராடல்

தை மாதத்தில் நோன்பிருக்கும் கன்னிப்பெண்கள் நீராடுவதை,

"நெறி நிமிர் நுடங்கு அழல் பேணிய சிறப்பின்
தையல் மகளிர் ஈர் அணி புலர்ந்தர
வையை நினக்கு மடை வாய்த்தன்று
மையாடல் ஆடல் மழ புலவர் மாறு எழுந்து
பொய் ஆடல் ஆடும் புணர்ப்பின் அவர் அவர்
தீ எரிப்பாலும் செறி தவம் முன் பற்றியோ
தாய் அருகா நின்று தவத் தைந் நீராடுதல்" (பரி.11:85-92)

என்ற அடிகள் உரைக்கும். இதில் திருமணமாகாத கன்னிப் பெண்கள் தங்கள் தாயாருடன் சென்று, சடங்கு முறைகளை அறிந்த முதுபார்ப்பினிகள் நோன்பு செய்யும் முறையை அறிவித்தவாறு பனிமிகுந்த வைகறைப் பொழுதில் வையையில் நீராடினர். அந்தணர்கள் வேதநெறிப்படி வளர்த்த வேள்வித் தீயினை வலமாக வந்து வணங்கிய, அக்கன்னியர் தம் ஈர ஆடையை அதன் அருகில் நின்று உலர்த்தினர். வையையை நோக்கி வையையே வேள்வித்தீயில் கொடுக்கும் அவிப் பொருளை ஏற்றுக்கொள்வாயாக என்று கூறினர். மேலும் மையோலை பிடித்த இளம்புலவர் விளையாட்டிற்கு மாறாக அவருடன் கூடிநின்று காமக்குறிப்பில்லாமல் விளையாடுகின்ற தோழியர் கூட்டத்தையுடைய

அக்கன்னியர் அவரவர் தம் தாயாருடன் நின்று நோன்புமிகுந்த இத் தைந்நீராடலைச் செய்தனர் எனப் பரிபாடல் புனைந்துரைக்கும்.

### பனைவண்டி

கிராமப்புறங்களில் சிறுவர்கள் விளையாடுவதற்காகப் பனங்குரும்பையைக் கழிநுனியில் பொருத்தி தேர் என்று கூறி ஓட்டிவிளையாடும் நிகழ்ச்சி இன்றளவும் காணப்படுகிறது. இத்தகைய காட்சியை மருதன் இளநாகனார் தம் பாடலில் வெளிப்படுத்தியுள்ளார்.

"பெருமடற் பெண்ணைப் பிணர்த்தோட்டுப் பைங்குரும்பைக்
குடவாய்க் கொடிப் பின்னல் வாங்கி தளரும்
பெருமணித் திண்தேர்க் குறுமக்கள்" (கலித்.83:8-10)

என்பதில் பெரிய மடலையுடைய பனையினுடைய சருக்கரை பொருந்திய முகிழையுடைய பசிய குரும்பையை, உருள் தேராக்கி கொடியாற்கட்டி சிறுவர்கள் இழுத்து விளையாடிய காட்சி புனையப்பட்டுள்ளது.

### தினை குற்றுதல்

"தினைப் புனத்தில் தினைக்கதிர்கள் முற்றித் தலைசாய்த்துள்ளன. தாழ்ந்து நிற்கும் கதிரை உருவி, அரும்பி வளர்ந்த சந்தன மரத்தால் ஆன உரலில் இட்டு, முத்து நிறைந்த யானைத் தந்தத்தால் ஆன உலக்கையைக் கொண்டு குற்றுவதைக்"[53] கபிலர் காட்சிப்படுத்துவர்.

### மடல் ஏறுதல் பற்றிய காட்சிப் புனைவு

பனங்கருக்கால் குதிரை ஒன்று செய்து இக்குதிரைக்கு ஆவிரம்பூ மாலையும் மணியும் அணிவித்து (குறுந்.173) காமுற்ற பெண்ணை எய்தப் பெறாத ஆடவன், மார்பில் எலும்பு மாலை அணிந்துகொண்டு மடல் மாமேல் ஏறித் தெருவில் வருவான் (குறுந்.17, 182). இச்செயல்

மடலேறுதல் எனப்படும். மடலேறுதலால் தலைவனின் திட்பத்தையும், அவன் காதற்கு இலக்கான நங்கையையும் ஊரார் அறிவர். மேலும் அரம் போலும் பனங்கருக்குப் பட்டுப்பட்டு அவன் மேனியிலிருந்து ஓடிவரும் குருதியொழுக்கைக் கண்டு இரக்கம் கொள்வர். இன்ன காதலனுக்கு மகளைக் கொடுக்க மறுக்கலாமா என்று அவள் பெற்றோரைக் குறையுங் கூறுவர். ஆதலின் ஊரறிய மடலேற்றம் நிகழாதபடி மணங்கள் முடிந்துவிடும்"[54] என்பர் வ.சுப.மாணிக்கனார்.

நற்றிணையில் மடல் ஏறுதல் குறித்து, "நல்ல பனைமடலால் உணவுண்ணாத ஒரு குதிரைசெய்தும் அதற்குச் சிறுசிறு மணிகளைப் பூட்டியும், பெரிய கச்சினை அணிவித்தும் அழகு செய்தபடி அதன் மேலூர்பவனாய்ச் சிறிய அரும்புடைய எருக்கம் பூ மாலையைச் சூடியவனாய் ஒருவன் அமர்ந்திருந்தனன். அக்குதிரையைத் தெருவின்கண் இழுத்தவாறு சிறிய, குறிய பிள்ளைகள் திரிந்த"[55] காட்சியை குண்டுகட்பாலியாதனார் விளக்குவர்.

## நடுகல் அமைப்பு

போரில் விழுப்புண்பட்டு இறந்த மறவர்களுக்கு அவர்களின் நினைவாக வீரத்தைச் சிறப்பிக்கும் பொருட்டு நடப்படும் கல் நடுகல் ஆகும். இதில் மறவர்களின் பெயரும், சிறப்பும் எழுதப்படும். "ஆனிரை மீட்டலில் இறந்த கரந்தை வீரர்களின் நினைவாக, அவர்தம் நல்ல புகழினை நிலைநிறுத்துமாறு பெண்யானைகள் படுத்துக் கிடந்தாற் போன்ற குன்றுகளின் பக்கத்தே நட்டுவைத்தாற்போன்ற இயற்கையாக எழுந்த கற்களின் அகன்ற இடத்தைச் செதுக்கி, பல வடிவங்களை அமைத்து, அவற்றை நீராட்டி நறுமணமுள்ள மஞ்சளை ஈரம் புலரா புறப்பகுதியில் பூசி, அம்புகொண்டு உரித்தெடுத்த ஆத்தி நாரினால்

சிவந்த கரந்தைப் பூவினைத் தொடுத்துக் கட்டிய கண்ணியை, அவ்வடிவங்களுக்குச் சூட்டி வணங்கியதை"[56] மதுரை மருதன் இளநாகனார் குறிப்பிடுவர்.

## தொகுப்புரை

ஐம்புல உணர்வில் மூன்றாவதாகச் சுட்டப்பெறுவது கட்புல உணர்வாகும். சங்கப் புலவர்கள் தங்கள் கட்புலனால் கண்டு உணர்ந்ததை அப்படியே பாடல்களில் புனைந்துள்ளனர்.

மனித வாழ்க்கையில் புறக்கணிக்க முடியாத அளவிற்கு இயற்கை முதலிடம் வகிக்கிறது. இயற்கையின் முற்கூறாகிய மலையின் அழகினை தினைக்கதிர்கள், மூங்கில்கள், காந்தள் கொத்துக்கள், பூக்கள் நிரம்பிய தளிர்கள், மந்திக் கூட்டங்கள், தேன் உண்ணும் வண்டினங்கள், யானைகள் நிறைந்த கரும்புத் தோட்டங்கள் ஆகியவற்றின்வழி ஒருங்கே நிறைந்து திகழ்வதைக் காட்சிப்படுத்தியுள்ளனர்.

பலாமரங்கள் நிறைந்த மலைச்சாரலில் தேனடைகள் முழைஞ்சுகளில் சிதறி வீழ்வதும், குடம் போன்ற பழங்கள் நிறைந்த பலாத் தோட்டத்தில் மின்மினிப் பூச்சிகளை விளக்காகக் கொண்டு மலைமுகிலின் இயக்கத்தைக் காணுகின்ற குறவர்கள் எனப் பக்க மலைக்காட்சிகள் நன்கு புனையப்பட்டுள்ளன.

சூரியனின் ஒளிச்சுடர் பட்டு, பனியொழுகும் இமயமலை, எரிகின்ற தீச்சுடர் போல தோற்றம் தருவது அழகிய காட்சிப்புனைவாகும். இப்புனைவு புலவர் இமயமலைக்குச் சென்று வந்ததைப் புலப்படுத்தும்.

இருபக்க மலைகளின் ஊடே வீழும் அருவியின் அழகும், அடுக்கடுக்கான மலைத் தொடர்களில் கொட்டும் அருவி,

இளஞாயிற்றின் ஒளிபட்டு மிளிருதல், சாரலில் நனைந்த வேங்கைப் பூவின் அழகு, யானைகள் மலரும் நீருமாகக் கலந்து சொரிவதால் தாமரை மலரிடத்து திருமகள் உறைந்திருப்பது போல் காட்சி அளித்தல் என அருவியின் அழகிய தோற்றம் நன்கு புனையப்பட்டுள்ளது.

அன்று கபிலர் கண்ட இயற்கை ஓவியம் அவர்தம் கட்புலன் உணர்வில் திருமகளாக மாறியதும், அவ்வடிவமே இன்று கோயில்கள், நிழற்படங்கள் என அனைத்திலும் காட்சியளித்தலும் குறிப்பிடத்தக்கது.

ஆற்றுநீர் வளைந்து ஓடுவது பாம்பின் நெளிந்தோடும் காட்சியுடன் ஒப்பிட்டுரைக்கப்பட்டுள்ளது.

ஞாயிறு மறையும் அந்தி நேர வானம் உலைக்களத்தீயில் வெந்து மெல்ல மெல்ல ஆறிவரும் பொன்னின் நிறம் போன்று தோற்றமளிப்பதாக உரைப்பது அழகிய காட்சிப் புனைவாகும்.

கரிய மேகத்தில் மின்னல் மின்னுவது மலைகள் கண்களை இமைப்பது போலவும், காயா மரங்களிடையே சரக்கொன்றை பூத்திருப்பது போலவும் காட்சிப்படுத்தியிருப்பது புலவர்களின் கற்பனைத் திறனுக்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டாகும்.

பொழுதுப் புனைவுகளில் கார்காலம், கூதிர் காலம், முன்பனிக்காலம், பின்பனிக்காலம், இளவேனிற் காலம் ஆகியவற்றின் புனைவுகளும் சிறுபொழுதில் மாலைப்பொழுதின் புனைவும் மிகச் சிறப்பாகப் புலவர்களால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

கார்காலத்தில் அனைத்து உயிர்களும் இன்பமாகக் காணப்படும். கார்கால வரவை அறிவிப்பது போல வெண்முல்லையும்,

செம்முல்லையும் நிலவுபோல அரும்புகளைத் தோற்றுவிக்க, மேகம் கருக்கொண்டு மழைபொழிவதால் நிலம் குளிர மரஞ்செடிகொடிகள் தளிர் ஈன்று பச்சைப்பசேலென்று காட்சியளிக்கும் நிலை கார்காலப் புனைவாகப் புலவர்களால் சித்திரிக்கப்பட்டுள்ளது.

கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனிற் காலங்களில் பூக்கள் மலரும் தன்மையும், வண்டுகள் ரீங்காரமிடும் தன்மையும் சங்கப் பாடல்களில் சிறப்புற இடம்பெற்றுள்ளன.

மலர்களின் காட்சிப் புனைவில், மலர்களின் நிறம், தோற்றம், வடிவ ஒப்புமை போன்றவை ஒருங்கே வெளிப்படுத்தப்பட்டுள்ளன. பூக்கள் ஒன்றாக மலர்ந்திருப்பது மலர்கண்காட்சி போல காட்சியளிப்பதாகச் சுட்டப்பட்டுள்ளது.

பறவைகளில் எருவை, கானக்கோழி, கிளி, குருவி, வாவல், தும்பி போன்றவற்றையும் விலங்குகளில் காளை, குதிரை, முயல், வெள்ளெலி, யாமை போன்றவற்றையும் புலவர்கள் அழகுறக் காட்சிப்படுத்தியுள்ளனர். மேலும் புலி, யானை இரண்டும் போர் செய்யும் காட்சித்திறம் அழகுற புனையப்பட்டுள்ளது.

குன்றத்தைக் காக்கும் காவலாளியுடன் தலைவனை ஒப்பிட்டுள்ளனர். தலைவியைத் தலை முதல் பாதம் வரை கேசாதிபாதமாக வருணித்துள்ளனர். பரத்தையின் கண்கள் புனலால், கள்ளால், ஊடலால் சிவந்திருக்கும் காட்சி அழகுற இயம்பப்பட்டுள்ளது.

அந்தணர், இடையர், மழவர் ஆகியோரின் தோற்றங்கள் புலவர்களால் அழகுற வருணிக்கப்பட்டுள்ளன. இத்தகு காட்சிப் புனைவு சங்ககால மக்களின் தோற்றத்தை அறிவதற்குப் பெரிதும் துணைசெய்கிறது.

பழந்தமிழ் மக்களின் திருமணச் சடங்கு முறைகளையும், தொழில் முறைகளையும், நுணுக்கமாகப் புலவர்கள் காட்சிப்படுத்தியுள்ளனர்.

சங்ககாலப் புலவர்கள் இயற்கை மீது கொண்ட ஆர்வத்தினால் பூக்களின் நுண்ணிய வேறுபாடுகளையும், மலரும் காலம், சூழல் ஆகியவற்றையும் அழகுறப் புனைந்துள்ளனர். தலைவியின் உறுப்பு நலன்கள் அகப்பாடல்களில் மிகச் சிறப்பாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. தொல்.நூ.1526
2. இளம்பூரணர் (உரை.), தொல்.பொருள்., ப.175
3. வாழ்வியற்களஞ்சியம், தொகுதி பத்து, ப.52
4. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.55
5. கலித்.40:11-29
6. குறுந்.40:7-11
7. அகநா.242:16-22
8. கலித்.44:1-7
9. அகநா.314:1-7
10. தொல்.நூ.952
11. அகநா.264:1-10
12. மேலது, 294:1-11
13. மேலது, 237:1-5
14. நற்.69:1-9
15. மேலது, 117:1-7
16. கலித்.101:1-5
17. அகநா.9:1-9
18. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், பக்.108-109
19. ஐங்.320:1-3
20. மேலது, 338:2-3
21. நற்.193:1-2
22. மேலது, 79:1-3
23. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், பக்.50-51

24. குறுந்.107:1-2

25. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப.122

26. நற்.202:9-11

27. அகநா.176:1-7

28. ச.மெய்யப்பன் (பதி.), வெற்றி தமிழ் அகராதி, ப.305

29. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், ப.343

30. நற்.21:6-8

31. குறுந்.46:1-2

32. து.இரவிக்குமார், சங்கப்பாடல்களில் பெயர்க்குறியீடுகள் (ஆய்வேடு), ப.299

33. கலித்.46:1-10

34. மேலது, 104:35-44

35. நற்.98:1-7

36. ஐங்.43:1-2

37. கலித்.79:1-6

38. கலித்.71:1-8

39. நற்.57:1-7

40. அகநா.200:1-6

41. மேலது, 1:9-15

42. ஐங்.206

43. கலித்.58:1-5

44. அகநா.7:1-7

45. பரி.16:39-40

46. நற்.142:1-8

47. அகநா.101:4-11

48. கலித்.85:1-13

49. அகநா.86:1-17

50. மேலது, 36:1-7

51. அகநா 210:1-6

52. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.433

53. கலித்.40:3-5

54. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், ப.53

55. நற்.220:1-4

56. அகநா.269:3-13.

# மூக்குப்புலனுணர்வுப் புனைவு

மனிதனின் ஐம்பொறிகளில் இன்றியமையாதது கண்ணும் மூக்குமாகும். கண்ணிற்கு அடுத்தபடியாக இடம்பெறுவது மூக்கு. இம்மூக்கினால் சுவாசிக்கும் செயல் நடைபெறுகிறது. இச்செயல் நடைபெறாவிட்டால் மனிதன் உயிரிழந்துவிடுவான். ஆகையால் உயிர் வாழ்வதற்குரிய முக்கிய கருவியாக மூக்கு திகழ்கின்றது. அது மட்டுமின்றி நாற்றத்தை உணரும் நுகர்வு என்ற அடிப்படையிலும் செயல்படுகிறது. இந்நுகர்வினால் பொருள்களைக் கண்களால் காணாமலே நாற்றத்தின் தன்மையை அறிந்துகொள்ளமுடியும். அதனால் தான் தொல்காப்பியரும் ஐம்புலன்களில் நுகர்வினை நான்காவதாக வரையறை செய்துள்ளார். மூக்கு நன்னாற்றம், தீ நாற்றம் ஆகிய இரண்டையும் அறியக்கூடியது. மூக்கால் உணரக்கூடிய நாற்ற உணர்வை சங்க அகப்பாடல்களில் புலவர்கள் புனைந்துள்ள விதம் பற்றிக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

## இயற்கை மணம்

மலர்கள், மலைகள், சோலைகள், காய் கனிகள் போன்றவை வெளிப்படுத்தும் மணங்கள் இயற்கை மணத்தில் சுட்டத்தக்கன.

## மலர்களின் மணம்

சங்க இலக்கியத்தில் மலர்களின் மணங்களை கமழ், தேம்கமழ், மணங்கமழ், வெறிகமழ், கமழ்நறு, நாறு, நாறிய, நாறும், நாற்றம், தேன்நாறு, கடி என்பன போன்ற சொற்களில் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

## கமழ்தல்

கமழ்தல் என்பதற்கு, நாறுதல், மணத்தல், தோன்றுதல், வாசம் போன்ற பொருளுண்டு. கமழ்தல் என்பது மிகுதியான நாற்றத்தைக் குறிக்கும். பேச்சு வழக்கில் நல்ல மணத்தினை, நிறைந்த மணத்தினை 'கமகம'வென மணப்பதாகக் குறிப்பிடுவதைக் காணலாம். 'கம்' என்பதும் நறுமணத்தையே குறிக்கும். 'கமம் நிறைந்தியலும்'[1] என்பது தொல்காப்பியம். கம் என்பதிலிருந்து கம, கமழ், கமழ்தல் போன்ற சொற்கள் தோன்றியுள்ளன. சங்க இலக்கியத்தில் பல்வகை மலர்கள் மணத்தலை கமழ் என்ற சொல்லில் குறித்துள்ளனர். கமழ் என்னும் சொல் காந்தள், களா, பிடவு, கோங்கு, நுணா, ஞாழல், தாழை, பகன்றை, நீலம், புன்னை, வெண்கடம்பு, வேங்கை போன்ற மலர்களுடன் சேர்த்துச் சுட்டப்பட்டுள்ளது.

## காந்தள்

காந்தள் பூ மணமுடையதாகச் சங்க இலக்கியங்களில் கூறப்படுகின்றது. "காந்தள் பூவில், மஞ்சள் மிகுதியாகக் கலந்ததை வெண்காந்தள், கோடல் என்றும், சிவப்பு நிறைந்து காணப்பட்டதைச் செங்காந்தள் அல்லது தோன்றி என்றும் சங்கப்புலவர்கள் குறிப்பிடுகின்றனர்"[2] என்பர் பி.எல்.சாமி. "மணக்கின்ற குளிர்ந்த தாது உதிர்ந்த, முதிர்ந்த கோடல்மலர் தன் இதழ்களைக் கொத்தாக உதிர்த்து மணம் செய்தல்,"[3] "பாம்பின் படம் போன்று குளிர்ந்த காந்தள் பூவின் மொட்டுகள் மணங்கமழுமாறு கட்டவிழ்ந்து மலர்தல்,"[4] "அருவிகள் ஒலிக்கின்ற பெரிய மலையின் சாரலில் குருதிபோன்ற நிறம் பொருந்திய மணங்கமழும் காந்தள் மலர்கள்"[5] எனக் காந்தள் மலர்களின் மணம் புலவர்களால் புனையப்பட்டுள்ளது.

**களாவும், பிடவும்**

"பிடா ஒரு குற்றுமரம். இது இலையுதிர் மரமாகும். பிடாவின் பூ பெரியதாகவும், வெண்மையாகவும் நறுமணமுடையதாகவும் இருக்கும். கொத்தாகப் பூக்கும் தன்மையுடையது"[6] என்பர் பி.எல்.சாமி. பிடவின் பூ களாவின் பூக்களோடு சேர்ந்து மணம் வீசுவதை,

"களவுடன் கமழ, பிடவுத் தளை அவிழக்

கார் பெயல் செய்த காமர் காலை" (நற்.256:6-7)

என்பர் பாலைபாடிய பெருங்கடுங்கோ. இதில் கூரிய நுனியையுடைய களாவின் பூக்களோடு, பிடவ மலர்கள் யாவும் பிணிப்பு அவிழ்ந்து மணம் செய்தல் வருணிக்கப்பட்டுள்ளது. மேலும் "முல்லைநிலத்தில் வெண்ணிறப் பிடவமரத்தின் மலர்கள் மணம்செய்வதை"[7] மருதன் இளநாகனார் குறிப்பிடுவர். இங்ஙனம் களா, பிடா மலர்கள் மலர்ந்து மணம் பரப்புதல் புலவர்களால் புனையப்பட்டுள்ளது.

**கோங்கு**

வளப்பமுடைய கிளைகளைக் கொண்ட கோங்க மரத்தின் தண்ணியதாய் மணம் வீசும் மாலையினை

"வண்சினைக் கோங்கின் தண்கமழ் படலை" (ஐங்.370:1)

என ஐங்குறுநூறு சுட்டும்.

**நுணா**

கம் என்பது நிறைவான மணத்தைக் குறிக்கும். முழுவதும் நுணாவின் வெண்ணிறப் பூக்கள் கம்மென்று மணப்பதை,

"சிறுவெள் அருவித் துவலையின் மலர்ந்த

கருங்கால் நுணாவின் பெருஞ்சினை வான்பூச்

செம்மணற் சிறுநெறி கம்மென வரிப்ப" (அகநா.345:15-17)

என்னும் அடிகள் குறிப்பிடும். மரத்தின் வெண்ணிறப் பூக்கள் மணல் நிறைந்த சிறுவழியில் உதிர்ந்து மணம்பரப்பி அழகு செய்வதை குடவாயிற் கீரத்தனார் குறிப்பிடுவர். ஐங்குறுநூறும், "பெரிய கிளைகளையுடைய கரிய அடிப்பகுதியைக் கொண்ட நுணா மரங்கள் மலர்களால் நிறைந்து நறுமணம் பரப்பி நிற்பதைக்"[8] குறிப்பிடுகின்றது. இதில் நுணாவின் பூக்கள் கம்மென்று நறுமணம் பரப்புவது புனையப்பட்டுள்ளது.

## ஞாழல்

இவ்ஞாழல் மரம் பற்றி "நெய்தலுக்குரிய சிறந்த மரம் ஞாழல். இதன் காய்நுனியிலே சற்று வளைந்து புலிநகம் போன்றிருப்பதால் புலிநகக் கொன்றை என்றழைக்கப்படுகிறது. இது கொன்றை வகையைச் சேர்ந்தது. ஞாழலின் கிளைகள் கருமையானவை. பக்கவாட்டில் அடுக்காய் உள்ள சின்னஞ்சிறு இலைக்கொத்துகளையுடையவை. மலர்கள் மிகச் சிறியவை. செம்பொன்னிறமானவை. நறுமணம் வீசுபவை"[9] என்றுரைப்பர். தி.முத்துக்கண்ணப்பன். ஞாழல் மலர்கள், கடற்கரையின் மணற்பரப்பிலே இனிதாக மணம் பரப்பியிருப்பதை,

"எக்கர் ஞாழல் இகந்து படு பெருஞ்சினை
வீ இனிது கமழும்" (ஐங்.148:1-2)

எனச் சுட்டுவர் அம்மூவனார்.

## தாழை

"நெய்தல் நிலத்தின் புன்புலால் நாற்றத்தை மாற்றி நறுமணம் வீசி நலம்பயப்பது தாழையாகும். கண்டல், கைதை என்னும் பெயர்களாலும் தாழை வழங்கப்படுகிறது"[10] நறுமணம் வீசும் தாழை, நெய்தற்பூ, புன்னை ஆகிய மலர்களோடு சேர்ந்து மணம் செய்வதை, "கழியிடத்து நீலமணி

போன்ற நெய்தலின் கரிய மலரும், அம்மலர் நிறையுமாறு புன்னையின் பொன்போன்ற நுண்ணிய தாதும், தாழ்ந்து விளங்கும் தாழையும் பூமணம் நிறைந்து கமழ்வதை"[11] கீரங்கீரனார் சுட்டுவர்.

## பகன்றை

பகன்றை, பனிக்காலத்தில் மலர்வது. அகன்ற இலைகளைக் கொண்டது. கொடி இனத்தைச் சார்ந்தது. பெரிய பூக்களைக் கொண்டது. தேன் மிகுதியாக உடையது. இதன் மணம், கள்ளின் மணம் போன்று கமழ்வதை,

"பேர்இலைப் பகன்றைப் பொதி அவிழ் வான்பூ

இன் கடுங் கள்ளின் மணம் இல கமழும்" (குறுந்.330:4-5)

எனக் குறிப்பிடுவர் கழார்க் கீரன் எயிற்றியனார். இதில் பகன்றைப் பூ, நறுநாற்றம் இல்லாத கள்ளின் மணம் போலக் கமழும் என்றுரைப்பதன் மூலம் தீய நாற்றமுடைய பூவின் மணமும் புலவர்களால் புனையப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## நீலம் (நெய்தற் பூ)

நெய்தல் நிலத்திற்குரிய பூ நெய்தல். "நெய்தல் கொடிவகையைச் சார்ந்தது. இதனைச் செடி நூலார் 'Nymphase stellata' எனப் பெயரிட்டழைப்பர். இதையே நீலோற்பலம், நீலம், கருநெய்தல், பானல் எனப் பலபெயர்களில் கூறுவர். ஒரே இனமான 'Nymphase stellata' என்பதில் வெண்மை, சிவப்பு, நீலம், கருநீலம் ஆகிய நிறங்களையுடைய பூக்களைக் கொண்டவையாகச் செடி நூல் கூறும். அதில் கருநீலநிறமுடையதையே 'நெய்தல்' என்று சங்க நூல்கள் குறிப்பிடுகிறது"[12] என்பர் பி.எல்.சாமி. "கரியகழியில் மலர்ந்த, கண்போலும் நெய்தற் பூவின் நறுமணங் கமழ்கின்ற இதழினது மணத்தை அமிழ்து என விரும்பிச் சென்று குளிர்ந்த

தேனை வண்டினங்கள் உண்ட செய்தியை"[13] அகநானூறும், "கண்போன்று மலரும் நீலம் (நெய்தல்) மெல்லியதாய் மணம் செய்வதை"[14] நற்றிணையும், "நீர்நிறைந்த பொய்கையின்கண் பூத்துக் கிடக்கும் மணங்கமழும் நீலப்பூக்கள்"[15] என்று நெய்தற்பூவின் மணங்கமழும் தன்மை புலவர்களால் பல பாடல்களில் புனைந்துரைக்கப்பட்டுள்ளன.

## புன்னை

நெய்தல் நிலத்தில் மற்றுமொரு சிறப்புமிக்க மரம் புன்னையாகும். இம்மரம் பற்றி, "இதன் அடிமரமும் கிளைகளும் கருநிறமுடையன. இதன் இலை கரும்பசுமை நிறமுடையது. மலர்கள் கொத்துக் கொத்தாய்ப் பூத்துத் தொங்கும். அரும்புகள் வெண்மையானவை. மகரந்தம் பொன்னிறமானவை. இதன் அரும்புகள் முத்துப் போன்ற தோற்றமுடையன. அரும்புகள் மலர்ந்து நறுமணம் வீசும்"[16] என்றுரைப்பர் முத்துக்கண்ணப்பன். உப்பங்கழியின்கண் பூத்துக்கிடக்கும் மலர்களின் மணங்கமழும் இதழ்கள். சோலை சூழ்ந்த மலையிடத்து வளர்ந்துள்ள புன்னை மரத்தின் மணம் வீசும் மலர்கள் பொன்னிறங்கொண்டு மலர்ந்ததை,

> "கழிமலர் கமழ்முகம் கரப்ப, பொழில்மனைப்
> புன்னை நறுவீ பொன்நிறம் கொளாஅ" (அகநா.260:8-9)

என்ற அடிகள் விளக்கும்.

## வேங்கை

வேங்கை மரத்தின் மலர்கள் நறுமணமிக்கவை. இதன் சிறப்பை "கழுவுள் என்பானது காமூர் என்னுமிடத்து பூதத்தால் வழங்கப்பட்ட தெய்வத்தன்மை பொருந்திய பொரிந்த அடிப்பகுதியையுடைய வேங்கை மரத்தின் மணங்கமழும் மலர்கள்"[17] என மதுரை மருதன்

இளநாகனாரும், "அருவிகள் ஒலிக்கின்ற சிறுகுடிப் பாக்கத்திலுள்ள ஆடவர்கள் தேன்மணங்கமழுகின்ற கொத்துக்களையுடைய வேங்கையின் மலர்களைச் சூடியதைக்"[18] கபிலரும் சுட்டுகின்றனர். மேலும் "மலை அழகுறுமாறு வேங்கை மரங்களின் மலர்கள் மலர்ந்த விடியற்பொழுது. அப்பொழுதிலே பொன்போலும் பூக்களையுடைய மணங்கமழும் மகரந்தத் தாது"[19] எனப் புலவர் உரைப்பர். இங்ஙனம் வேங்கைப் பூவின் நிறம், மணம் போன்ற செய்திகள் புனையப்பட்டுள்ளன.

## வெண்கடம்பு

"வலப்புறமாகச் சுற்றிச் சுருண்டு மலரும் வெண்கடம்பின் புதிய மலர்கள் சுரமெல்லாம் மணங்கமழ்வதைக்"[20] கல்லாடனார் குறிப்பிடுவர். இதில் மராஅம் என்பது வெண்கடம்ப மரத்தைக் குறிக்கும். இதன் பூக்கள் வலப்புறமாகச் சுருண்டு மலரும் இயல்புடையது.

## நீர்ப்பூ கமழ்தல்

நீர்பரப்பின் மேலாய் எழுந்த பூக்கள் நெருங்கி மலர்ந்து கமழ்தலை, தலைவன் மார்பிலே அணிந்த மாலையின் நாற்றம் எனத் துணிந்த தலைவி, பின்பு, அது கழியில் பூத்த மலரின் மணம் என்பதை உணர்ந்த செய்தியை,

"நீர் நீவிக் கஞன்ற பூக் கமழுங்கால், நின் மார்பில்
தார் நாற்றம் என இவள் மதிக்கும்மன் ; மதித்தாங்கே
அலர் பதத்து அசை வளி வந்து ஒல்க, கழிப் பூத்த
மலர் என உணர்ந்து" (கலித்.126:10-13)

என்னும் அடிகள் விளக்கும்.

## காஞ்சி

"காஞ்சி மரத்தின் பூக்கள், மாலைகட்டினாற்போல, அதன் மென்மையான கிளைகளில் பூத்துக்குலுங்கும். இம்மரம் வயல்வரப்புகளில் நடப்பட்டு இருக்கும். இம்மரக்கிளைகள் எளிதில் வளைத்துப் பூக்களை உதிர்ப்பதற்கு ஏற்றவாறு குறைந்த உயரமுடையவை. இதனை குறுங்கால்காஞ்சி என்றும் கூறுவர்"[21] என்பர் வி.நாகராசன். "மணம் வீசும் மலர்களைக் கொண்ட காஞ்சிமரத்தின் பயற்றங்காய் போன்ற பூங்கொத்துக்களில் உள்ள மகரந்தத் துகள்கள் வயல் வெளிகளில் பரவியிருப்பதை"[22] ஓரம்போகியார் சுட்டுவர்.

## வெட்சி

குறிஞ்சிக்குப் புறனாகச் சுட்டப்படுவது வெட்சியாகும். தொல்காப்பியர் 'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' என்பர். புறத்தில் ஆனிரை கவர்தலில் சூடிக்கொள்ளும் பூவாக வெட்சிப் பூ சுட்டப்படும். இவ்வெட்சிப்பூ காட்டில் தழைத்து வளர்ந்திருக்கும். இதன் வளைந்த கிளைகளில் மொட்டுகள் அவிழ்த்துவிட்டதுபோல பேரரும்புகள் மணத்தலை,

"கடற்றில் கலித்த முடச்சினை வெட்சித்
தளை அவிழ் பல்போது கமழும்" (குறுந்.209:5-6)

எனப் பாலைபாடிய பெருங்கடுங்கோ குறிப்பிடுவர்.

## கமழும் மாலை

மாலை என்பது பலமலர்களால் தொடுக்கப்படுவதாகும். இதனை, கண்ணி, தார், தொடை, கோதை, படலை எனப் பல பெயர்களில் வழங்குவர். பல மலர்களால் தொடுக்கப்படும் பொழுது மலர்களின் மணம் மிகுந்து கமழ்வதை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. "கல்லிடத்தும்,

காட்டிடத்தும் மலர்ந்த மெல்லிய கொத்துக்களையுடைய கொன்றை, மெல்லிய மலர்களையுடைய காயா, புல்லிய இலைகளையுடைய வெட்சி, பிடா, முல்லை, குல்லை, குருந்து, கோடல், பாங்கர் முதலிய மலர்களாலாய மணங்கமழும் கண்ணியைப் பொதுவர்கள் சூடியதை"[23] கலித்தொகையும் "அழிசி என்னும் மன்னன் தேன்மணங்கமழும் பூவிரிந்த மாலைகளை அணிந்திருந்ததை"[24] நற்றிணையும் குறிப்பிடுகின்றன.

பரிபாடல் "வையையில் நீராடச் செல்பவர்கள் தேன் நிறைந்த மலர்களைக் கொண்டு தொடுக்கப்பட்ட மிகுந்த நறுமணத்தையுடைய குளிர்ந்த மாலைகளை அணிந்து சென்றதை"[25] குறிப்பிடுகின்றது. மேலும் "தன் கணவனை ஒருத்தி கூர்ந்து பார்த்ததைப் பொறுத்துக்கொள்ள முடியாத தலைவி ஒருத்தி, தனது மார்பில் கிடந்த மணம் வீசும் மலர் மாலையை எடுத்து அம்மாலையையே கோலாகக் கொண்டு தன் கணவனை அடித்த செய்தியையும்"[26] நயம்படக் குறிப்பிடுகின்றது.

## வெறிகமழ் மலர்கள்

வெறி என்பதற்கு "தெய்வமேறல், ஒழுங்கு, ஆடு, கள், மணம், வெறியாட்டு, மயக்கம், முருகன் பூசை"[27] எனப் பல பொருளுண்டு. சங்க இலக்கியங்கள் மணத்தைக் குறிக்க வெறி என்ற சொல்லைக் கையாண்டுள்ளன. பல மலர்கள் செறிந்து காணப்படும் பொழுது, அவற்றின் மணம் எங்கும் நிறைந்து காணப்படும். இதனை "பல்மலர் கஞலிய வெறிகமழ்" (நற்.339:10) "தேம் கமழ் வெறிமலர்" (அகநா.177:6) என்னும் தொடர்கள் விளக்கும்.

வெறி அதீத மணம் என்னும் பொருளிலும் வழங்கப்படும். இயல்பிலிருந்து சற்று அதிகமாகக் காணப்படுவதற்கு வெறி என்ற பொருளுண்டு. இன்றைய சூழலில் அதிக கோபப்படுபவர்களை, உணர்ச்சிவசப்படுபவர்களை வெறிபிடித்தவர்கள் என்ற சொல்லால் சுட்டுவது வழக்கமாகும். இதைப்போன்று மலர்களின் மணம் அதீதமாகக் கமழ்வதை விளக்க ‘வெறி’ என்ற சொல்லைச் சங்கப்புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

இங்ஙனம் பல்வகை மலர்களின் மணங்கமழும் தன்மை புலவர்களால் நுட்பமாகப் புனைந்துரைக்கப்பட்டுள்ளது.

## வெறிகொள் பாசடை

மணங்கமழும் பசிய இலைகளின் மேல் சிறகுகள் நீங்கிய முதுமையான சிச்சிலிப்பறவை தங்கி இளைப்பாறுவதை,

"வெறிகொள் பாசடை உணீஇயர் பைப்பயப்

பறைதபு முதுசிரல் அசைபுவந்து இருக்கும்" (அகநா.93:3-4)

என ஆலங்குடி வங்கனார் குறிப்பிடுவர்.

## வெறிகமழ் நெடுவேள்

வெறியாடும் களம் செல்வதால் முருகனின் மேனி அந்நாற்றத்துடன் கமழுவதை, "வெறியாடும் களத்தில் அகன்ற பெரிய பந்தலிலே வேலனாகிய முருகனுக்கு, பனந்தோட்டினைக் கடம்ப மலரோடு சூட்டி வழிபடுவதால் முருகன் நறுமணத்துடன் திகழ்வதை"[28] வெறிபாடிய காமக்கண்ணியார் குறிப்பிடுவர்.

இங்ஙனம் பல்வகை மலர்களின் மணங்கமழும் தன்மை, பசிய இலையின் மணம், வெறியாடு களத்திலுள்ள முருகனின் மணம் போன்றவை கமழ்வதைப் புலவர்கள் நுட்பமாகப் புனைந்துள்ளனர்.

## நாற்றம்

சங்க இலக்கியத்தில் மலர்களின் மணத்தைக் குறிக்க நறு, நாறு, நாறும், நாற்றம் போன்ற சொற்களைப் புலவர்கள் கையாண்டுள்ளனர். "நாறுதல் என்பதற்கு மணத்தல், முளைத்தல், பிறத்தல், தோன்றுதல், நாற்றம் எடுத்தல்"[29] எனப் பொருள் தருகின்றது வெற்றிதமிழ் அகராதி. குவளை, குரவம், முல்லை, முண்டகம், பாதிரி, காந்தள்,[30] ஞாழல்,[31] புன்னை,[32] நெய்தல்,[33] வேங்கை,[34] கோங்கு,[35] வாகை[36] போன்ற மலர்கள் நறுநாற்றம் உடையனவாக இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளன.

## குவளை

அகன்ற நீர்த்துறை முழுவதும் நறிய குவளையின் நறுமணம் கமழ்வதை,

"கள்நறும் குவளை நாறித்

தண்ணென்றிசினே பெருந்துறைப் புனலே" (ஐங்.73:3-4)

எனப் புனைவர் ஓரம்போகியார். மேலும் "மணங்கமழும் குவளைமலர்களோடு, காந்தளையும் முல்லையையும் இடையிடையே பொருந்துமாறு வைத்து அழகாகத் தொடுக்கப்பெற்ற மாட்சிமையுடைய மாலை நறுநாற்றத்துடன் திகழ்ந்ததை"[37] சிறைக்குடி ஆந்தையார் சுட்டுவர்.

## குரவம்

"குரா' நறுமணமும், வெண்மையான பூக்களும் உடைய ஒரு செடியாகும். இது 'குரா' என்றும் குரவம் என்றும் சங்க நூல்களில்

அழைக்கப்படும். குராவை மரமென்று சொல்லமுடியாது. குற்றுச்செடி (Shrub)யெனக் கூறலாம். குரவு முன்பனிக்காலத்தில் கொழுந்துவிட்டுப் பின்பனிகாலம் சென்று இளவேனிற் காலத்தில் பூப்பதாகும். குரவின் இலைகள் ஒள்ளிய (Shining) கரும்பசுமையானவை. குரவின் பூக்கள் ஒரே மட்டத்தில் குவிந்து கொத்தாகக் காணப்படும்"[38] என்பர் பி.எல்.சாமி. குரவின் பூ நல்ல நறுமணத்தைத் தரக்கூடியது. "குரவின் அரும்புகள் பாம்பின் பல்லைப் போன்று முதிர்ந்து மணங்கமழுவதைத்"[39] தாயங்கண்ணனார் குறிப்பிடுவர்.

## குருந்து

"குருந்து ஒருவகை மரம். வறட்சியான பகுதிகளில் காணப்படும். கற்பாங்கான பகுதிகளிலும் வளரும் தன்மையுடையது. குருந்து எலுமிச்சை, சிச்சி இனத்தைச் சார்ந்தது. தற்காலத்தில் புன வெலுமிச்சை காட்டுநாரத்தை என்பர். குருந்தின் பூ நறுமணமுடையது"[40] என்று கூறுவர் பி.எல்.சாமி. "கள் ஒழுகும் பசுமையான குருந்த மரத்தின் நறுமணம் வீசும் கிளைகளிலிருந்து ஆண்மயில் தன் துணையை அழைத்ததைக்"[41] காட்டூர்கிழார் மகனார் கண்ணனார் புனைந்துரைப்பர்.

## முண்டகம்

நெய்தல் நிலத்தில் அதிகம் காணப்படும் மலர்களுள் முண்டகமும் ஒன்று. "இது கழிமுள்ளியென்ற பெயரால் வழங்கப்பெறுவது. கத்திரி வகையுளொன்றாகிய முள்ளியின் வேறென்றறிதற் பொருட்டுப் பெரும்பாலும் கழிமுள்ளியென்றே வழங்கப்படும். கடல்முள்ளியென்றும் அருகி வழங்கும்"[42] என்பர் இ.வை.அனந்தராமையர். "முண்டகம் மலர் கருநிறமும், குளிர்ச்சியும் உடையது. அலைகளால் அடித்துவரப்பட்ட

மணல்திட்டுகள் நிறைந்த கடற்கரையிடத்து கழிமுள்ளிச் செடிகளின் நறிய மலர்கள் கமழ்வதை"[43] அம்மூவனார் விளக்குவர்.

## முல்லை

முல்லைப் பூ சிறத்தலால் முல்லைநிலம் பெயர்பெற்றது. முல்லை காடும் காடுசார்ந்த பகுதியாகும். "முல்லை, கொடிவகையைச் சேர்ந்தது. முல்லை, மென்கொடிமுல்லை, பைங்கொடிமுல்லை என்று அழைக்கப்படும். முல்லை மலர் முகைத்தல், முகைமுற்றல், முகையவிழ்தல் என்ற மூன்று பருவங்களையுடையது. முல்லை மலர் வெள்ளியதாகவும் சிறந்த மணமுடையதாகவும், தூயதாகவும் காணப்படுவதால் இதனைக் கற்புக்கு எடுத்துரைக்காட்டாக கூறுவர்"[44] என்பர் பி.எல்.சாமி. கார்காலத்தில் மலரும் முல்லை மலரின் படிப்படியான செயலை கலித்தொகை, "மணமுடைய முல்லையின் முகைகள்" (கலித்.29:9) எனவும், "அரும்புகள் அவிழ்ந்த மணமுடைய முல்லை" (30:11) எனவும், குளிர்ந்த அருவிநீரால் வளர்ந்த மனமுடைய முல்லைப் பூவின்தாது" (35:10) எனவும் எடுத்துரைக்கும்.

நறுமணமிக்க முல்லையின் பூக்களை மகளிரும், ஆடவரும் சூடினர். "நறுமணம் உடைய முல்லை மலர்களைச் சூடுதற்கு அமைந்த கற்பினையுடைய தலைவி சூடியதை"[45] இடைக்காடனாரும், "சிறிய குன்றுகளிடத்தே மணம் நாறும் முல்லைப் பூக்களை மாலையாகக் கட்டி மார்பிலே இடையர்கள் அணிந்துகொண்டதை"[46] ஒக்கூர் மாசாத்தனாரும், "குவளை மலரோடு ஒருசேரத் தொடுத்த நறுமணம் கமழும் முல்லையின் முகையவிழ்ந்த மலர்களால் ஆகிய குளிர்ந்த மாலையை வீரர்கள் சூடியதை"[47] நக்கீரரும் குறிப்பிடுகின்றனர்.

வண்டினங்கள் முல்லையின் நறுமணத்தை நுகர்ந்ததை, "மகளிரின் கூந்தலில் சூடிய அரும்புகள் விரிந்து மணம்பரப்பி நின்றன முல்லை மலர்கள். அம்முல்லைகளிடத்தே வரிவண்டு பாய்ந்து நுகர்ந்து வேறு பூக்களை நுகரவேண்டும் என்னும் நினைவின்றிக் கிடந்ததை"[48] அகநானூறும் குறிப்பிடுகின்றது.

குளிர்ந்த மழைத்துளிகளை ஏற்றுக்கொண்ட, பசிய கொடிகளையுடைய முல்லையின் செவ்விய அரும்புகள் மலர்ந்த மணம், புதர்களில் படர்ந்துள்ள பூக்கள் நிறைந்த செம்முல்லையின் மணத்தோடு தேன் மணக்கும் வண்ணம் திகழ்ந்ததை,

"தண்துளிக்கு ஏற்ற பைங்கொடி முல்லை
முகைதலை திறந்த நாற்றம் புதல்மிசைப்
பூஅமல் தளவமொடு தேம் கமழ்பு" (குறுந்.382:1-3)

எனக் குறிப்பிடுவர் குறுங்கீரன்.

## பாதிரி

பாதிரி என்ற மரத்தின் மணமிகுந்த பூவைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. பாதிரியின் மலர் மஞ்சள் நிறமானது. பொன்னிறமானது. இம்மலர் சிறிது வளைந்து காணப்படும். அதனால் சங்க இலக்கியங்கள் இம் மலரைக் 'கூன்மலர்' எனக் குறிப்பிடுகின்றன."[49] வேனிற்காலத்தின் பகற்பொழுதில் தேன் பொதிந்த பாதிரியின் வாடற்பூக்கள் மணப்பதை,

"வேனிற் பாதிரிக் கூனிமாமலர்
நறைவாய் வாடல் நாறும்" (அகநா.257:1-2)

என்னும் அடிகள் விளக்கும். பாதிரியின் வாடிய மலர்களும் நறுமணம்

உடையதாய்த் திகழ்வதை சங்கப் புலவர்கள் நுணுகி ஆய்ந்துரைப்பது குறிப்பிடத்தக்கது.

## கடிமலர்

மலர்களின் மிகுதியான நாற்றத்தைக் குறிக்க 'கடி' என்ற சொல்லைச் சங்கப் புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். "வண்டுகள் உண்ணும்படியாக, நிரைத்த இதழ்கள் மலர்ந்துள்ள மலர்களின் மணம் நெடிய நிலா உடைய இராக்காலத்தில் மணப்பதை,

"நெடுநிலா திறந்து உண்ண நிரை இதழ் வாய்விட்ட

கடிமலர் கமழ் நாற்றம் கங்குல் வந்து" (கலித்.29:20-21)

என்னும் அடிகள் உரைக்கும். இதில் இரவில் மலர்ந்த மலரின் மணம் மிகுதியாக எங்கும் நிறைந்து காணப்பட்டதால் கடிமலர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் காந்தள் பூவின் நறுமணத்தை 'காந்தள் கடிகமழும்' (கலி.39:14) என்ற அடிகள் உரைக்கும். கடி என்னும் சொல்லை மலரின் மிகுதியான நாற்றத்தைக் குறிக்கச் சங்கப்புலவர்கள் கையாண்டுள்ளமை சுட்டுதற்குரியது.

## பித்திகம் மணமுகை

மழைக் காலத்தில் தழைத்து அக்காலத்து அந்தியில் மலரும் பூ பிச்சிப் பூ எனப்படும். "மாரிக் காலத்துப் பூக்கும் பித்திகம் மிகுதியாகப் பெய்த மழையினால் நன்கு தழைத்து, நிறைய அரும்புகளை ஈன்று அவ்வரும்புகள் மழைக்கு எழுச்சிபெற்று மணங்கமழ்வதை"[50] அகநானூற்றில் கபிலர் குறிப்பிடுவர்.

## வேங்கை முரண்

பக்கமலையிலுள்ள பிறமலர்களின் மணத்தினின்றும் மாறுபட்ட மணங்கொண்ட வேங்கையின் புதுமலர்களைத் தொடுத்து அழகிய

மாலையாகத் தலைவன் சூடிக்கொள்வதை,

"சாரல் வேங்கைப் படுசினைப் புதுப்பூ

முருகுமுரண் கொள்ளும் உருவக் கண்ணியை" (அகநா.288:3-4)

எனும் அடிகள் விளக்கும். இதில் முருகு என்பது மணத்தையும், முரண் என்பது பிறமலர்களின் மணத்தினின்றும் மாறுபட்ட மணத்தையும் சுட்டியுள்ளது.

## நறுங்கழுநீர்ப்பூ

உயர்ந்த மலையின்கண் இனிய பசுமைவாய்ந்த சுனையில் பூத்த மணங்கமழும் செங்கழுநீர் மலரினை,

"நெடுவரை, இன்தீம் பைஞ்சுனை ஈரணிப் பொலிந்த

தண் நறுங் கழுநீர்" (அகநா.59:13-14)

என்ற அடிகள் சுட்டும்.

## நறுவிரை மஞ்சள்

கிழங்கு வகைளில் நறுமணம் உடையது மஞ்சள் கிழங்காகும். இது பூசுமஞ்சளாகவும், உணவிலும், மருத்துவத்திலும் பயன்படுகிறது. இதன் மணத்தை 'நறுவிரை மஞ்சள்' (அகநா.269:9) என அகநானூறு சுட்டுகிறது. விரை என்பது வாசத்தைக் குறிக்கும்.

## நாறு இணர் மாலை

பல்வகை மணமும் கலந்த, நீர் தெளிக்கப்பெற்ற மணங்கமழும் கொத்துக்களாலான மலர்மாலையை "நறுவிரை தெளித்த நாறுஇணர்மாலை" (அகநா.166:5) என அகநானூறு குறிப்பிடும்.

## தண்கமழ் நறைக்கொடி

நறைக்கொடி என்பது மலையில் வளரும் நறவம் என்னும் கொடிவகையைக் குறிக்கும். இது குளிர்ச்சியும் நறுமணமும் உடையதாய்த் திகழ்வதை 'தண்கமழ் நறைக்கொடி கொண்டு' (ஐங்.276:2) என ஐங்குறுநூறு குறிப்பிடும்.

## தமாலம் கொடி

தமாலம் என்பது ஒருவகைக் கொடி. இக்கொடி மணம் வீசும் தன்மையுடையது. இதனை,

"நெடுந்தண் ஆரத்து அலங்கு சினை வலந்த
பசுங்கேழ் இலைய நறுங் கொடித் தமாலம்" (நற்.292:1-2)

என்பர் நல்வேட்டனார். இதில் நீண்ட கணுக்களைக் கொண்ட சந்தனமரத்தின் கிளைகளைச் சுற்றியிருக்கும் பசுமையான நிறம் பொருந்திய இலைகளையுடைய தமாலக் கொடி மணம்வீசும் தன்மை புனையப்பட்டுள்ளது.

இங்ஙனம் சங்க இலக்கியங்களில் மலர்களின் மணத்தைப் புலவர்கள் கமழ்தல், நாறுதல் என்னும் அடிப்படையில் புனைந்துள்ளனர்.

## காடு மணத்தல்

காடு என்பது பல்வகையான மரம், செடி, கொடிகளைக் கொண்டு விளங்கும். இத்தகைய மரம், செடி, கொடிகளின் மலர்கள் மலர்ந்து காடு மணம் வீசுவதை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. வல்வில்ஓரி என்னும் மன்னனின் காடு மணப்பதை, 'வல்வில் ஓரி கானம் நாறி' (நற்.6:9) என்று பரணரும், செவ்விய வேற்படையையுடைய மலையமான் திருமுடிக்காரியின் காடு மணப்பதை 'முள்ளூர் கானம் நாற' (குறுந்.312:3) என்று கபிலரும் குறிப்பிடுவர்.

காடு திருமண வீட்டைப் போல மணப்பதை,

"காலைப், பசுநனை நறுவீ பரூஉப்பரல் உரைப்ப

மணமனை கமழும் கானம்" (அகநா.107:20:22)

என்பர் காவேரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். இதில் காலைப் பொழுதில் புதிய தேனையுடைய நறும் பூக்கள் பெரிய காட்டிடத்தேயுள்ள பாறைக்கற்களில் உதிர்ந்து மணப்பது திருமணம் நிகழும் இல்லம் மணப்பது போல மணப்பதாகச் சுட்டப்பட்டுள்ளது. மேலும் "மழை பொழிந்ததால் காடு மணம்பெற்றுத் திகழ்வதை"[51] மதுரைப் பேராலவாயர் குறிப்பிடுவர்.

மதுரைத் தமிழ்கூத்தன் நாகன் தேவனார், "காடானது அழகினைப் பெறுமாறு மிக்க மழையினைப் பொழிந்தது. புள்ளிகளையும் வரிகளையும் உடைய வண்டின் கூட்டம் ஆரவாரம் செய்ய, மணங்கமழும் முல்லைப் பூவுடன் செங்காந்தள் பூவும் வேறு பல்வகைப் பூக்களும் ஒருசேர மலரக் காடும் மணம் வீசும் காடாயிற்று"[52] என்பர். ஒரோடோகத்துக் கந்தரத்தனாரும் "மேகம் மண்ணகம் எல்லாம் குளிரும்படி குளிர்ந்த மழையைப் பொழிந்து அடங்கியது. புதரின் மீது படர்ந்த செம்முல்லையின் சிவந்த அரும்புகள், நெருங்கிய குலையினையுடைய பிடாவினது அரும்புகளோடு ஒருசேரத் தளையவிழ்ந்து மலர்ந்தன. இவற்றால் காடும் கம்மென்று நறுமணங்கமழ்கின்றது"[53] என்றுரைப்பர். இங்ஙனம் காடு மணம் பெற்றுத் திகழ்வதைப் புலவர்கள் புனைந்துள்ளனர்.

## மலை கமழ்தல்

சங்க இலக்கியத்தில் மலையைக் குறிக்க மலை, கல், சிலம்பு, வெற்பு, சாரல், குன்று என்பன போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. பல்லாயிரக்கணக்கான மரம், செடி, கொடிகள் மலையிலே

காணப்படுவதால் மலை இயல்பிலேயே நறுமணத்துடன் திகழும். இதனையே, "மணங்கமழ் மலை,"[54] "கமழ்சிலம்பு,[55] நறும் மலை,[56] மாமலை நாறி,[57] தேங்கமழ் மலை,"[58] "சிலம்பு கமழ்,"[59] 'நறுந்தண் சாரல்"[60] "தண்நறுஞ்சாரல்,"[61] "தேம்கமழ்சாரல்,"[62] "நறும்பூஞ் சாரல்"[63] என்பன போன்ற தொடர்களும் விளக்கும்.

## மணங்கமழ் மண்மேடு

கடலும் கடல்சார்ந்த பகுதியும் நெய்தல் நிலமாகும். நெய்தல் நிலக் கடற்கரையோரங்களில் மணல் மேடுகள் திட்டுத்திட்டாகக் காணப்படும். அதனை ஒட்டிய பகுதிகளில் புன்னைமரங்கள் ஓங்கிச் செழித்து வளர்ந்திருக்கும். கடல் அலைகள் அம்மரங்களில் மோதுவதால் அதிலுள்ள பூக்கள் தளர்ந்து வீழும். அப்பூக்களால் மென்மையான மணல்மேடுகள் மணங்கமழ்வதை,

"மயங்கு பிசிர், மல்குதிரை உழந்த ஒல்கு நிலைப்புன்னை,
வண்டு இமிர் இணர நுண்தாது வரிப்ப,
மணங்கமழ் இளமணல் எக்கர்க் காண்வர" (அகநா.250:1-4)

எனும் பாடலடிகள் விளக்கும். இதில் புன்னை மலர்களின் மணத்தால் மணல்மேடுகள் மணக்கும் செய்தி புனையப்பட்டுள்ளது.

## சோலை

சோலையைக் குறிக்க சோலை, பொதும்பு, பொழில், கா, கானல் போன்ற பல சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. இச்சோலைகளை "பல்வேறு மலர்கள் மலிந்த நறுமணம் மிகுந்த சோலை"[64] என ஐங்குறுநூறும், "மணம் கமழ்கின்ற பூக்களை உடைய சோலை"[65] எனக் கலித்தொகையும் குறிப்பிடுகின்றன.

பொன்போன்ற நிறமுடைய நறுமலர்கள் உதிர்ந்து பரவிக்கிடக்கும் புன்னை மரங்கள் கொண்ட சோலையை,

"நன்மலர் நறுவீ தாஅம்

புன்னை நறும்பொழில்" (அகநா.359:18-19)

என்று மாமூலனார் குறிப்பிடுவர். மேலும் "பெரியகடலின் கரையிடத்து, வெண்மை நிறம் சிறிதே உடைய காக்கை, நீந்துவதற்குரிய நீரினையுடைய கரிய உப்பங்கழிகளில், இரையை ஆராய்ந்து உண்டு, பூக்களின் மணங்கமழும் பொழிலில் தங்குதல்"[66] "ஆற்றை அடுத்தமைந்த கரையில் மாமரங்களின் நெருங்கிய கிளைகள் தழைத்துத் தளிர் மிகுந்து அழகுற விளங்கிய குளிர்ச்சியும் மணமும் உடைய சோலை"[67] "வலிமையான அலையால் மோதப்படுவதும், சருச்சரை பொருந்தியதும், வளைந்த அடிமரத்தையுடையதும் வாளரம் போன்று விளங்கும் முட்களும் இலையுமுடைய தாழை, பொன்போன்ற மகரந்தமுடைய புன்னைமலருடன் சேர்ந்து மணம் கமழ விளங்கும். இத்தகைய மணம் கமழும் திறத்துடன் கடற்கரைச் சோலை விளங்குதல்"[68] புலவர்களால் பாடப்பெற்றுள்ளன.

## தென்றல் காற்றின் மணம்

தெற்கில் இருந்து வரும் காற்று தென்றல் காற்றாகும். இத்தென்றல் காற்றின் மணத்தை,

"குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ

வண்டு தரு நாற்றம் வளிகலந்து ஈய" (நற்.56:1-2)

என்னும் அடிகள் விளக்கும். இதில் குறுகிய உயரத்துடன் நிற்கும் குரவ மரத்தில் சிறிய அரும்புகளுடன் மலர்களும் நன்கு மலர்ந்து நிற்கும் மலர்களின் மணத்துடன் தென்றல் கலந்து வீசுவதைப் பெருவழுதி

குறிப்பிடுவர். இங்ஙனம் தென்றல் காற்று மலர்களின் மணத்துடன் கமழும் தன்மை புலவரால் சிறப்பாகப் புனையப்பட்டுள்ளது.

## வைகறையின் மணம்

புலர், விடியல், வைகறை, காலை போன்றவை காலைப் பொழுதைக் குறிக்கும். காலை நேரத்தில் பூக்கள் மலர்வதாலும், குளிர்ச்சியான காற்று வீசுவதாலும் காற்றில் ஒருவகையான இதமான நறுமணம் கலந்து காணப்படும். அதிலும் மழையோடு கூடிய மண்மனம் நாறும் வைகறைப் பொழுதின் மணம் மிக நறுவியதாக இருக்கும். இதனை, "மாக்கடல் நீர் முகந்து திசையெல்லாம் சென்று இருண்டு, அகன்ற இடத்தையுடைய உலகம் மறையுமாறு வலமாக எழுந்துசென்று சூல்கொண்ட கரிய மேகங்கள், வானைப்பிளப்பதுபோல மிகுதியாகச் சொரிந்து, இடியும் முழக்கமும் இன்றி, பாணரது யாழிசை போன்று மழைபெய்யும் வைகறைப் பொழுது பூக்களின் மணத்துடன் திகழ்வதை,"[69] இடைக்காடனார் குறிப்பிடுவர். மழைநீர் மண்ணில் விழுந்தவுடன் நிலம் மண் வாசனை வீசுவதை, "கார்ஆரப்பெய்த கடிகொள் வியன்புலத்து" (கலித்.109:1) எனும் அடிகள் விளக்கும்.

இங்ஙனம் மழைநீர் மண்ணில் விழுந்தவுடன் மண்வாசனை கிளம்புவதும், இவ்வாசனை அதிகாலை மலரும் மலர்களுடன் சேர்ந்து நறுமணம் வீசுதலையும் புலவர்கள் தம் புனைவில் வெளிப்படுத்துகின்றனர்.

## வையையின் மணம்

பரிபாடலில் வையையின் வெள்ளப்பெருக்கினைப் புலவர்கள் சிறப்பாக எடுத்துக்காட்டியுள்ளனர். வையையின் "புது நீரில் மக்கள் புகுந்து நீராடுவதால் அவர்கள் அணிந்திருந்த பத்துவகைத் துவரினும்

ஐந்துவகை விரையினும், முப்பத்திருவகை ஓமாலிகையினும் (மூலிகை) ஊறிக் காய்ச்சப்பட்ட மணநீர் (சாறும்) சந்தனக் குழம்பு, நறுமண எண்ணெயும் மலர்களும் ஆகிய அனைத்தும் நீரில் கலந்து ஒரு புதிய மணத்தைத் தோற்றுவித்ததை"[70] நல்லந்துவனார் குறிப்பிடுவர்.

மேலும் "மல்லிகை, மௌவல், சண்பகம், அல்லி, செங்கழுநீர், தாமரை, ஆம்பல், கஞ்சங்குல்லை, மகிழம், குருக்கத்தி, பாதிரி, நாகமரத்தின் மலர், நறவம், சுரபுன்னை ஆகிய எல்லா மலர்களும் கலந்த வையை, மணத்துடன் திகழ்ந்ததை"[71] நல்வழுதியாரும் புனைவர். இவ்வாறு நீர்ப்பூ, நிலப்பூ, கோட்டுப்பூ, கொடிப்பூ என்னும் நான்கு வகைப் பூக்களையும் அடித்துக்கொண்டு வருவதால் வையைநீர் மணம் மிகுந்து இருத்தல் புலவரால் சுட்டப்பட்டுள்ளது.

### மாங்காய்

மாமரத்தின் பூ, காய், பழம் போன்றவை நறுநாற்றமுடையவை. தொலைவில் உள்ளவர்களையும் கவர்ந்து இழுக்கும் ஆற்றல் மிக்கவை. இத்தகு மாங்காயின் பசியகாய் நறுமணத்துடன் திகழ்வதால் அதனை 'நறுமா' (குறுந்.73:3, 331:5) 'நறுமாவடி' (நற்.243:1) 'நறுமாவடு' (அகநா.29:7) என்று புலவர்கள் புனைந்துரைத்துள்ளனர். மேலும் வேம்பின் காயும் 'நறுங்காய்' (ஐங்.339) என்று சுட்டப்பட்டுள்ளது.

### பழங்கள்

பழங்களில் பலாவும், விளாம்பழமும் நறுமணம் உடையதாக இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளன. 'நன்கு பழுத்த பலாக்கனியை ஆண்குரங்கு தீண்டுவதால் அப்பழம் பிய்ந்து அதிலிருந்து மலர் போன்ற மணம் கமழ்வதை, 'கலைதொட இழுக்கிய பூ நாறு பலவுக்கனி'

(குறுந்.90:4, 373:6) என்றும், 'கலைகை தொட்ட கமழ் சுளைப் பெரும் பழம்' (குறுந்.342:1) என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## விளாம்பழம்

தயிர்ப் பானையின் முடைநாற்றம் தீர விளாம்பழத்தினையிட்டு வைத்து, அதனால் பானை கமழ்வதை,

"விளம்பழம் கமழும் கமஞ்சூழ் குழிசிப்

பாசம் தின்ற தேய் கால் மத்தம்" (நற்.12:1-2)

என்னும் அடிகள் விளக்கும். இதில் விளாம்பழத்தினால் தயிர்ப்பானையின் பால் நாற்றம் நீங்கி விளாம்பழத்தின் மணம் கமழ்வது சுட்டப்பட்டுள்ளது.

## சந்தனம்

சந்தனம் நறுநாற்றமும் குளிர்ச்சியும் உடையது. சங்க மக்கள் இச்சந்தனத்தினை அரைத்து மார்பில் பூசிக்கொள்வதைப் புலவர்கள் நயம்பட உரைத்துள்ளனர். இதன் மணத்தை, கமழ்,[72] கமழும்,[73] தேம் மணம்[74] என சங்கப் பாக்கள் சுட்டியுள்ளன. வயிரமேறிய சந்தனமரமே மணங்கமழும் என்பதை 'நறுங்காழ் ஆரம்' (நற்.5:4) என்பர் பெருங்குன்றூர்கிழார்.

"வடவர்கள் தந்த வெண்ணிற வட்டக்கல்லில் பொதிய மலையில் பிறந்த சந்தனக் கட்டையால் பிறமணப் பொருள்களையும் சேர்த்து அரைத்து, வண்டுகள் ஒலிக்கும் மணங்கமழும் சந்தனத்தை அணிந்தமையை"[75] நக்கீரர் குறிப்பிடுவர். தமிழக் கூத்தன் கடுவன் மள்ளனாரும் "விழுப்புண்பட்ட அழகிய மாலை அணிந்தமார்பிலே குளிர்ந்த மணங்கமழும் சந்தனத்தைப் பூசி மகிழ்ந்தமையைச்"[76] சுட்டுவர். இங்ஙனம் குளிர்ந்த சந்தனத்தை மார்பிலே அணிந்தமையும், அது நறுநாற்றத்தை அளித்ததையும் புலவர்கள் புனைந்துள்ளனர்.

மேலும் "மழைபெய்யும் நள்ளிரவு வேளையில், வெண்மையின்றி உள்ளே நன்கு வைரம் பாய்ந்த சந்தனமரத்தை, யானையை அகப்படுத்திய பெருஞ்சினமுடைய மலைப்பாம்பு புரட்டும். அதனால் நேர்ந்த உராய்வினால் வெளிப்படும் சந்தனத்தின் மணத்தை"[77] சேந்தன் பூதனார் குறிப்பிடுவர்.

மேற்சுட்டியவற்றால் காடு, மலை, சோலை, தென்றல், வைகறை ஆகியவற்றின் மணம் பூக்களாலும், மாங்காய், வேப்பங்காய், பலாப்பழம், விளாம்பழம் ஆகியவற்றின் மணம் அதன் தன்மையாலும் மணம் செய்வதைப் புலவர்கள் புனைந்துள்ளனர்.

**செயற்கை மணம்**

இயற்கையிலிருந்து மாறுபட்டது செயற்கையாகும். செயற்கை மணத்தில் நன்னாற்றம் தீ நாற்றம் என இரு பிரிவுகளுண்டு. செயற்கையின் நன்னாற்றத்தில், அகில் சுடுபுகை, சந்தனக்கட்டையின் புகை, தெருகமழ்தல், விழவுக்களம் கமழ்தல் ஆகியவை இடம்பெற்றுள்ளன. தீ நாற்றமாக புலால் நாறும் நீர்த்துறை, புலவுநாறு சுரம், புலவுநாறு கல்அளை, புலவுக்களம், புலவுநாறு விலங்குகள், பறவைகள், புலவுநாறும் மீன், புலவுநாறும் உணங்கல், மீன்சுடுபுகை, கடுமுடைநாற்றம், படுமுடை நாற்றம், இடுமுடைநாற்றம், புலால் நாறும் பாக்கம், சேரி, கள் மணம் போன்றவை இடம்பெற்றுள்ளன. மேலும் தலைவன் தலைவியரின் நுகர்வுப் புனைவுகளும் புலவர்களால் சுட்டடப்பட்டுள்ளன.

**செயற்கை மணத்தில் நன்னாற்றம்**

**நறும்புகை நாற்றம்**

சங்ககாலத்தில் நறும்புகை எழுப்பும் பழக்கம் இருந்தமைக்கான குறிப்புகள் சங்கப் பாடல்களில் கிடைக்கின்றன. புகைஇடும் வழக்கம்

கூந்தலை உலர்த்துவதற்கும், தீய நாற்றத்தை நீக்குவதற்கும் இன்றும் தொன்றுதொட்டுப் பின்பற்றப்பட்டு வருகிறது.

தினைப்புனத்தின்கண் எரித்த நறைக்கொடி, அகில் மரம் போன்றவை உண்டாக்கிய புகை வெண்மேகத்தைப் போல விண்ணில் சென்று மலைச்சாரலிலுள்ள குறவர்களின் சிற்றூர்வரை நறுமணம் கமழ்வதை,

"நறை அகில் வயங்கிய நளிபுன நறும்புகை

உறைஅறு மையின்போகி சாரல்

குறவர் பாக்கத்து இழிதரும்" (குறுந்.339:1-3)

என்பர் பேயனார். மேலும் "சந்தன மரங்களுக்கிடையே உள்ள நிலத்தில் சுட்டு எரிக்கப்படும் அகில் கட்டையின் நறிய புகை சந்தனப் பூக்களின் நறுமணத்தோடு சேர்ந்து ஒரு புதுக்கலவை மணமாகப் பரவுவதையும்"[78] "குன்றத்தின்கண் வாழும் குறவன் சந்தனமரத்தைவெட்டிச் சுடுவதால் எழும் நறும்புகை தேன் மணங்கமழும் பக்க மலைகளைக் கொண்ட மலைச்சாரல் முழுவதும் பரவி மணப்பதையும்"[79] கபிலர் ஐங்குறுநூற்றில் குறிப்பிடுவர்.

மேலும் "முதிர்ந்த வாயையுடைய தோணிக்கு நல்ல மணத்தையுடைய அகிற்புகையைக் காட்டி அதனை ஞாழல் மரத்தின் அடிப்பகுதியில் கட்டிவைப்பதை"[80] நற்றிணை குறிப்பிடுகிறது. இவ்வாறு நறும்புகை மணத்தின் தன்மை புலவர்களால் புனைந்துரைக்கப்பட்டுள்ளது.

## தெரு கமழ்தல்

"நறுமணப் பண்டங்களை விற்பதால் எழுந்த மணம் தெருவெங்கும் கமழ்வதை"[81] பரணர் உரைப்பர். "சிச்சிலிப்பறவை போன்ற தலையை உடைய கள்ளியின் மேலே படர்ந்து தழைத்த முல்லையின் நறுமணம்

கமழும் மலரை, ஆட்டுக் கூட்டத்தை மேய்க்கும் வலிய கையையுடைய இடையன் இரவிலே செய்து வெண்மையான பனங்குருத்தின் போதுடனே சேர்த்து மாலையாகத் தொடுத்து அணிய. அந்த மாலையின் நறிய மணம் தெருவெங்கும் கமழ்வதை"[82] நற்றிணை எடுத்துரைக்கின்றது. இங்ஙனம் நறுமணப் பண்டங்களாலும், மாலையின் நறுமணத்தாலும் தெருகமழ்வது புனையப்பட்டுள்ளது.

## நறுநெய்யும், பாக்கும்

நெய்யினை உருக்கும் பொழுது தோன்றும் ஒரு வகையான வாசனை மனத்தை மெய்மறக்கச் செய்யும். இத்தகைய வாசநறுநெய்யை, வையைப் புனலின் புதுவரவைக் காணச் சென்ற மகளிர், சிலர் "கண்ணாடியில் படிந்துள்ள அழுக்கினை நீக்குவதற்கு நறுமண நெய்யைப் பூசி வெண்மையான கற்பொடியிட்டுத் துலக்கித் தூய்மைசெய்து, அக்கண்ணாடியில் தமது இயற்கையழகையும், செயற்கையழகையும், காதலருடன் புணர்ந்ததால் உண்டான ஒளியையும் கண்டு இன்புற்றனர். சிலர் ஐந்துவகை மணப்பொருளுடன் கூடிய பாக்கினை வாயில் இட்டு மெல்லுவராயினர்"[83] என மணமுள்ள நெய், பஞ்சவாசத்துடன் கூட்டி இடித்த பாக்கு ஆகியவை பரிபாடலில் சுட்டப்பட்டுள்ளன.

## விழவுக்களம் கமழ்தல்

விழவு என்பது திருவிழாவினைக் குறிக்கும். திருவிழாவில் பல்வகைப் பண்டங்களும் மலர்களும் விற்கப்படுவதால் மணம் கமழ்ந்து காட்சியளிக்கும். விழவு எடுக்கும் களத்தில் தாழையின் நறுமணம் வீசுவதை"[84] நக்கண்ணையாரும், "புலால் நாற்றத்தை நீக்கும் வகையில் விழாவில் புன்னையின் மணம்மிக்க பூங்கொத்துக்கள் கமழ்வதை"[85]

உலோச்சனாரும் குறிப்பிடுகின்றனர். இங்ஙனம் நறுநாற்றத்தால் எழுந்த செயற்கைமணம் புலவர்களால் புனைந்துரைக்கப்பட்டுள்ளன.

## செயற்கையில் தீ நாற்றம்

### புலால் நாற்றம்

புலால் என்பதற்கு ஊன், தீ நாற்றம் எனப் பொருளுண்டு. ஊனிலிருந்து வரும் நாற்றத்தையே தீ நாற்றம் எனச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

### புலால் நாறும் நீர்த்துறை

நீர்த்துறை "புலால் நாற்றத்துடன் இருத்தலை"[86] ஓரம்போகியாரும், 'புலவு நாற்றத்தையுடைய நீர்'[87] என இளந்திரையனாரும் குறிப்பிடுகின்றனர்.

### புலால் நாறும் கடல் அலைகள்

பல்வேறு உயிரினங்கள் வசிப்பதால் கடல்நீர் புலால் நாற்றமுடையதாக விளங்கும். இதனை,

"அலவனொடு பெயரும் புலவுத்திரை நளிகடல்" (நற்.219:5)

என்றுரைப்பர் தாயங்கண்ணனார். "இரவு பகலாக ஓரிடத்தும் தங்காத புலால் நாறும் அலைகள்"[88] என மருதனிளநாகனாரும் இதைப் புனைவர்.

### புலவுநாறும் சுரம்

சுரம் புலால் நாற்றத்துடன் இருத்தலை, "ஆனிரைகளைக் கவர்ந்துசென்ற வெட்சி மறவர்களை, கரந்தைப் பூவைச் சூடிய வீரர்கள் போரிலே வென்று ஆனிரை மீட்டுவந்தனர். தம்முடைய வலிய ஆண்மைக்கு அறிகுறியான நடுகல் தெய்வத்திற்கு, மயிற்தோகைகள் சூட்டி, செம்மறிக்குட்டியைப் பலிகொடுத்தனர். இத்தகைய

தன்மையான வழிகளையுடைய புலால் நாறும் அரியசுரவழி"[89] எனக் குடவாயிற் கீரத்தனார் புனைந்துரைப்பர்.

## புலவு நாறும்கல்அளை

"புலியானது தனக்குரிய உணவைத் திணித்து வைத்திருந்ததால் கல்முழைஞ்சுகள்"[90] புலால் நாற்றம் வீசுதலை பூங்கண்ணன் உரைப்பர். இதனால் கற்களையுடைய முழைஞ்சுகளிடத்து புலால் நாற்றம் வீசுதல் பெறப்படும்.

## புலவுக் களம்

"இளைய பசுவினைக் கொன்று அதன் ஊனை வழிப்போக்கர் உண்டனர். மேல்காற்றானது புழுதியை அளைந்த வண்ணம் ஒலியினை எழுப்பிக்கொண்டு புலால் நாறும் அவ்விடத்தே துழாவிச் சென்றது"[91] என அகநானூறு குறிப்பிடும். இங்கு புலவுக்களம் என்பது பசுவினைக் கொன்ற இடத்தில் நாறும் நாற்றத்தைக் குறிக்கும்.

## புலவுநாறும் விலங்குகள்

சங்க இலக்கியத்தில் புலவுநாறும் விலங்குகளாகச் சுட்டப்படுபவை யானையும், புலியுமாகும். யானையின் மதநீர் கமழும் தன்மையும், புலவுநாறும் தன்மையும் சங்கப் பாடல்களில் பரவலாகக் காணப்படுகின்றன.

## யானையின் மதநீர் கமழ்தல்

யானைகளுக்குப் புணர்ச்சிக் காலங்களில் கன்னப்பகுதியிலிருந்து ஒருவகையான திரவம் ஊறும். இஃது மதநீர் என வழங்கப்படும். இம்மதநீர் மணங்கமழ்வதை, "ஈரத்தினையுடைய மணங்கமழும் மதநீர்"[92] நாறுகின்ற நாற்றத்துடைய மதநீர்"[93] "வண்டு மொய்க்கும் மணங்கமழ்கின்ற மதநீர்"[94] என்று கலித்தொகை சுட்டும்.

குறுந்தொகையில் “வளைந்த கைகளையுடைய களிறு, மணம்நாறும் மூச்சினையுடைய இளைய பிடியைத் தழுவிக்கொண்டு மலையிலிருந்து இறங்குவதை”[95] இளம்போத்தனார் குறிப்பிடுவர். இதில் யானையின் மணம்நாறும் உயிர்ப்புநிலை சுட்டப்பட்டுள்ளது.

**புலவுநாறும் யானை**

யானை, புலியுடன் போரிடும்பொழுது அதனைத் தாக்கிய தால் உடம்பில் புலியின் இரத்தம்பட்டு நெற்றி,[96] தந்தம்[97] ஆகியவை புலால் நாற்றத்துடன் திகழ்வதைப் புலவர்கள் புனைந்துரைத்துள்ளனர்.

**புலவு நாறும் புலி**

புலி, விலங்குகளை வேட்டையாடி கொன்று தின்னும் விலங்காகும். அதனால் புலவு நாற்றமுடையதாகக் காணப்படும். இதனை, பக்கமலையில் அசைந்த நடையினையுடைய மரையாவைத் தனது வலப்பக்கத்திலே வீழும்படிக் கொன்று அதன் ஒளியுடைய சிவந்த குருதியை நிரம்ப உறிஞ்சிக்குடித்த புலால் நாறும் புலியை,

“வான்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
துளங்கு நடை மரையா வலம்படத் தொலைச்சி
ஒண்செங் குருதி உவற்றி உண்டு அருந்துபு
புலவுப் புலி...” (அகநா.3:6-9)

எனக் குறிப்பிடுவர் எயினெந்தை மகனார் இளங்கீரனார். மேலும் “கருவுற்றிருக்கும் பெண் புலியின் வேட்கைமிகுந்த பசியினைப் போக்கும் பொருட்டு, சினம் மிக்க ஆண்புலி பெரிய ஆண் பன்றியினைக் கொன்று, அச்சம் தரும் நல்ல பாம்பு மேயச் செல்வதற்காக ஒளி வேண்டி உமிழ்ந்துவைத்த மணியாகிய விளக்கொளியில் புலால் நாறும்படியாக

இழுத்துச்செல்லுவதை"[98] எருமை வெளியனார் மகனார் கடலனார் குறிப்பிடுவர்.

## புலவுநாறு நீர்நாய்

நீரில் வாழும் நாய் மீன்களை விரும்பி உண்ணுவதால் புலவுநாறு நீர்நாய் என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

"பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்
வாளை நாள் இரை பெறூஉம்" (ஐங்.63:1-2)

என்னும் அடிகளில் இயற்கையாய் அமைந்த நீர்நிலையை வாழிடமாய்க் கொண்ட புலால் நாற்றம் வீசும் நீர்நாய், வாளை மீனை நாட்காலத்தே இரையாகக் கொள்ளும் என மருதன் இளநாகனார் சுட்டுவர். இதே செய்தியினைப் பரணரும் அகநானூற்றில் (386:1-3) குறிப்பிடுகின்றார்.

## புலவுநாறு பருந்து

பறவைகளுள் ஊன் உணவை விரும்பி உண்ணக்கூடிய இனங்களுள் பருந்தும் ஒன்று. இதனை "குருதிபடிந்த புலால் நாறும் சிறகுகளையுடைய ஆண் பருந்தினது கூட்டம் கொள்ளைகொண்டு உண்ட வழிப்போக்கருடைய பசிய ஊனின் மிகுதியைப் பிற பறவைகளுக்குத் தெரிவித்து வானிலே வட்டமடிப்பதை"[99] மதுரை இளங்கௌசிகனார் புனைவர்.

## புலவுநாறும் ஆமை முட்டை

ஆமை முட்டையிட்டுக் குஞ்சுபொரிக்கும் வகையைச் சார்ந்தது. ஆமைகள் முட்டையிடுவதற்கு கடலின் மேற்பரப்பை நோக்கிக் கூட்டம் கூட்டமாக வரும். கடற்கரையின் மணலில் குழியைத் தோண்டி அதனுள் முட்டையிடும். பின்பு இலைதழைகளைக் கொண்டும், மணல்கொண்டும்

குழியை மூடிவிடும். இச்செய்தியை "நிறைந்த சூல்கொண்ட யாமை அடும்புக் கொடியினை இழுத்து, வளைந்த உப்பங்கழியிடத்தே வெண்மையான மணல் மேட்டின் பக்கத்தே அதனைச் சேர்த்து, புலால் மணக்கும் முட்டையினை இட்டு மூடிவைத்ததை"[100] குமரி ஞாழலார் நப்பசையார் புனைவர்.

### புலவுநாறும் மீன்

"கடல் அலைகள் மோதுதலின் இறந்துபட்ட புலால் நாற்றத்தையுடைய மீன்"[101] பற்றிக் கலித்தொகை குறிப்பிடுகிறது. மேலும் "பலாப்பழங்கள் மிகுந்த மரக்கிளையில்வந்து தங்கிய கொக்கு, தான் கொண்டுவந்த மீனைக்குடைந்து தின்னுதலால் ஏற்படும் புலால் நாற்றத்தைப் பொறுக்கமுடியாத மந்தி தும்மும்"[102] செயலை மருதன் இளநாகனார் புனைவர்.

### புலவுமீன் உணங்கல்

உணங்கல் என்பது காயவைத்த அல்லது உலரவைத்த மீனினைக் குறிக்கும். இதைத் தற்காலத்தில் 'கருவாடு' என அழைக்கின்றனர். "புலால் மணம் பொருந்திய மீனை உப்பிட்டு வற்றலாய்க் காயவிடுதலை"[103] உலோச்சனாரும், "பெரிய கடலில் பரதவர் கொண்ட சுறாமீனின் வற்றலும், நீர் அற்ற கழிகளில் எளிதாய் இறாமீனின் வாடலும் நிலவின் ஒளிபோன்ற வெள்ளிய மணற்பரப்பில் உலர வைப்பதால் புலால் நாற்றத்தை உண்டாக்கியதை"[104] தும்பிசேர்கீரனாரும் குறிப்பிடுகின்றனர்.

### மீன்சுடுபுகை

"கொழுத்த மீன்களைச் சுடுவதால் எழும்புகை தெருக்கள் முழுவதும் கலந்து புலால் நாற்றம் வீசுவதை"[105] உலோச்சனார் கூறுவர்.

## முடைநாற்றம்

முடை என்பது தீய நாற்றத்தைக் குறிக்கும். இறந்துபட்ட உடம்பிலிருந்து தோன்றும் அழுகிய நாற்றமே முடைநாற்றமாகும். இதனைச் சங்கப்புலவர்கள், கடுமுடை, படுமுடை, இடுமுடை என வெவ்வேறாகச் சுட்டுவர்.

## கடுமுடைநாற்றம்

"புலி தின்றுவிட்டு கைவிட்டுப்போன, தசைகிழிந்த எலும்புகளிலிருந்து வீசும் முடைநாற்றத்தை" (அகநா.3:97:3) அகநானூறும், "செங்குருதியை ஒத்த செவிகளைக்கொண்ட கழுகுகள் மலையின் பக்கங்களில் கடிய தீநாற்றம் வீசும் புலால் உணவிற்காக காத்திருக்கும் தன்மையை"[106] ஐங்குறுநூறும் குறிப்பிடுகின்றன.

## படுமுடைநாற்றம்

படுமுடை என்பது மனிதர்கள் இறந்த பின் அவர்கள் உடம்பில் உண்டாகும் புலால் நாற்றத்தைக் குறிக்கும். பாலை "வழிப்போவாரைக் கொன்றதனால் உண்டான முடைநாறும் புலாலை விரும்பியுண்ணும் சிவந்த காதுகளையுடைய கழுகுகளை (அகநா.175:5, 247:11) அகநானூறும், "வளைந்த வில்லையுடைய ஆறலை கள்வர் வழியிடையில் செல்லும் ஏதிலாளரைக் கொன்று உயிரைப் போக்குவர், அதனால் இறந்துகிடந்த உடல்கள் கொடிய மலைவழியில் ஒருபக்கத்தே இலைகளால் மூடப்பட்டு முடைநாற்றம்"[107] வீசுவதை நற்றிணையும் குறிப்பிடுகின்றன.

## இடுமுடை நாற்றம்

மக்கள் செல்லும் சுரத்தின்வழியில் கொலையுண்ட பிணங்களில் தீயநாற்றம் வீசுவதை,

"கொன்று ஆற்றுத் துறந்த மாக்களின் அடு பிணன்

இடுமுடை" (நற்.329:2-3)

என்ற அடிகள் விளக்கும். இங்ஙனம் கடுமுடை, படுமுடை, இடுமுடை ஆகிய நாற்றங்கள் இறந்துபட்ட உடம்பிலிருந்து தோன்றும் நாற்றத்தைக் குறிக்கும் சொற்களாகும்.

## மணங்கமழ் பாக்கம்

பட்டினம், பாக்கம் போன்ற சொற்கள் கடற்கரை நகரங்களைக் குறிக்கும். "கடல்அலைகள் மோதி உடைக்கும் மணல் மேட்டில் பழைய படகின் அழிவு போக்கிப் புதிதாகச் செய்யப்பட்ட வலையினையுடைய பரதவர்கள், உயர்ந்த மணலையுடைய கரைப்பக்கத்தில் வந்து ஒதுங்கிக்கிடக்கும் சுறாமீனை அறுத்துத் தாமும் தின்று பிறருக்கும் கொடுப்பதால் உண்டான மணம் நெய்தல்நிலப் பாக்கம் முழுவதும் கமழ்வதை,"[108] அம்மூவனார் குறிப்பிடுவர்.

## புலவுநாறும் சேரி

கடலும் நிலமும் சேரும் பகுதி சேரி எனப்படும். கடற்கரையோரங்களில் பரதவர்கள் பிடித்துவந்த மீன்களினாலும், உலர்த்தப்படும் உணங்களினாலும் சேரி முழுவதும் புலால் நாற்றமடிக்கும். இந்நாற்றம் மிகுந்த குடியிருப்பை 'புலால்சேரி' (குறுந்.351:6, அகநா.200:2) புலவுநாறு சிறுகுடி (நற்.388:8, அகநா.270:2) புலவுநாறு இருங்கழி (அகநா.180:10) புலவுநாறு முன்றில் (அகநா.297:12) எனச் சங்கப் புலவர்கள் குறிப்பிடுவர்.

## கள்மணம்

பெரியன் என்பானுடைய பொறையாறு கள்மணம் கமழ்வதை, "நல்தேர்ப்பெரியன், கள்கமழ் பொறையாறு" (நற்.131:8) என்பது

விளக்கும். புதியகள் மணங்கமழ்வது, கோசரது ‘நெய்தலஞ்செறு’ என்னும் வளஞ்சான்ற நல்ல நாட்டை போல இருந்ததை, அகநானூறு (113:6) குறிப்பிடும். பூக்கள் மலர்வதால் அதிலுள்ள தேன்மணம் கள் மணம் போல் கமழ்வதை (ஐங்.151:4, அகநா.150:11, 153:17) சங்கப் பாக்கள் குறிப்பிடுகின்றன.

## புலால் நாற்றமும், பூக்களின் நாற்றமும்

யானையும் புலியும் போரிட்டமையால் செவ்வி குலைந்து குருதிபடிந்து சிவந்து காணப்பட்ட அப்போர்க்களத்தின்கண் எழுகின்ற புலால் நாற்றத்தை நிறம்பொருந்திய வேங்கை மலர்களின் மணமும், காட்டு மல்லிகையின் மணமும் ஒன்றுகூடி மாற்றுகின்ற தன்மையை எடுத்துரைப்பர்”[109] வண்ணக்கண் பேரிச்சாத்தனார்.

## தலைவி பற்றிய நுகர்வுப் புனைவு

சங்க இலக்கியத்தில் தலைவியின் கூந்தல், நுதல், வாய், தோள், மார்பு, மேனி போன்றவற்றின் நறுநாற்றம் புலவர்களால் நுட்பமாகப் புனையப்பட்டுள்ளது.

## கூந்தல் நாற்றம்

சங்க இலக்கியத்தில் கூந்தலைக் குறிக்க கூந்தல், கதுப்பு, குரல், மயிர், முடி, சென்னி என்பன போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. கூந்தல் நாற்றம் கமழ்,[110] தேம்கமழ்,[111] வெறிகமழ்,[112] மணங்கமழ்,[113] நாறும்,[114] நறுமலர்,[115] சாந்துநாறும்,[116] நரந்தம் நாறும்,[117] பல்நாற்றம்[118] போன்ற சொற்களால் புனையப்பட்டுள்ளன.

## நறிய கூந்தல்

தலைவியின் கூந்தலுக்கு இயற்கையிலே மணம் உண்டு என்பதை இறையனார், "பூக்களில் உள்ள மணத்தை ஆராய்ந்து உண்ணுகின்ற வண்டிடம் எழுமையும் பழகுதல் பொருந்திய நட்பினையும், மயிலின் இயல்பாகிய சாயலையும், நிரையாய் செறிந்த பற்களையும் உடைய அரிவையின் கூந்தலைப் போல, நீ அறியும் மலர்களுள் நறுமணம் உள்ளதோ"[119] எனக் கேட்பதன் வாயிலாக உரைப்பர். மலர்களின் மணத்தை விட, தலைவியின் கூந்தல் மணம் சிறப்பானது என்பது புலவரின் எண்ணமாகும்.

## நரந்தம் நாறும் கூந்தல்

"நரந்தம் என்பது ஒருவகை புல். இப்புல்லிருந்து நறுமணமான எண்ணெய் எடுக்கப்படுகின்றது. இது பல பொருள்களுக்கு நறுமணம் ஊட்டப்பயன்படுகின்றது"[120] என்பர் பி.எல்.சாமி. அவ்வகையில் நரந்தநறுமணம் மகளிர் கூந்தலுக்கு ஊட்டப்பட்டது. கூந்தல் அம்மணத்துடன் திகழ்தலை,

"நரந்தம் நாறு இருங்கூந்தல்" (கலித்.54:5)

"நரந்தம் நாறும் குவைஇருங்கூந்தல்" (குறுந்.52:3)

என்னும் அடிகள் விளக்கும்.

## தகரம் நாறும் கூந்தல்

தகரம் என்பது மயிர்ச்சாந்தைக் குறிக்கும். "தூய மலர்கள் நெருங்கப் பெற்று, மயிர்ச்சாந்து பூசியதால் கூந்தல் நறுமணங் கமழுதலை"[121] நக்கீரரும், "மயிர்ச்சாந்து பூசப்பெற்றுப் பூச்சூடிய கூந்தல் இமயமலையிலுள்ள கானம் போன்று மணங்கமழ்வதை"[122] எயினந்தை மகனார் இளங்கீரனாரும் குறிப்பிடுகின்றனர்.

## மலர்நாறும் கூந்தல்

"குளிர்ந்த குவளை மலரின் உள்ளகம் போல் கூந்தல் நறுமணத்துடன் திகழ்தலை"[123] "முல்லைமணம் கமழும் கூந்தல்"[124] "புனுகு மணத்தினையுடைய கூந்தல்"[125] "பூமணம் நாறுகின்ற கதுப்பு"[126] "மணம் கமழும் அகிற்புகையும் சந்தனப் புகையும் ஒருங்கே மணக்கின்ற கரும்மலைப்போன்ற கரிய கூந்தல்"[127] "நறுமணம் வீசுகின்ற நெருங்கிய குழல் முடித்த கொண்டை"[128] என்று தலைவியின் கூந்தல் மலர்களாலும், நறுமணப் பொருட்களாலும், நறும்புகையாலும், மணம் பெற்றுத் திகழ்வதைப் புலவர்கள் புனைந்துள்ளனர்.

மேலும் இளவேனிற் பருவத்தில் மலர்ந்த காட்டு மல்லிகை மலரையும், பருத்த அடிமரப்பகுதியையுடைய பாதிரியின் நுண்ணிய மயிரமைந்த சிறந்த மலரையும், நறுமணங்கமழும் செங்கருங்காலியையும் ஒருங்கே பறித்து, பூஞ்செம்பைத் திறந்தது போன்று நறுமணம் செறிந்த, அழகிய நல்லதிறம் பொருந்திய, நீலமணியென விளங்கும் ஐந்து பகுதியாக அமைக்கப்பட்ட தாழ்ந்து விளங்கும் மணமுடைய கூந்தலில், அம்மலர்களை ஒருசேரச் செறித்தமையால் பல்வகை நாற்றத்துடன் கூந்தல் திகழ்ந்ததை"[129] பாலைபாடிய பெருங்கடுங்கோ புனைவர்.

## தலைவியின் நுதல் மணம்

நுதல் என்பதற்கு "நெற்றி, மேலிடம், புருவம், தலை"[130] போன்ற பல பொருள்களுண்டு "சுனைகளில் பூத்த குவளைமலர்களோடு சேர்த்துக் கட்டிய காட்டு மல்லிகை போன்று நெற்றி மணம் வீசுதலை"[131] மோசிகீரனாரும், "முல்லையின் மணம்போல மணக்கும் நெற்றியை"[132] ஓதலாந்தையாரும், "திலகமிட்டு மணம் கமழும் நெற்றியை"[133] இளங்கீரனாரும் சுட்டுவர்.

## தலைவியின் வாய்நாற்றம்

ஆம்பல் மலரின் மணம் போன்று மணம் வீசும் தலைவியின் வாயினை "ஆம்பல் நாறும் தேம்பொதிதுவர் வாய்" (குறுந்.300:12) எனச் சிறைக்குடி ஆந்தையார் புனைவர்.

## தோள் கமழ்தல்

தலைவியின் தோள் குளிர்ந்த நறுமணமுடைய சந்தனம் போன்று கமழுதலைக் கலித்தொகையும் (186:13), பசலையால் நறுமணமிக்க தோள் மெலிவுறுதலை ஐங்குறுநூறும் (227:2) குறிப்பிடுகின்றன.

## தலைவியின் மார்பு கமழ்தல்

மாரிக்காலத்துப் பூக்கும் பித்திகையின் ஈரமான இதழ்களைக் கொண்ட பூவைத் தொடுத்து மாலையாகச் சூடுவதாலும், நறுமணம் கமழும் சந்தனத்தை அரைத்துப் பூசுவதாலும் தலைவியின் மார்பு கமழ்வதை,

"மாரிப் பித்திகத்து ஈர் இதழ் அலரி
நறுங் காழ் ஆரமொடு மிடைந்த மார்பில்" (நற்.314:3-4)

என முப்பேர் நாகனார் புனைவர்.

## தலைவியின் மேனி நாற்றம்

சிறைக்குடி ஆந்தையார் தலைவியின் மேனியை "காந்தள் மலரையும், தோற்றிய அரும்புகளிலிருந்து உண்டாக்கிய செவ்விய மலர்களாகிய முல்லைப் பூக்களையும், மணங்கமழும் இதழ்களையுடைய குவளைமலர்களோடு இடையிடையே பொருந்துமாறு கலந்து, அழகாகத் தொடுத்தலால் மாட்சிமை பெற்ற மாலை போல நறுநாற்றத்தையுடையது"[134] என உரைப்பர்.

## புலவுநாறும் மேனி

நெய்தல் நிலத் தலைவியின் மேனி, "நிணத்தையுடைய சுறா மீனை அறுத்துக் காயவைப்பதாலும், அவை வெயிலிற் காயும்போது கூட்டமாய்த் திரளும் பறவையை விரட்டுவதாலும், புலால் நாற்றம் வீசுவதைப்"[135] நற்றிணை உரைக்கும்.

## படுக்கை

படுக்கை மணத்துடன் இருத்தலை, "குறுங்கால் கட்டில் நறும்பூஞ்சேக்கை" (குறுந்.359:3) எனப் பேயனார் குறிப்பிடுவர்.

## தலைவனின் மார்பு கமழ்தல்

தலைவனின் மார்பு சந்தனம் பூசியதால் மணப்பதை ஆரம் நாறும் மார்பினன் (அகநா.22:11, நற்.168:10, 322:8, குறுந்.161:6, 198:7) எனச் சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன. மேலும் குளிர்ச்சி பொருந்திய நறுமணங்கமழும் மாலைகளை அணிந்திருப்பதால் அவன் மார்பு மணக்கும் தன்மையை,

"தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே" (நற்.304:10)

"அமிழ்தத்து அன்ன கமழ்தார் மார்பின்" (அகநா.332:13)

என்றும் புனைந்துரைப்பர்.

## தொகுப்புரை

ஐம்புல உணர்வில் நான்காவதாக அமைவது மூக்குப்புலனுணர்வாகிய நாற்ற உணர்வாகும். இவ் உணர்வினால் நன்னாற்றம், தீ நாற்றம் ஆகிய இரண்டையும் பிரித்தறிய முடியும்.

சங்கப் புலவர்கள் நறுமணமிக்க மலர்களையும், அவற்றின் மணங்களையும், கமழ், மணங்கமழ், தேம்கமழ், வெறிகமழ், நறு, நாறு,

நாற்றம், கடி, முருகு என்பன போன்ற சொற்களில் வரையறுத்துள்ளனர். அவ்வகையில் மணங்கமழும் மலர்களாக காந்தள், களா, பிடவு, கோங்கு, நுணா, ஞாழல், தாழை, நீலம், புன்னை, வெண்கடம்பு, வேங்கை போன்றவற்றின் மணத்தைப் பொதுநிலையில் கமழ்தல் என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளனர். நுணாவின் வெண்ணிறப் பூக்கள் 'கம்'மென்று கமழ்வதைப் புலவர்கள் சுட்டியுள்ளனர்.

நெய்தல் நிலத்தின் புன்புலால் நாற்றத்தை தாழையின் மணமிக்க மலர்கள் நீக்கியதும், பகன்றையின் மலர்கள் கள்ளின் மணம் போன்று கமழ்வதும் புலவர்களால் நன்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

கழியில் பூத்த மலர்களின் மணத்தை, தலைவன் மார்பிலே அணிந்திருந்த மாலையின் நாற்றம் எனத் துணிந்த தலைவி, பின்பு காற்றின் வருகையால் அது கழியில் பூத்த பூக்களின் மணம் என்பதை அறிந்தாள் என உரைப்பது நுண்ணுணர்வின் வெளிப்பாடாகும்.

பல மலர்கள் செறித்து தொடுக்கப்படும் மாலையில் அவற்றின் மணம் மிகுந்து காணப்படும் தன்மையை வெறிகமழ் என்ற சொல்லால் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

காடும், மலையும் இயற்கையின் கொடையாகும். காடுகள் திருமணம் நிகழும் இல்லம் போல் கமழ்வதையும், பல்வகை மலர்களின் நறுமணத்தால் கம்மென்று கமழுவதையும் புலவர்கள் வெளிப்படுத்தியுள்ளனர்.

மலையின் மணத்தினை மணங்கமழ் நறும், நாறி என்பன போன்ற, சொற்களால் குறித்துள்ளனர். நெய்தல் நிலத்தின் மணல்மேடு புன்னை மலர்களால் மணங்கமழ்வதையும், கடற்கரைச் சோலைகள் யாவும்

மலர்களின் நறுமணத்தால் மணம் மிகுந்து கமழ்வதையும் புலவர்கள் அழகுறப் புனைந்துள்ளனர்.

மலர்களின் மணத்தைத் தாங்கி வருவதால் காற்று மணங்கமழுவதும், மழைபொழியும் காலங்களில் வைகறையில் பூக்களின் மணமும், மண்மணமும் கமழ்வது புலவர்களால் நன்கு புனையப்பட்டுள்ளன.

நறுமணப்பொருள்களில் இன்றியமையாத இடம்பெறுவது சந்தனம். சந்தன மரத்தை மலைப்பாம்பு உராய்வதால் வெளிப்படும் நறுமணத்தையும், ஆடவர்களும், மகளிரும் மணங்கமழும் சந்தனக் குழம்பினை மார்பிலே பூசி மகிழும் தன்மையும் நறுமணத்தின் மீது மக்களுக்கு உள்ள நாட்டத்தினைப் புலப்படுத்தும்.

அகில், சந்தனம் ஆகியவற்றினை எரிப்பதால் ஏற்படும் புகை நறுமணத்துடன் கமழ்வதையும், நறுமணப் பண்டம், மாலை ஆகியவற்றினால் தெருவெங்கும் மணங்கமழ்வதையும், பூக்களின் நறுமணத்தால் விழவுக்களம் கமழ்வதையும் புலவர்கள் சிறப்புற எடுத்துக்காட்டியுள்ளனர்.

நீர்த்துறை, சுரம், யானை, புலியின் புலால் நாற்றம், உணங்கல் (கருவாடு), மீன் சுடு புகை ஆகியவை புலால் நாற்றத்துடன் காணப்படுவதை சங்கப்பாக்கள் சுட்டியுள்ளன. மேலும் இறந்துபட்ட உடம்பிலிருந்து தோன்றும் முடை நாற்றமும் புலவர்களால் பாடப்பெற்றுள்ளது.

நெய்தல் நிலப் பாக்கம், சிறுகுடி, சேரி போன்றவை புலால் நாற்றமுடன் காணப்படுவதையும், இத்தகைய புலால் நாற்றத்தை மலர்களின் நறுமணம் மாற்றுவதையும், புலவர்கள் புனைந்துள்ளனர்.

தலைவியின் மேனி பற்றிய நுகர்வுப் புனைவில், கூந்தல், நுதல், வாய், தோள், மார்பு, மேனி போன்ற உறுப்புக்கள் மலர்கள், சந்தனம் போன்றவற்றால் மணங்கமழும் தன்மை நன்கு புனைந்துரைக்கப் பட்டுள்ளது.

# சான்றெண் விளக்கம்

1. தொல்.நூ.838
2. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி, கொடி விளக்கம், ப.54
3. கலித்.121:13
4. அகநா.154:6-7
5. நற்.399:1-3
6. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி, கொடி விளக்கம், ப.164
7. அகநா.184:7
8. ஐங்.342:2-3
9. தி.முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.56
10. உ.வே.சாமிநாத ஐயர், குறுந்தொகை ஆராய்ச்சியுரை, ப.41
11. நற்.78:1-4
12. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி, கொடி விளக்கம், ப.58
13. அகநா.170:4
14. நற்.273:8
15. அகநா.357:13-14
16. தி.முத்துகண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.48
17. அகநா.365:12-14
18. மேலது, 118:2
19. நற்.396:3-4
20. அகநா.83:1
21. வி.நாகராசன் (உரை.), குறுந்தொகை மூலமும் உரையும், ப.35
22. குறுந்.10:2-3
23. கலித்.103:1-4

24. நற்.190:4

25. பரி.11:62

26. மேலது, 12:58

27. ச.மெய்யப்பன் (பதி.), வெற்றிதமிழ் அகராதி, ப.304

28. அகநா.98:19

29. ச.மெய்யப்பன் (பதி.), வெற்றிதமிழ் அகராதி, ப.224

30. ஐங்.226:2, 254:2, கலித்.53:3, 59:3, அகநா.4:16, 108:16, குறுந்.259:2

31. ஐங்.141:1, 146:1-2, 150:1, நற்.96:1, 106:6, குறுந்.318:2

32. கலித்.123:1, 136:13, அகநா.80:12, 170:12, நற்.49:8-9, 76:7, 249:4-5, 278:1, 375:1

33. ஐங்.173:3, 190:1, நற்.123:6, 254:8, கலித்.15:20

34. அகநா.174:11, 202:5, 205:20, 301:6, 378:4, 388:8, 85:11, நற்.257:5-6, 334:3-4, குறுந்.84:4, ஐங்.217:1

35. கலித்.42:16

36. குறுந்.347:1-2

37. மேலது, 62:1-3

38. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம், ப.143

39. அகநா.237:3-4

40. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி, கொடி விளக்கம், பக்.146-147

41. அகநா.85:10-12

42. இ.வை.அனந்தராமையர், நெய்தற்கலி ஆராய்ச்சி, குறிப்புரை, ப.827

43. ஐங்.177:3

44. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி, கொடி விளக்கம், பக்.42-43

45. அகநா.274:12-13

46. மேலது, 14:8

47. நற்.367:8-9

48. அகநா.234:12-13

49. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி, கொடி விளக்கம், பக்.86-91

50. அகநா.42:1-2

51. நற்.361:4

52. அகநா.164:4

53. மேலது, 23:3-5

54. கலித்.52:8

55. மேலது, 148:4

56. அகநா.238:15

57. மேலது, 262:17

58. மேலது, 141:28, நற்.104:1

59. ஐங்.293:1, நற்.294:7-8

60. நற்.204:4

61. குறுந்.115:4

62. நற்.259:2

63. அகநா.159:14

64. ஐங்.244:2

65. கலித்.98:16

66. குறுந்.313:1-3

67. நற்.118:1-2.

68. நற்.235:1-4

69. அகநா.374:1-10

70. அ.பரிமணம், கு.வெ.பாலசுப்பிரமணியன் (பதி.), பரிபாடல் மூலமும் உரையும், ப.140

71. பரி.12:77-81

72. அகநா.354:10, 26:4, 186:12, 340:18, பரி.16:28

73. ஐங்.212, கலித்.79:9, 52:6

74. ஐங்.253, பரி.11:27, நற்.261:8

75. அகநா.340:17-18

76. மேலது, 354:9-10

77. நற்.481:5-8

78. ஐங்.212:1-2

79. மேலது, 253:1-2

80. நற்.315:4-5

81. அகநா.81:26

82. நற்.169:8-9

83. பரி.12:19-20

84. நற்.19:6

85. மேலது, 63:4

86. ஐங்.10:4

87. நற்.94:6

88. அகநா.255:2-3

89. மேலது, 35:6-10

90. குறுந்.253:6

91. அகநா.249:16

92. கலித்.21:2

93. மேலது 66:3

94. மேலது 8:4

95. குறுந்.332:3-4

96. அகநா.272:1-2

97. நற்.202:1

98. அகநா.72:11-15

99. மேலது, 381:9

100. மேலது 160:1-6

101. கலித்.131:32

102. நற்.326:1-3

103. மேலது, 331:4

104. குறுந்.320:1-3

105. நற்.311:65

106. ஐங்.335:3

107. நற்.164:8

108. அகநா.10:12

109. மேலது, 268:1-4

110. கலித்.81:4, அகநா.198:5, 204:3, 378:2, நற்.20:3, 52:3, 105:9, 137:1, 298:1, 301:9, குறுந்.199:4

111. கலித்.40:9, 66:5, அகநா.58:5, 129:15, நற்.85:10, 100:4

112. நற்.308:6, 368:6

113. கலித்.32:17, 131:39, அகநா.295:20

114. அகநா.39:22, 254:1, 391:5, நற்.84:1, 219:1, குறுந்.312:6

115. நற்.337:3-8

116. ஐங்.225, 240

117. கலித்.54:5, குறுந்.52:3, அகநா.266:4

118. அகநா.379:12

119. குறுந்.2

120. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் செடி, கொடி விளக்கம், பக்.65-66

121. அகநா.141:13

122. அகநா.399:1-2

123. ஐங்.225:2-3

124. கலித்.32:16-17

125. மேலது, 88:1-2

126. மேலது, 40:9

127. குறுந்.286:2-3

128. நற்.308:6

129. மேலது, 337:7-8

130. ச.மெய்யப்பன் (பதி.), வெற்றிதமிழ் அகராதி, ப.229

131. குறுந்.59:3

132. ஐங்.413:1

133. நற்.62:6

134. குறுந்.62

135. நற்.45:6-7.

# செவிப்புலனுணர்வுப் புனைவு

மனிதனின் ஒவ்வொரு அசைவிலும் தொடர்புடையதாக ஒலி விளங்குகிறது. குழந்தை பிறந்தவுடன் தான் வந்ததை உலகிற்கு ஒலியின் மூலமே உணர்த்துகின்றது. மனிதன் மட்டுமின்றி அஃறிணை உயிர்களும் ஒலியின் மூலமே தங்கள் வாழ்வியலை நடத்துகின்றன. இத்தகைய செவிஉணர்வை கண்ணிற்கு அடுத்தபடியாகத் தொல்காப்பியர் ஐந்தாவதாகச் சுட்டியுள்ளார். செவியினால் உணரப்படும் உணர்வைச் சங்கப் புலவர்கள் நுண்ணிதின் ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ள திறம் குறித்து ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

## ஓசை உலகம்

“கண்ணைமூடித் திறந்தால் உருவுலகம் கண்ணுக்குப் புலனாவதுபோல செவிக்குப் புலனாவது ஓசையுலகமாகும். உருவுலகத்தில் கல், மண், மலை, நீர், நெருப்பு, புழு, பறவை, விலங்கு, மனிதன் முதலிய அசையும் பொருள்களும், அசையாப் பொருள்களும் அடங்கும். ஓசையுலகத்தில் இடி முழக்கம், கடலோசை, கைகொட்டுதல், நீர் வீழ்ச்சியின் இரைச்சல், பறவை விலங்குகள் ஒலித்தல், பேச்சு, பாட்டு, அழுகை, பல்வேறு இசைக்கருவிகளின் முழக்கங்கள் முதலியவை அடங்கிக் காதினால் கேட்கப்பெறுகின்றன”[1] என்பர் வ.த.கோமதி சங்கர ஐயர்.

## ஒலி - ஓசை வேறுபாடு

செவி உணரும் உணர்வுகளாக ஒலி, ஓசை ஆகிய இரண்டும் சுட்டப்பட்டுள்ளது. ஒலி, ஓசை என்பதை ஒரே பொருளில் கையாளுகின்றனர். ஒலி என்பதும் ஓசை என்பதும் வேறுபாடு உடையது. இவ்விரண்டிற்கும் இடையே உள்ள வேறுபாட்டைத் தமிழிசைக்

களஞ்சியம், "ஒலி - இனிய ஓசை, ஒலியென்பது நுண்மையும், இனிமையும், சுருதியுடன் கூடியதுமாய் அமைந்தது. ஓசையென்பது நுண்மையும், இனிமையும் அற்றது. சுருதியுடன் இணையாதது. இப்பொருள் வேறுபாடுகள் நாளடைவில் இழந்துபோகவே செய்யுள்களில் இவ்விரு சொற்களும் ஒன்றற்கொன்று பயன்படுத்தப்பட்டுவருகின்றன"[2] என உரைக்கும்.

ஒலி, ஓசை வேறுபாட்டினை தேவநேயப் பாவணர், ஒலி, ஓசை என்னும் இரு சொற்களும் ஓகார அடிப்படையில் பிறந்திருப்பினும், ஒலி என்பது எழுத்தொலி போன்ற மெல்லோசையையும், ஓசை என்பது இடியோசை, கடலிரைச்சல் போன்ற வல்லோசையையும் குறிக்கும் வழக்காற்றை அறிதல் வேண்டும்"[3] என ஒலியையும், ஓசையையும் வேறுபடுத்துவர். எனவே ஒலி என்பது பண்பட்டது, ஓசை என்பது பண்படாதது என அறிய இயலும்.

## சங்க இலக்கியத்தில் ஓசையுணர்வு

சங்க இலக்கியத்தில், அகவுதல், அறிவுறுதல், அரட்டுதல், அதிருதல், அலருதல், அரவாய், அலர், அழுதல், அறைந்த, ஆலும், ஆர்க்கும், ஆர்ப்ப, ஆர்க்கலி, ஆர்க்குரல், ஆரவாரம், ஆடும், இயம்ப, இமிழ், இம், இன், இமிரும், இசை, இரங்க, இரட்டும், இடி, இகுத்த, இனைதியே, இழும், இகலி, இமைக்கும், இலங்கும், இழிதரும், இடித்தல், உரறும், உரைத்தல், உறூஉம், உமிழ்தல், உருமுதல், உழம்பும், உயிர்ப்புதல், ஊதும், எழ, எறியும், எள்ளுதல், ஐயென, ஒலித்தல், ஒய், ஒல்லென, ஓர்த்து, ஓசை, கல், கலி, கரைதல், கவ்வை, கறங்குதல், குழறும், கழறுதல், குழுமுதல், கம்பளை, கூப்பிடு, கூவி, கூவும், குரைத்தல், கதறல், கம், கடுங்குரல், கேட்கும், களரி, கொட்டும், கதுமென, சிரற்றும், சிலைத்தல், சிலம்ப, துடும், தீம், தையென, தெள், தெளிர்ப்ப, நக, நரலும்,

நுவலும், நெகிழும், நொடிவிடுதல், படுதல், பண், பாடு, பாட்டு, பயிற்றல், பட்டென, பாணி, பிளிறல், புலம்ப, புல்லென, பூசல், புலரா, முரல, முழங்குதல், வெறீஇ, விதிர்ப்ப, வீளை, விளி, விளிக்கும், விழையும், வாசித்தல், முரற்சி என்பன போன்ற பல்வேறு ஒலிக்குறிப்புச் சொற்களால் புலவர்கள் புனைந்துரைத்துள்ளனர்.

## இயற்கை ஒலிப் புனைவு

நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் ஆகிய ஐந்தும் கலந்ததே இயற்கை. புறநானூறு, ஐம்பெரும் பூதத்தை,

“மண்திணிந்த நிலனும்
நிலன்ஏந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித் தலைஇய தீயும்
தீமுரணிய நீரும் என்றாங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை போல” (புறநா.2:1-6)

எனக் குறிப்பிடுகின்றது.

## மலையில் ஏற்படும் ஒலிகள்

மலைகள் ஒலியை எதிரொலிக்கும் இயல்பினையுடையன. எவ்வோசை கேட்பினும் அவ் ஓசையை அவை எதிரொலிக்கும். மலையில் அருவி வீழ்தல், இடிஇடித்தல், விலங்கு, பறவைகள் ஒலித்தல், மரங்கள் முறிதல் எனப் பல்வேறு ஓசைகள் வெளிப்படும். சங்க இலக்கியத்தில் மலைகளில் உண்டாகும் ஓசையினை ‘சிலம்ப’ (அகநா.389:22) ‘இயம்பும்’ (அகநா.8:11-12) ‘முழங்க’ (நற்.156:9) ‘ஆர்க்கும்’ (பரி.16:48) என்பன போன்ற சொற்களால் புலவர்கள் புனைந்துள்ளனர்.

வாழையை உண்ணவந்த யானை அதன் அருகேயிருந்த நீர் வற்றாத கழியில் விழுந்து, பின்னர் அக்குழியினின்றும் ஏறமுடியாது திகைத்தது. அப்பொழுது அங்கு வந்த பிடியானது அவ்யானை ஏறுதற்குப் படியாக மரத்தை முறித்தது. மரத்தை முறிப்பதால் ஏற்படும் ஓசை மலை முழஞ்சுகளில் எதிரொலித்ததை,

"வாழை ஓங்கிய தாழ் கண் அகம்பில்
படு கடுங் களிற்றின் வருத்தம் சொலிய
பிடிபடு முறுக்கிய பெரு மரப் பூசல்
விண்தோய் விடரகத்து இயம்பும்" (அகநா.8:9-12)

என்றுரைப்பர் பெருங்குன்றூர் கிழார். இதில் பூசல் எனும் சொல் ஒலியைக் குறிப்பதாகும்.

## அருவியில் ஏற்படும் ஒலிகள்

அருவியின் ஓசையினை, ஒலி, ஒலிக்கும், ஒல், அளவா ஓசை, ஒய்யென, இயம்பும், கறங்கும், அதிரும், ஆர்க்கும், பாடும், இரங்கும், இம், இன், கல் என்பன போன்ற சொற்களில் புலவர்கள் வெளிப்படுத்தியுள்ளனர்.

அருவியின் பொதுவான ஓசையினை ஒல், ஒலி, ஒலிக்கும் என்ற சொற்களில் புனைந்துள்ளனர். அருவி மலையிலிருந்து விழுவதால் ஏற்படும் ஓசையினை, "ஒலிவெள் அருவி ஓங்குமலை" (ஐங்.205:3, நற்.77:7, குறுந்.88:1) என்றும், பேராரவாரத்துடன் விழும் அருவியின் ஓசையினை, "ஒல்லென்று இழிதரும் அருவி" (ஐங்.233:3) என்றும் குறித்துள்ளனர். "வெள்ளப் பெருக்கினால் ஆர்ப்பரித்துவரும் ஆற்றின் ஓசையினை அளவா ஓசை"[4] எனப் பரிபாடல் குறிப்பிடுகின்றது.

மழைபெய்ததனால் வெள்ளப் பெருக்கெடுத்த அருவிகள், மலைக்குகைகள் எதிரொலிக்கும்படி ஓசையெழுப்பியதை,

"அருவி விடரகத்து இயம்பும்" (குறுந்.42:2-3)

"கறங்குஇசை அருவி" (ஐங்.395:5)

"அதிர்இசை அருவி" (கலித்.44:3)

"அருவி ஆர்த்து" (கலித்.53:6)

போன்ற பாடல்கள் குறிப்பிடும். இதில் இயம்புதல், கறங்குதல், அதிர்தல், ஆர்ப்பரித்தல் போன்றவை அருவியின் பேரிரைச்சலைப் புனைய புலவர்கள் கையாண்ட சொற்கள் ஆகும்.

"தேன் உண்ணும் வண்டினங்கள் அஞ்சி எழுந்து ஆராவாரிக்கும்படி 'கல்' என்னும் ஒலியுடன் மலையினின்றும் ஓடிவரும் அருவியின்"[5] ஓசையை அண்டர் மகன் குறுவழுதியார் புனைவர்.

அருவியினை, 'பாடும் அருவி'[6] 'இன்னிசை அருவிபாடும்'[7] கடும்பாட்டு'[8] எனப் பண்படுத்திய பாட்டின் ஒலிக்குறிப்புடன் சங்கப்புலவர்கள் ஒப்பிட்டுரைத்துள்ளனர்.

மேலும் யானை முழங்கும் பக்கமலையில் மூங்கில்கள் நெருக்கமாக வளர்ந்துள்ள மலைச்சாரலில் வெண்ணிற அருவி, இன்னொலி எழுப்பும் வாத்தியத்தைப் போன்று 'இம்' என்னும் ஓசையுடன் மலைக்குகைகளும், மலைப் பிளப்பிடங்களும் எதிரொலிக்குமாறு வந்து வீழ்தலை,

"வாரணம் உரறும் நீர்திகழ் சிலம்பில்
பிரசமொடு விரைஇய வயங்குவெள் அருவி
இன்னிசை இமிழ் இயம் கடுப்ப இம்மெனக்
கல்முகை விடரகம் சிலப்ப வீழும்" (அகநா.172:1-4)

என்றும், இசைக்கருவிகளின் ஒலிபோல இனிமையுடன் அருவி வீழ்தலை "இன்அருவி" (நற்.34:5) என்றும் சங்கப் பாக்கள் எடுத்துரைக்கின்றன.

இவ்வாறு அருவியின் ஓசைகளில் ஒல், ஒலி, அளவா ஓசை, ஒய், இயம்பும், கறங்கும், அதிரும், ஆர்க்கும், இரங்கும் என்பனபோன்ற சொற்களால் பேரிரைச்சலையும், பாடும், பாட்டு, இம், இன் போன்ற சொற்களால் மெல்லிய இனிய ஒலியினையும் புலவர்கள் புனைந்துள்ளமை அவர்தம் செவியுணர்வுப் புனைவிற்குச் சிறந்த சான்றாகும்.

## கடலில் ஏற்படும் ஓசைகள்

நாம் வாழும் பூமி மூன்று பங்கு நீரினாலும், ஒரு பங்கு நிலத்தினாலும் ஆனது. நீர் நிறைந்த பகுதி கடல் என வழங்கப்படுகிறது. கடல், "குட்டம், மென்புலம், அழுவம், பரவை, ஓதம், புணரி, நீர், முந்நீர், திரை, பௌவம், மெல்லம் புலம்பு, பரப்பு, கடல், சேர்ப்பு"[9] எனப் பல்வேறு பெயர்களால் குறிக்கப்பெறுகின்றது. அலைகள் ஒன்றையொன்று மோதிக்கொள்வதால் கடல் எப்பொழுதும் முழங்கிக்கொண்டே இருக்கும். காற்று மிகும்போது பேரோசையுடனும், குறையும்போது மெல்லோசையுடனும் காணப்படும். கடல், முழங்குதல்,[10] படு,[11] கலி,[12] பாடு,[13] இமிழ்,[14] இழும்,[15] ஒலிக்கும்,[16] ஆர்ப்ப,[17] உறும்,[18] கம்,[19] கிளர்த்து[20] என்பன போன்ற சொற்களால் பாடப்பெற்றுள்ளது.

சங்குகள் கடற்கரையின்கண் வந்து உலவ, கடலில் அலைகள் எழுந்து ஆரவாரத்துடன் ஒலித்ததை,

"கோடுபுலம் கொட்ப, கடல் எழுந்து முழங்க,
பாடுஇமிழ் பனித் துறை" (ஐங்.192:1-2)

என்னும் அடிகள் சுட்டும். கடல் அலைகளால் ஏற்படும் ஓசையினை "பெருந்திரை முழக்கமொடு" (அகநா.100:5) "முழங்கு கடல் ஓதம்" (அகநா.220:18) "முழங்கு இரு முந்நீர்த்துறை" (அகநா.338:21) என்பன போன்ற அடிகள் குறிப்பிடும். "நிலவு தோன்றிய இரவுப் பொழுதில்

பொங்குகின்ற அலையுடைய கடலும் ஓசை அடங்காது முழங்கும். ஒலி மிகுந்த அக்கடல் நீரும் கரையில் மோதிப் பெயரும். அத்தகைய கடற்கரைச் சோலையினை"[21] வெள்ளிவீதியார் குறிப்பிடுவர். முழு நிலவொளியில் கடலலையின் வேகம் அதிகமாகவும், பேரிரைச்சலுடனும் காணப்படும் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

"தெளிந்த கடலிடத்து முழங்கும் அலைகள் முழவினது ஓசைபோல மெல்லமெல்ல ஒலிசெய்வது, நீண்டநாள் புண்ணுற்றுக் கிடப்பாரைப் போலப் புரண்டு புரண்டு இயங்கியவாறிருத்தலை"[22] வடமவண்ணக்கண் பேரிசாத்தனார் குறிப்பிடுவர். இங்ஙனம் கடலின் பேரிரைச்சலையும், மெல்லிய ஓசையையும் புலவர்கள் நுட்பமாகப் புனைந்துள்ளனர்.

## தீ முழங்குதல்

நெருப்பு எரியும்போது ஏற்படும் ஓசையினை முழங்குதல் எனச் சங்கப் புலவர்கள் புனைந்துள்ளனர். "மூங்கில்கள் ஒன்றோடொன்று உராய்வதால் தீப்பற்றியெரியும் அழல் முழக்கம் கேட்டு வலிமைமிக்க புலி அஞ்சியோடுவதை"[23] ஓதலாந்தையாரும், "கொன்றை மாலையை அணிந்த இறைவன் திரிபுரத்தை அழித்தமையினாலே தோன்றிய வெம்மையைப்போல ஞாயிறு சுடுகின்றமையால் உண்டான காட்டுத்தீ வானம் அதிரும்படி முழங்குதலை"[24] நல்லந்துவனாரும் குறிப்பிட்டுள்ளனர்.

## காற்றின் ஒலி

காற்றின் இயக்கத்தை அடிப்படையாகக் கொண்டு அவற்றை முழங்குதல், உரற்குரல், இம் என வகைப்படுத்தியுள்ளனர் புலவர்கள். கோடையில் வீசும் வெப்பம் மிகுந்த காற்று பேரிரைச்சலுடன் முழங்குவதை,

"ஆள் வழக்கு அற்ற சுரத்திடைக் கதிர்தெற
நீள் எரிபரந்த நெடுந் தாள் யாமத்து
போழ் வளி முழங்கும்" (அகநா.51:1-3)

எனக் குறிப்பிடுவர் பெருந்தேவனார். இதில் மனித நடமாட்டமே இல்லாத பாலைநிலத்து வழியிலே, ஞாயிற்றின் கதிர்கள் சுடுவதினால், மிகுதியான வெப்பம் பரவிய நீண்ட அடிப்பகுதியினைக் கொண்ட யாமரத்தின் பொலிவற்ற உயர்ந்த கிளைகளில், காற்று இரைச்சலுடன் ஊடறுத்துச் செல்லுதலைக் குறிப்பிடுகின்றது. மேலும் முழங்குகின்ற வெம்மை மிக்க காற்றினை "உரறுகுரல் வெவ்வளி" (நற்.62:8) என இளங்கீரனார் குறிப்பிடுவர்.

## இம்மென் வாடை

வடக்கிலிருந்து வீசக்கூடியது வாடைக்காற்றாகும். இக்காற்று மாலை நேரத்தில் இம்மென்றும், கல் என்ற ஒலியுடனும் வீசுதலை,

"இம்மென, இரைக்கும் வாடை இருள்கூர் பொழுதின்"
(நற்.109:5-6)

"கல்லெனக் கடிதுவந்து இறுத்த கண்இல் வாடை"
(அகநா.243:7-8)

எனப் புலவர்கள் புனைந்துரைப்பர்.

## 'நள்'ளென் மாலை

மாலைப் பொழுது 'நள்' என்னும் ஓசையுடன் வந்ததை "நள்ளென வந்த நார்இல் மாலை" (குறுந்.118:2) எனப் புனைவர் நன்னாகையார். 'நள்' என்னும் ஒலிக்குறிப்புச் சொல் "யாமத்திற்கே"[25] பெரும்பான்மையும் சுட்டப்பட்டிருப்பினும் இவ்வோரிடத்தில் மாலைப் பொழுதை குறித்து வந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

## மரங்களின் ஒலிகள்

மரங்களின் கிளைகள் முறியும்போது இலை, நெற்று ஆகியவை காற்றினால் ஓசை எழுப்புவதை புலவர்கள் தம் பாடல்களில் புனைந்துரைத்துள்ளனர்.

## பெருமரப் பூசல்

பூசல் என்பது ஒழுங்கற்ற கரடு முரடான ஓசையைக் குறிக்கும். பெரியமரம் முறிவதால் ஏற்படும் ஓசையை "பூசல்"[26] எனப் பெருங்குன்றூர்கிழார் புனைவர்.

## அரையமர ஒலி

அரையமரம் தற்காலத்தில் அரசமரம் என வழங்கப்படுகிறது. கோடை காலத்தில் வெப்பக்காற்றால் அலைப்புண்ட அரையமரத்தின் இலைகள் எழுப்பும் ஓசையைக் கேட்டு, அச்சமுற்ற போகில் இரைதேடுவதை விடுத்து வேறிடங்களை நாடிச்செல்வதை"[27] புனைவர் ஓதலாந்தையார். கோடையில் காய்ந்த இலையின் ஒலி சலசலவென ஒலித்தலே பறவையின் அச்சத்திற்கு காரணமாக அமைகின்றது.

## மூங்கிலின் ஒலி

மூங்கில்கள் அடர்த்தியாக வளரும் இயல்பின. அடர்த்தியான மூங்கில்கள் ஒன்றையொன்று உராய்வதனால் ஓசை ஏற்படும். இவ் ஓசையை நரலுதல்,[28] ஒலித்தல்[29] எனக் குறிப்பிட்டுள்ளனர். அகநானூற்றில் வெப்பத்தால் மலை உச்சியில் உள்ள மூங்கிலின் இளம்முளை வாடி வதங்கியது. மூங்கில் கழிகள் ஒன்றோடொன்று உராய்வதால் ஒலி எழுந்தது. இதனை,

"மூங்கில் இளமுளை திரங்க, காம்பின்
கழைநரல் வியல் அகம் வெம்ப" (அகநா.241:6-7)

எனக் குறிப்பிடுவர் காவன் முல்லைப் பூதனார். கரிய முகத்தையுடைய ஆண் குரங்கு, பசுமையற்ற மூங்கிலிற் பாய்வதால், நன்கு விளைந்து முற்றிய மூங்கில் நெல், கதிரவன் காயும் வெப்பமிக்க பாறையின் மீது உதிர்ந்து, நகத்தை நெரிப்பது போன்ற ஒலியுடன் பொங்கிப் பொரிவதைப்"[30] பாலை பாடிய பெருங்கடுங்கோ புனைவர். "சூறைக் காற்றானது தழைத்து வளர்ந்து அசைந்தாடும் மூங்கிலை ஒலியுண்டாகும்படி தாக்கி வெப்பமுறச் செய்தமையால், பக்கங்களில் எழுந்த தீயானது கொழுந்துவிட்டு எரிந்தது. வெடிப்பையுடைய குகைகளைக் கொண்ட மலைப் பக்கங்களில் பரவியது. மிக்க தீயால் மூங்கிலின் கணுக்கள் வெடித்தமையால் எழுந்த ஒலி கூட்டமான கலைமான்களைத் துரத்தியது என்பர்"[31] ஆலம்பேரிச்சாத்தனார். இதில் மூங்கில் கணு வெடிப்பது 'விடுநொடி' எனக் குறிக்கப்பட்டுள்ளது.

**வாகைமர ஒலி**

இது பாலைநிலத்தில் காணப்படும் ஒருவகை மரம். இதன் இலைகள் சிறியதாகவும், பூக்கள் பஞ்சு போல மென்மையாகவும், ஊசி போலக் கூர்மையாகவும் காணப்படும். இதன் நெற்றுக்கள் நீண்டு, அவரைக்காய் போலத் தோற்றமளிக்கும். இதன் இலைகளும், காய்ந்த நெற்றுக்களும் சலசலப்பைத் தரக்கூடியன. வாகை மரத்தில் உண்டாகும் ஓசையினை "ஆர்ப்ப" (குறுந்.369:1) "ஆர்த்தல்" (குறுந்.39:2) "உரைத்தல்" (குறுந்.7:4-5) "ஐயென ஒலித்தல்" (அகநா.151:9-10) என்னும் சொற்களால் புலவர்கள் புனைந்துள்ளனர். மேலும் பாலைநிலத்தின் அருவழிகளில் உள்ள வாகைமரத்தின் வெள்ளிய நெற்றுகளின் விதைகள் மேல்காற்று வீசும்போது சிலம்பின் உள்ளே இடப்பட்ட பரல் ஒலிப்பதைப் போல ஒலிப்பதை,

"அத்தவாகை அமலை வால் நெற்று
அரிஆர் சிலம்பின் அரிசி ஆர்ப்பக்
கோடை தூக்கும் கானம்" (குறுந்.369:1-3)

எனப் புனைவர் குடவாயிற் கீரத்தனார்.

## ஓமை 'ஒல்'லென ஒலித்தல்

ஓமை என்பதும் பாலை நில மரவகைகளில் ஒன்றாகும். இதன் காய்ந்த நெற்றுக்கள் மலையிலிருந்து விழும் அருவி போல ஒல்லென ஒலித்தலை"[32] நற்றிணை குறிப்பிடும்.

## கள்ளிக் காய் எழுப்பும் ஓசை

கள்ளிச் செடியிலுள்ள காய் கை நொடிப்பது போன்ற ஒலியுடன் வெடிப்பது,

"நொடி விடுவன்ன காய்விடு கள்ளி" (நற்.314:9)

"கள்ளிகாய் விடு கடுநொடி" (குறுந்.174:2)

என்று சுட்டப்பட்டுள்ளது.

## குமிலம் பூவின் ஓசை

உடைமரங்கள் ஊசலாடும் குழைகளைப் பெற்றாற்போல, குமிழ மரத்தின் பூக்கள் கல்லென்ற ஓசையுடன் அம்மரத்தின் மீது வீழ்தலை,

"ஊசல் ஒண்குழை உடை வாய்த்தன்ன
அத்தக் குமிழின் ஆய்இதழ் அலரி
கல் அறை வரிக்கும் புல்லென் குன்றம்" (நற்.286:1-3)

என்பர் துறைக்குறுமாவிற் பாலங்கொற்றனார்.

## நொச்சிப்பூவின் ஓசை

கொத்தாய் மலர்ந்த நொச்சிப்பூ அசைதலால் ஏற்படும் ஓசையை "குரல் நொச்சி பாடுஒர்க்கும்" (கலித்.46:12-13) என்றும் "பாடுநனி" (குறுந்.138:5) என்றும் புலவர்கள் குறித்துள்ளனர்.

## மாம்பழம் 'துடுமென' வீழ்தல்

மாமரத்தின் முற்றிய காய்கள் காம்பு இற்று நீரில் விழும்பொழுது 'துடும்' என ஓசையெழுப்புதலை ஓரம்போகியாரும்"[33] "பரணரும்"[34] குறிப்பிட்டுள்ளனர். கனமான பொருள் மேலிருந்து கீழே விழும்போது எழும் ஓசையைக் கூடப் புலவர்கள் நுட்பமாக புனைந்துள்ளமை அவர் தம் செவிப்புலன் உணர்வுக்குச் சிறந்த சான்றாகும்.

## பனம்பழம் 'பட்டென' வீழ்தல்

பனைமரத்தின் சாறுமிக்க முற்றிய பழம் மூக்கு இற்று பெரிய இதழையுடைய நெய்தல்மலர் வருந்துமாறு அள்ளுதற்கொத்த கரிய சேற்றிலே பட்டென வீழ்தலை,

"கானற் பெண்ணைத் தேனுடை அளிபழம்
வள்இதழ் நெய்தல் வருந்த மூக்கு இறுபு
அள்ளல் இருஞ்சேற்று ஆழப் பட்டென" (நற்.372:2-4)

என்பர் உலோச்சனார்.

## வானத்தில் ஏற்படும் ஒலிகள்

வானத்தில் மேகங்கள் ஒன்றையொன்று உராய்ந்துகொள்வதால் உண்டாகும் ஓசையினை 'இடி' என வழங்கியுள்ளனர். இவ்இடியைச் சங்கப் புலவர்கள் ஆர்க்குரல், உயர்க்குரல், இன்குரல், பல்குரல், அதிர்குரல், கடுங்குரல், சிலைக்குரல், கழற்குரல், பயிற்றுக்குரல், குரல்,

எழிலி, ஆர்ப்ப, ஆர்க்கலி, முழங்குதல், உமிழ்தல், உருமுதல், பாடுதல், சிலம்ப, கறங்கும், இரங்கும், கலி, அதிர்தல், கல்லென, இன்னிசை, உரறுதல், முரலும் என்பன போன்ற சொற்களால் குறிப்பிடுகின்றனர்.

## குரல்

குரல் என்பதற்கு ஒலியென்று பொருள்படும். மக்கள் பேசும் பேச்சின் ஒலியினையே குரல் என வழங்குவர். இயற்கை மீது ஈடுபாடு கொண்ட சங்கப் புலவர்களும் இயற்கையில் ஏற்படும் ஒலிகளுக்கு 'குரல்' எனப் பெயரிட்டு வழங்கியுள்ளனர். இடி ஆர்த்து ஒலிப்பதால் அதனை 'ஆர்க்குரல் எழிலி' (ஐங்.411:1, 455:2) என்றும், கடிய ஒலியை எழுப்பி முழங்குவதால், "கடுங்குரல்" (அகநா.174:7, 323:11, குறுந்.396:6) என்றும் இடியின் ஓசையோடு 'குரல்' ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது.

மேலும் "மேகங்கள் முரசினையுடைய மன்னர்களின் பல்வகைப் படைக்கலன்கள் முழங்குவது போல நடுங்க வைக்கும் இடிமுழக்குடன் மழை பொழிவதையும்,"[35] "பெரிய மலைகளின்மீது காற்றுடன் செறிந்து மழை இடித்ததால் உயர்ந்த ஓசையாகிய ஒலி மணமுடைய சாரலில் எதிரொலித்ததையும்"[36] கபிலர் புனைந்துரைத்துள்ளார். இதில் உயர்ந்த ஓசையை உடையதால் இடி உயர்க்குரல் ஒலி என வழங்கப்பட்டுள்ளது.

புலவர்கள் இடியின் பேரிரைச்சலை இனிமை பயக்கும் ஒலியாகக் கேட்டதை, 'இன்குரல் எழிலி' (நற்.153:4, 247:3) 'பல்குரல் எழிலி' (நற்.154:3) 'கழறுகுரல்' (குறுந்.258:2) என்னும் தொடர்கள் விளக்கும்.

## முழங்குதல்

இடி இடிக்கும் பொழுது ஏற்படும் ஒலியானது கேட்கும் இடந்தோறும் அதிர்வினைச் செய்வதால் முழங்கும் என்ற சொல்லால்

குறிக்கப்பட்டுள்ளது. இதனை, "முழங்கு எழிலி,"[37] "பேரிசை முழக்கம்,"[38] "விண் அதிர்பு முழங்கி,"[39] "விசும்பு அதிர முழங்கி,"[40] "தழங்கு குரல் ஏறொடு முழங்கி,"[41] "பாஅய் முழங்கி"[42] என்னும் தொடர்கள் விளக்கும்.

வானம் இடியை வெளிப்படுத்துவதை 'உமிழ்தல்'[43] என்ற சொல்லால் குறித்துள்ளனர். உமிழ்தல் என்பது வெளிப்படுத்தலையே குறிக்கும். கூதிர்காலத்தில் இனிய இசைமுழக்கம் போல இடி முழங்கிக் கொண்டே மழை பெய்வதை "இன்இசை உருமொடு கனைதுளிதலைஇ" (அகநா.58:1) என்றும், "இன் இசை உருமினும் முரலும்" (குறுந்.200:6) என்றும் இடியின் முழக்கம் இனிய இசை போன்று இருந்தமையைப் புலவர்கள் வெளிப்படுத்தியுள்ளனர்.

உரறுதல் என்பது வலிமையான இடி முழக்கமாகும். இதனை "புள்ளிகளைக்கொண்ட படத்தினையுடைய பாம்பினது தலை துண்டாகுமாறு வலிய இடியானது முழங்கி அச்சம் உண்டாக்கியதை"[44] ஆலூர்க் கிழார் மகனார் கண்ணனாரும், "யானையும் புலியும் அஞ்சுமாறு இடி முழங்கியதை"[45] நல்லூர் கிழாரும் புனைந்துள்ளனர். இவ்வாறு வானத்தில் உண்டாகும் இடி ஓசையினை பல்வகையான ஒலியுடன் ஒப்புமைப்படுத்தி புலவர்கள் புனைந்துள்ள பாங்கு சுட்டத்தக்கது.

### மழை பொழியும் ஓசை

கடலிலிருந்து ஆவியாகும் நீர் மேகமாகி, காற்றின் குளிர்ச்சியினால் மழையாகப் பொழிகின்றது. இதனை "கனைப்பெயல்"[46] "கலி மழை,"[47] "இமிழ்பெயல்,"[48] "பெருமழைக்குரல்"[49] எனப் புலவர்கள் சுட்டியுள்ளனர். மேகம் பகலிரவு என்று இல்லாது 'கல்' என்னும் ஒலியுடன்

பெருமழையைப் பொழிவதை,

"எல்லையும் இரவும் என்னாது, கல்லெனக்

கொண்டல் வான் மழை பொழிந்த" (அகநா.178:17-18)

என்னும் அடிகளில் பரணர் புனைவர். "பாணரது யாழிசை போன்று இனிய குரலுடன் மழை பொழிந்ததை"[50] இடைக்காடனார் குறிப்பிடுவர். இங்ஙனம் இயற்கையினால் உண்டாகும் ஒலிகளைப் புலவர்கள் நுண்ணிதின் ஆராய்ந்து, புனைந்துரைத்துள்ளனர்.

## விலங்கின ஓசைகள்

சங்க இலக்கியத்தில் அரிமா, புலி, யானை, கரடி, குதிரை, நாய், குரங்கு, மான், ஆ, காளை, எருமை, ஆமான் போன்ற விலங்குகள் எழுப்பும் ஓசைகள் புலவர்களால் சுட்டப்பட்டுள்ளன.

## அரிமாவின் ஓசை

அரிமா என்பது சிங்கத்தைச் சுட்டுவதாகும். இது அரிமா, விலங்குமா, வயமா எனச் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. சிங்கம் தமிழ்நாட்டின் விலங்கு அல்லாததால் அதிகம் சுட்டப்படவில்லை. எனினும் இதன் ஓசை அதிர்வுடன் விளங்குவதை,

"அரிமான் இடித்தன்ன அம்சிலை வல்வில்

புரிநாண் புடையின் புறங்காண்டல்" (கலித்.15:1-2)

"விலங்குமான் குரல் கேட்பின் வெருவுவை" (கலித்.13:17)

என்னும் அடிகள் விளக்கும். இதில் அரிமாவின் ஓசை வில்லிருந்து எழும் நாண் ஓசையுடன் அச்சந்தரக்கூடியதாகப் புலவர்களால் புனைந்துரைக்கப் பட்டுள்ளது.

## புலியினால் உண்டாகும் ஒலிகள்

சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ள விலங்குகளில் அதிகம் இடம்பெறுவது புலியும் யானையுமாகும். புலியின் வலிமையும் வேட்டையாடும் திறமும் இலக்கியத்தில் அதிக இடங்களில் சுட்டப்பட்டுள்ளது. புலி எழுப்பும் ஒலிகளை சூழலுக்குத்தக குழுமுதல், உரறுதல், முழங்குதல், சிலம்புதல், குரல் என வகைப்படுத்தியுள்ளனர். இதனை, "புலிகளின் ஒலிகள் பலவகைப்பட்டன. வியப்பு மேலிடும்போது சிறிய ஒலியை எழுப்புகின்றன. கோபம் ஏற்படும்போது, இரையைத் தேடும் போதும் அடித்தொண்டையிலிருந்து ஒலிக்கும்"[51] என்பர் பி.சி.கணேசன்.

## குழுமுதல்

புலியின் இயல்பான ஒலியைக் குழுமுதல் எனப் புலவர்கள் வழங்கியுள்ளனர். குழுமுதல் என்பதற்கு முழங்குதல் என்று பொருள் உரைக்கப்படுகிறது. ஐங்குறுநூற்றில் தான் கொள்ளக் கருதிய களிற்றியானை தப்பியமையால் சினம்மிக்கு எழுந்த புலி, மழை பொழிவதற்கு எழுந்த முகில் போல முழங்கியதை,

"களிறு கோட் பிழைத்த கதம் சிறந்து எழுபுலி
எழுதரு மழையின் குழுமும்" (ஐங்.218:3-4)

என்ற அடிகள் விளக்கும்.

## உரறும்

புலியின் கடுங்கோபத்தினால் வெளிப்படும் ஓசையை உரறுதல்[53] எனப் புலவர்கள் புனைந்துள்ளனர். உயர்ந்த மலைச்சிகரம் பொருந்திய மலையின் பிளப்புகள் எதிரொலிக்குமாறு கரிய புலி, களிற்றியானையைக் கொன்று முழங்குதலை,

"பெருங் கல் விடரகம் சிலம்ப இரும் புலி

களிறு தொலைத்து உரறும் கடி இடி" (நற்.344:9-10)

என்று புனைவர் இளவேட்டனார். மேலும் "புலி, யானையைத் தாக்கும் பொழுதும் யானையால் தாக்கப்பட்ட நிலையிலும் அவை எழுப்பும் ஓசையை 'உரற' என்னும் சொல்லால்"[53] குறித்துள்ளனர்.

## முழங்குதல்

புலியின் முழக்கத்தினை "கடல் அலைகள் ஒன்றன்பின் ஒன்றாய் எழுந்து ஆராவரிப்பதைப்போல, உயிர்களைக் கொள்ளும் புலிகள் முழங்கியது"[54] என்பர் அள்ளூர் நன்முல்லையார். இதில் புலியின் உர்...ர்...ர்...உர் என்ற ஓசையையே குறிப்பிட்டுச் சுட்டியுள்ளார்.

## சிலம்புதல்

சிலம்ப என்பது எதிரொலித்தல் என்னும் பொருள்படும். புலியானது களிற்றியானையைக் கொன்று, வெற்றிக்களிப்புடன் பக்கமலைகள் எதிரொலிக்குமாறு முழங்குதலை"[55] நக்கீரர் புனைவர். இதில் புலியின் ஓசை 'சிலம்ப' எனச் சுட்டப்பட்டுள்ளது.

## கடையலங்குரல்

புலியின் குரல் தயிர்கடையும் மத்தின் ஒலிபோல இருப்பதை,

"கடையல்அம் குரல வாள்வரி உழுவை" (அகநா.277:5)

எனும் அடிகள் விளக்கும். இதில் தயிர்கடையும் மத்தின் ஒலி புலியின் ஒலியுடன் ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது. "வேட்டையாளர் ஆராய்ச்சிப்படி இத்தகைய ஒலியை எழுப்பும் புலி வரிப்புலியன்று, பெருஞ்சிறுத்தைப்புலியும், சிறிய சிறுத்தைப்புலியுமே இத்தகைய குரலெழுப்புமெனக் கூறுவர்."[56]

## யானை எழுப்பும் ஓசைகள்

நிலவாழ் விலங்குகளில் மிகப்பெரியது யானையாகும். இதன் ஓசையினைப் பிளிறல், இயம்புதல், உரறுதல், முழங்குதல், பூசல், சிலைத்தல், கதறல், நரலும், உயிர்க்கும், பயிற்குரல், புலம்ப, இசைத்தல், கம்பலை, விளித்தல் எனப் பல்வேறு சொற்களால் புலவர்கள் புனைந்துள்ளனர்.

### பிளிறல்

யானை எழுப்பும் ஒலியினைப் 'பிளிறல்' என்னும் பொதுச்சொல்லால் சுட்டுவர். களிறு என்ற சொல்லே "பிளிறு பீள்... பீள்... பீள் வீள்+று"[57] என அதன் ஒலியின் அடிப்படையில் தோன்றியதென்பர். கரும்பின் எந்திரம் போலக் களிறு பிளிறுதலை "கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும்" (ஐங்.55:1) என்பர் ஓரம்போகியார்.

### இயம்பும்

யானை, கானவனின் வில் ஒலிக்கு அஞ்சி முழங்குதலை "இயம்பும்" (நற்.228:8) என்றும், யானை பெருமுழக்கத்தினைச் செய்வதை உரறும்,[58] முழங்கும்,[59] சிலைக்கும்[60] என்றும் சங்கப் பாக்கள் புனைந்துரைக்கின்றன.

### பூசல்

யானை அச்சத்தால் பெருங்குரலெடுத்து இயம்புவதை பூசல் என்ற சொல்லால் குறித்துள்ளனர். ஆண்யானையைப் புலிதாக்க, அதனைக்கண்டு அலறிக்கொண்டு ஓடும் பிடியானையை[61] பாலை பாடிய பெருங்கடுங்கோவும், "வலிமை மிக்க ஆண்யானை, மலைப் பாம்பின் வாயில் அகப்பட்டதைக் கண்ட பெண்யானை பேரொலி உண்டாகப் பிளிறிக்கொண்டு ஓடுதலை"[62] மாமூலனாரும், "புலியால்

தாக்கப்பட்டு, புண் கூர்ந்த யானையின் மேல் கானவர்கள் அம்பினை எறிவதால் பட்ட வேதனையில், களிறு பெருங்குரலெடுத்து பூசலிடுவதை"[63] கபிலரும் புனைந்துரைக்கின்றனர்.

## கதறல்

தினைப்புனங் காக்கும் சேணோன் யானைகளை விரட்டக் கவண் கல்லை வீசியெறிந்தான். அக்கல்லின் கடிய ஓசையைக் கேட்டு மறப்புலி முழங்கியது. யானைகள் கதறியது. இதனை,

"வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லென
மறப்புலி உரற, வாரணம் கதற" (அகநா.329:15-16)

என மோசிகீரனார் புனைவர். இதில் 'கதறல்' என்பது யானையின் அச்சத்தால் உண்டான ஓசையைக் குறிப்பதாகும்.

## நரலுதல்

நரலுதல் என்பதற்கு "ஒலித்தல், கத்துதல்"[64] என்ற பொருட்களுண்டு. பெரிய ஆண் புலியால் தாக்கப்பெற்றுப் புண்மிகுந்த ஆண்யானை, பெண்யானையால் தழுவப்படும் பொழுது, மூங்கிலாற் செய்யப்பட்ட தூம்புபோல நரலுதலை[65] இம்மென்கீரனாரும், நீர் வேட்கையால் துன்பமுற்ற களிற்றுக் கூட்டங்கள், சிலந்தியின் கூட்டினை மேகமென எண்ணி, பற்றுதற்கு ஒருங்குகூடி உயர்த்திய நெடிய கைகள், கோடியரின் தூம்புபோல உயிர்த்தலை"[66] பாலை பாடிய பெருங்கடுங்கோவும் சிறப்புறப் புனைந்துள்ளனர்.

## புலம்புதல்

புலம்புதல் என்பது துன்பத்தில் ஏற்படும் ஒலியைச் சுட்டும். புலியால் தாக்கப்பட்ட ஆண் யானை பிளிறுவதை, "இரும்புலி, புகர்முக

வேழம் புலம்பத்தாக்கி (நற்.158:4-5) என்றும், களிறு பிளிற்றிய குரல் கேட்ட பிடி, களிற்றுக்கு ஏதோ துன்பம் என்று எண்ணிப் புலம்புவதை,

"ஓங்கு மருப்பு யானை

.....................................

.....................................

என்றூழ் விடரகம் சிலம்ப

புன்தலை மடப்பிடி புலம்பிய குரலே" (நற்.318:5-9)

என்றும் சங்கப்பாடல்கள் சுட்டியுள்ளன.

மனிதர்கள் துன்பப்படும்பொழுது புலம்புவதைப் புலவர்கள் யானைக்கு ஏற்றி உரைத்திருப்பது சுட்டத்தக்கது. இப்புனைவால் துன்பம் அனைத்துயிர்க்கும் பொதுவானது. அத்துன்பத்தில் எழும் ஓசையும் பொதுவானது என்னும் அரிய உண்மை வெளிப்படுகின்றது.

**கம்பலை**

கம்பலை என்பது விரைந்து ஒலிக்கக்கூடிய ஆரவார ஓசையாகும். மெல்லிய தலையையுடைய இளைய பெண்யானை குழியில் வீழ்ந்ததென, ஆண்யானை பிளிறிக் குரல் எழுப்பியது. அம்முழக்கத்தால் உண்டான ஆரவாரத்தை,

"கயந்தலை மடப்பிடி பயம்பில் பட்டென

களிறு விளிப் படுத்த கம்பலை வெரீஇ

ஒய்யென எழுந்த செவ்வாய்க் குழவி" (அகநா.165:1-3)

என்னும் அடிகள் விளக்கும். இதில் 'கம்பலை' யானையின் ஆரவாரத்தைக் குறிக்கப் பயன்பட்டுள்ளது.

## கரடியின் ஓசை

கரடியின் குரல் 'ஓசை' என வழங்கப்பட்டுள்ளது. பெரிய மலையினையுடைய சிறிய ஊரில், கொல்லும் தொழிலையுடைய ஆண் கரடியின் ஓசையை மக்கள் செவிகொடுத்துக் கேட்டலை "கோள்வல் ஏற்றை ஓசை ஓர்மார்" (அகநா.171:9) என்று கல்லாடனார் புனைவர். இதில் ஓசை என்னும் பொதுச்சொல்லால் கரடியின் ஓசை குறிக்கப்பட்டுள்ளது.

## குதிரை எழுப்பும் ஒலிகள்

குதிரை கனைத்தலைத் தெவிட்டல் (அகநா.360:12) என்ற சொல்லால் குறிப்பிடுவர். தெவிட்ட என்பது தேரை போல விட்டுவிட்டு ஒலிப்பதாகும். குதிரையின் கனைத்தலும் விட்டுவிட்டு ஒலிப்பதாலே தெவிட்ட என வழங்கப்பட்டுள்ளது. மெல்லிய நடையுடன் ஒலி எழுப்பிச் செல்லும் குதிரையை 'கலிமட மாவினர்' (பரி.6:33) என்றும், 'ஒல்லென விரியுளைக் கலிமான்' (கலித்.75:15) என்றும் உரைக்கப்பட்டுள்ளது. இதில் தெவிட்ட, கலி, ஒல் என்னும் சொற்கள் குதிரை வெளிப்படுத்தும் ஓசையைக் குறிக்கப் புலவர்களால் கையாளப்பட்டுள்ளது.

## குரங்கின் ஒலி

வேங்கை மரத்தின் வளர்ந்தெழுந்த கிளைகளில் அங்கும் இங்கும் தாவித்திரியும் மந்திக் கூட்டத்தைக் கூப்பிடும் ஆண் குரங்கின் ஒலியினை,

"நாட்பூ வேங்கை நறுமலர் உதிர
மேக்கு எழு பெருஞ்சினை ஏறி கணக்கலை
கூப்பிடுஉ உகளும் குன்றகச் சிறுநெறி" (அகநா.205:20-22)

என்பர் நக்கீரர். இதில் கூப்பிடுஉ என்பது அழைக்கும் குரலைக் குறிப்பிடும். 'பயிரும்' (அகநா.352:7) என்பதும் கூப்பிடு ஒலியையே சுட்டும். மிளகுக்கொடியைத் தின்ற ஆண்குரங்கு அதன் உரப்புத்தன்மையால்

வெறுத்து முழங்குவதை "அதிர்குரல்" (அகநா.182:14) என்னும் சொல்லால் கபிலர் சுட்டுவர்.

### நாயின் ஒலி

வீட்டு விலங்குகளுள் ஒன்று நாய், இது வீட்டினுள் வேற்று மனிதர்கள் நுழைய முற்பட்டால் ஒலி எழுப்பும் தன்மையையுடையது. இதன் ஒலி குரைத்தல் ஆகும். இத்தகு நாயின் ஒலியினை அம்மூவனார் "ஒலி வேற்றுமை அறியும் மனையில் உள்ள நாய், உப்புவிற்றுச் செல்லும் உமணப் பெண்ணின் குரலை வேற்றுக்குரல் எனக் கருதிக் குரைத்ததை"[67] புனைந்துரைப்பர். மேலும் "ஊரைக் காவல் செய்யும் காவலர்கள் உறங்கினாலும், கூர்மையான பற்களையுடைய நாய் குரைத்துக்கொண்டே ஊரினைக் காவல்செய்யும் செயலை"[68] பரணர் சுட்டுவர்.

### மானின் ஒலி

மான்களில் ஆண்மான் கலை என்றும், பெண்மான் பிணை என்றும் அழைக்கப்படும். புலியால் கொல்லப்படும் துன்பத்திலிருந்து தப்பிய கவர்த்த கொம்புகளையுடைய முதிய கலைமான் தன் காதலியான பிணைமானை நோக்கி, ஆண்மை நிறைந்த குரலால் அழைத்தலை,

"புலிக்கோட் பிழைத்த கவைக் கோட்டு முதுகலை
மான்பிணை அணைதர ஆண்குரல் விளிக்கும்" (ஐங்.373:2-3)

எனப் புனைவர் ஓதலாந்தையார். கயமனாரும் "காம விருப்பங் கொண்ட கலைமான் ஒன்று, பாலை நிலத்தில் உதிர்ந்து கிடக்கும் இருப்பை மரத்தின் வெண்ணிறப் பூக்களை உண்ணாமல் தொலைவிலுள்ள அழகிய தன் பெண்மானை உண்ணுதற்கு தன்குரல் வெளிப்பட்டுத் தோன்றுமாறு அழைத்தலைக் குறிப்பிடுவர்."[69]

"செந்நாயைக் கண்டு பயந்த மானினங்கள் காற்றில் அகப்பட்ட பூளைப் பூவைப்போன்று 'ஒய்' என்று ஒலி எழுப்பிக்கொண்டு ஓடியதை"[70] கல்லாடனார் புனைவர். கலைமான் ஒன்று, வருத்த மிகுதியால் தன் பிணையை அழைத்த ஒலி, மனித ஒலி போன்றிருப்பதை,

"புலம்பு வழிப்பட்ட உலமரல் உள்ளமொடு
மேய்பிணைப் பயிரும் மெலிந்து அழிபடர்குரல்
அருஞ்சுரம் செல்லுநர் ஆள்செத்து ஓர்க்கும்" (அகநா.395:10-12)

என எயினந்தை மகனார் இளங்கீரனார் புனைவர். இங்ஙனம் கலைமான் காதல் மிகுதியால் எழுப்பும் ஒலியினை 'ஆண்குரல் விளிக்கும்' என்றும், அச்சஉணர்வினால் வெளிப்படுத்தும் ஒலியினை 'ஒய்'யென அலறும் என்றும், துணையைப் பிரிந்து அழைக்கும் வருத்த மிக்க ஒலியினைப் பயிர்தல் என்றும் சங்கப் புலவர்கள் நுட்பமாகப் புனைந்துள்ளனர்.

## ஆவின் ஒலி

'ஆ' தாய்மையைப் போற்றும் ஓர் அரிய விலங்காகும். அறுகம்புல்லாகிய உணவினை அருந்திய, வலிய நடையினையுடைய பசுக்கள் தம் கன்றுகளை நினைத்து அழைக்கும் ஓசை "கன்று பயிர்க்குரல" (அகநா.14:11, 64:14, 54:8) என அகநானூற்றில் சுட்டப்பட்டுள்ளது.

## எருமையின் ஒலி

எருமை உடலின் வெப்பம் நீங்க குளத்தில் துடுமெனப் பாய்ந்ததை,

"தடமருப்பு எருமைப் பிணர்ச்சுவல் இரும்போத்து
மடநடை நாரைப் பல் இனம் இரிய
நெடுநீர் தண்கயம் துடுமெனப் பாய்ந்து" (நற்.330:1-3)

என்றுரைப்பர் ஆலங்குடி வங்கனார். இதில் எருமை குளத்தில் உள்ள நாரைகள் விலகுமாறு ஆழமான நீரில் 'துடும்' என்ற ஒலியுடன் பாய்ந்த செய்தியும், "சேற்றில் நிற்பதை வெறுத்த சிவந்த கண்களையுடைய எருமை இருள் செறிந்த நடு இரவில் 'ஐ' என்ற ஒலியுடன் சேற்றைவிட்டு வெளிவரக் கரைந்ததும்"[71] புனையப்பட்டுள்ளது.

## எருதின் ஒலி

மாட்டினத்தில் ஆண் ஏறு, எருது, காளை என அழைக்கப்படுகிறது. இதன் ஓசை, "உருமின் குரல்போல அதிர்தல்"[72] கலித்தொகையில் சுட்டப்பட்டுள்ளது. இதில் காளைகள் கூடலுக்குப் பசுக்களிடம் குரல் எழுப்பிச் சேர்ந்து நிற்கும் காட்சி அழகுறச் சுட்டப்பட்டுள்ளது. துணைதேடும் விலங்கின் ஒலியைக் கூடப்புலவர்கள் புனைந்திருப்பது அவர்தம் செவிப்புலன் உணர்வுக்குச் சிறந்த சான்றாகும்.

## ஆமானின் ஒலி

பசுபோன்ற ஒரு காட்டு விலங்கு ஆமாவாகும். ஆ-பசு, மா-விலங்கு இதனை இளம்பூரணர் உவமவியலில் "ஆபோலும் ஆமா என்றக்கால் ஆமா கண்டறியாதான் காட்டுட் சென்றவழி, அதனைக் கண்டால் ஆபோலும் என்னும் உவமையே பற்றி ஆமா இதுவென்று அறியலாம்"[73] என்றுரைப்பதன் மூலம் அறிய இயலும். மடப்பம் பொருந்திய கண்களையுடைய பெண் ஆமான் அலற, ஆண் ஆமானை புலி அடித்துக் கொன்றதை,

"இருள்முகைச் சிலம்பின் இரை வேட்டெழுந்த
பனைமருள் எருத்தின் பல்வரி இரும்போத்து
மடக்கண் ஆமான் மாதிரத்து அலற

தடக்கோட்டு ஆமான் அண்ணல் ஏஎறு

நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி" (அகநா.238:8)

என்பதில் பெண் ஆமானின் அலறல் ஒலி புனையப்பட்டுள்ளது.

## நரியின் ஒலி

விலங்குகளில் தந்திரம் மிக்கது நரியாகும். நரி இறந்த உயிரினங்களை விரும்பி உண்ணும். "பாலையின் சுரவழியில் இறந்துகிடக்கும் மனிதர்களின் பிணங்களைத் தின்ற நரிகள் கள்ளிச் செடியின் நிழலிலே ஊளையிட்டுக் கொண்டு தங்கியிருப்பதை"[74] பாலைபாடிய பெருங்கடுங்கோ புனைவர். இங்கு நரியின் ஒலி 'கதறுபு வதிய' எனச் சுட்டடப்பட்டுள்ளது.

## வருடையின் ஒலி

வருடை என்பது ஆட்டினத்தைச் சேர்ந்த மலைவாழ் விலங்காகும். மழைவாழ் வருடைகளின் இளைய கடாக்களின் ஒலியைக்கேட்டு மயில்கள் ஆடியதை,

"…. வரைவாழ் வருடைக்

கோடுமுற்று இளந்தகர்ப் பாடுவிறந்துஅயல

ஆடுகள வயிரின் இனிய ஆலி" (அகநா.378:6-8)

என்பர் காவட்டனார். இங்கு வருடையின் ஒலி ஊது கொம்பின் ஒலிபோல ஒலித்தமை சுட்டடப்பட்டுள்ளது.

## தேரையின் ஒலி

தேரை இருவாழ் உயிரினமாகும். இது நீரிலும் நிலத்திலும் வாழக்கூடியது. இதன் ஒலியினைத் தெவிட்ட, கறங்க எனப் புலவர்கள் குறித்துள்ளனர். "முல்லை நிலத்து நீர்நிறைந்த ஆழமான பள்ளங்களில்

பிளந்த வாயினையுடைய தேரைகள் வாத்தியங்கள் பல ஒன்றுசேர்ந்து ஒலிப்பது போல ஒலித்ததை"[75] பொதும்பில் புல்லாளங் கண்ணியார் நன்கு புனைவர்.

## பல்லியின் ஒலி

பல்லி ஊர்வன வகையைச் சார்ந்ததாகும். இதன் ஒலியைச் சங்க மக்கள் சகுனமாகக் கருதுவதை,

"ஓங்குமிசை, உயர்புகழ் நல்இல் ஒண்சுவர்ப் பொருந்தி
நயவரு குரல பல்லி
நள்ளென் யாமத்து உள்ளுதொறும் படுமே" (நற்.333:9-12)

என்றுரைப்பர் கள்ளிக்குடிப் பூதம் புல்லனார். இதில் பல்லியின் குரல் 'படு' என வழங்கப்பட்டுள்ளது. பல்லி 'டட், டட்' என ஒலிப்பதை,

"பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென" (நற்.98:6)

என்றும், "ஆண் பல்லி தன் துணையாகிய பெண் பல்லியை அழைக்கும் ஒலியானது இரும்பாலான அம்பைக் கூர் செய்வோர் நகத்தால் அதன் நுனியை நெருடுவது போல் உள்ளதாகவும்"[76] புலவர்கள் புனைந்துரைக்கின்றனர். இதில் பல்லியின் ஓசையை அம்பின் கூர் ஓசையோடு புனைந்துரைப்பது புலவரின் செவி ஓசை நுட்பத்தை விளக்கும். செவியின் கூர்த்த திறன் இப்புனைவில் வெளிப்பட்டுள்ளது.

## பறவைகளின் ஒலிப் புனைவு

சங்கப் புலவர்கள் அன்றில், ஆந்தை, குடிஞை, குரால், கூகை, கணந்துள், கம்புள், கானங்கோழி, மனைக்கோழி, சேவல், கிளி, கழுகு, குருகு, குருவி, குயில், குறும்பூழ், சிள்வீடு, வானம்பாடி, புறா, மயில், வங்கா, வண்டு, சுரும்பு, தும்பி, தேனீ, மிஞிறு என்பன போன்ற பறவைகளின் ஒலிகளைப் புனைந்துள்ளனர்.

## அன்றில்

அன்றில் நெய்தல் நிலப்பறவையாகும். இது கடற்கரையோர பனைமரங்களில் வாழக்கூடியது. இரவில் பனைமரத்தில் தனித்திருக்கும் அன்றில்பேடை தன் துணைக்கு ஏங்கித் தவித்து குரலிடுவதை,

"முழவுமுதல் அரைய தடவுநிலைப் பெண்ணைக்

கொழுமடல் இழைத்த சிறுகோற் குடம்பைக்

கருங்கால் அன்றிற் காமர் கடுஞ்சூல்

வயவுப்பெடை அகவும் பானாட் கங்குல்" (குறுந்.301:1-4)

எனக் குறிப்பிடுவர் குன்றியனார். இதில் அகவுதல் எனும் கூப்பிடு ஒலி சுட்டப்பட்டுள்ளது. மயிலுக்குரிய இவ்வோசையை அன்றிலுக்குப் புலவர் ஏற்றி உரைத்துள்ளமை சுட்டத்தக்கது. மேலும், "சிவந்த தலையையுடைய ஆண் அன்றில், இறா மீனைப் போன்ற வளைந்த அலகினையுடைய தன் பெண் அன்றிலுடன், தடாமரத்தின் உயர்ந்த கிளையின்கண் உள்ள கூட்டினிடத்தேயிருந்து ஒலிக்கின்ற ஒலியினை நரலும்"[77] என்றும், "பெடையைப் புணர்கின்ற அன்றிலின் வருத்தம் தரும் குரலை உயவுக்குரல்"[78] என்றும் பாடப்பெற்றுள்ளது.

இவ்வாறு அன்றிலின் இயல்பான ஒலி அகவ என்றும், வருத்தம் மிக்க ஒலி 'நரலும்,' 'உயவுக்குரல்' என்றும் புலவர்களால் புனையப்பட்டுள்ளன.

## ஆந்தை

ஆந்தையினப் பறவைகளாக கூகை, குரால், குடிஞை, ஊமன், ஆண்டலை போன்ற பறவைகள் சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளன. ஆந்தை என்பது அவ்வினப் பொதுப்பெயராகும்.

**கூகை**

"கூகை இடிந்த கட்டிடங்களிலும், நெற்களஞ்சியங்களிலும் காணப்படும் ஒருவகை ஆந்தையாகும். இது மஞ்சளும், வெண்மையும் கலந்த நிறத்தையுடையது. இது வட்டவடிவமான தலையும், குரங்கு முகம் போன்ற தட்டையான முகமும் உடையது. இருட்டில் எலி முதலியவற்றை வேட்டையாடி உண்ணக்கூடியது. இது மக்கள் வாழும் பகுதியில் காணப்படும்"[79] என்பர் பி.எல்.சாமி. மனையிலுள்ள எலிகளைப் பிடித்து இரையாகக் கொள்ளும் கூகைச் சேவல், பேய்கள் திரியும் நள்ளிரவில் அழிவு உண்டாகும் படியாகக் குழறுவதை,

"திங்கள் கல்சேர்பு கனை இருள்மடியின்

இல்எலி வல்சி வல்வாய்க் கூகை

கழுது வழங்கு யாமத்து அழிதகக் குழறும்" (அகநா.122:12-14)

என்றுரைப்பர் பரணர். கூகையின் தெளிவில்லா ஓசை குழறுதல்[79] எனப் பிற இடங்களிலும் புனையப்பட்டுள்ளது.

**குடிஞை**

"குடிஞையைப் பேராந்தை என்று சங்க இலக்கியங்கள் சுட்டும். இப்பேராந்தையின் குரலோசை 'பூ-பூஊ' (BuBu) என்று எதிரொலி ஒலிக்குமாறு விட்டுவிட்டு ஒலிக்கும் என்பர். இப்பேராந்தையின் குரலோசை பெரிதாக இல்லையென்றாலும் வெகு தொலைவு ஊடுருவி மனிதர் காதில் மென்மையாக விழும் தன்மையது என்று பறவை நூலார் கூறுவர்"[80] என்பர் பி.எல்.சாமி.

குடிஞை "உலக்கையை உரலில் இடிக்கும் ஓசையோடு மாறிமாறி ஒலிப்பதை"[81] கல்லாடனாரும், "குடிஞை வெகுண்டு எழுப்பும் குரலோசை மலையின்மேல் உருளும் கல்லின் ஓசைபோல இரட்டுவதை"[82]

மதுரைக்காஞ்சிப் புலவரும், "பொன் செய்கின்ற கொல்லன் ஊதுகுழல் கொண்டு தணலை ஊதுவது போன்று பேராந்தையின் குரலோசை இருப்பதை"[83] ஔவையாரும் புனைந்துரைத்துள்ளனர். குடிஞை மென்குரலில் மெதுவாக ஒலிப்பதை,

"திரிவயின் தெவுட்டும் சேண்புலக் குடிஞைப்

பைதல் மென்குரல் ஐதுவந்து இசைத்தொரும்" (அகநா.265:9)

என்பர் மருதனிள நாகனார்.

## குராஅல்

குரால் ஆந்தையினங்களுள் ஒன்று. இப்பறவை 'வூட் வூட்' என்று இரவு முழுவதும் விடாது ஒலி எழுப்பும். இதனை,

"ஓராஅ உருள்துடி குடுமிக் குரால்" (அகநா.265:19)

என்பர் மாமூலனார். இதில் குரால் தொடர்ந்து ஒலி எழுப்பும் தன்மை துடியிசை போல இருந்தமையைப் புலவர் புனைவர். கூகையோடு குராலும் இணைந்து கத்தியதை, "குராஅல் கூகையும் இராஅ இசைக்கும்" (நற்.218:8) என்றும்,

"கூகைச் சேவல் குராலோடு ஏறி

ஆர் இருஞ் சதுக்கத்து அஞ்சுவரக் குழறும்" (நற்.319:4-5)

என்றும் குறிப்பிடுவர். இதில் குராலின் ஒலி 'இசை' என்றும் 'குழறு' என்றும் சுட்டடப்பட்டுள்ளது.

## கணந்துள் ஒலி

இது தற்காலத்தில் ஆள்காட்டிக் குருவி என வழங்கப்படுகிறது. சங்க இலக்கியத்தில் 'வேடனின் வலையைக் கண்ட நெடிய காலையுடைய கணந்துள் அச்சமுற்றுக் கத்தும். இவ்வாறு தனித்துக் குரலெழுப்பும் இப்பறவையின் தெளிந்த ஓசை, யாழ் இசை போன்று ஒலிப்பதை,

"பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்கால் கணந்துள்அம் புலம்புகொள்தெள்விளி
சுரம்செல் கோடியர் கதுமென இசைக்கும்
நரம்பொடு கொள்ளும் அத்தத்து" (நற்.212:1-4)

என்று குறிப்பிடுவர் குடவாயிற் கீரத்தனார். இதில் கணந்துள்ளின் தெளிவான ஒலி 'தெள் விளி' என்றும், யாழ் ஒலியுடனும் ஒப்புமைப்படுத்தப் பட்டுள்ளது. கணந்துள் ஆளை அறிவித்துக்காட்ட ஒலி எழுப்புவதை,

"நெடுங்காற் கணந்துள் ஆள் அறிவுறீஇ
ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்
மலையுடைக் கானம்" (குறுந்.350:5-7)

என ஆலத்தூர்கிழார் புனைவர். இதில் பாலைநிலத்தில் நெடிய கால்களையுடைய கணந்துள் ஆறலைக் கள்வர் இருப்பை தம் குரலால் அறிவுறுத்தி, வழியில் புதியராய்ச் செல்பவர்களின் கூட்டத்தை அவ்வழியிலிருந்து நீங்குதலைச் செய்யும் விதம் சுட்டப்பட்டுள்ளது. "கணந்துள் டிட்டிட்... டிரியோ... டிட்டிட், டிரியோ" என ஒலி எழுப்பும்.

பறவைகளின் ஓசையை மட்டும் குறிக்காமல் அதன் அரிய செயலோடு தொடர்புபடுத்தி, அவ்வோசை மனிதர்கட்குத் துணைநிற்றலையும் புலவர்கள் குறித்துள்ளமை அவர்தம் செவிப்புலன் உணர்விற்குச் சிறந்த சான்றாகும்.

## கம்புள்

"கம்புள் நீர்நிலைகளில் வாழக்கூடியது. இதைக் கானாங்கோழி என்றும் அழைப்பர். கம் என்றால் நீர். நீர்ப்புள் என்ற பொருளில் கம்புள் என்று அழைத்திருக்கலாம்"[84] என்பர் பி.எல்.சாமி. வயல் வெளிகளில்

வாழும் கம்புள் சேவல் இடைவிடாது ஒலி எழுப்புகின்ற பெடையைத் தன்பால் கூவி அழைப்பதை,

"பழனக் கம்புள் பயிர்ப்பெடை அகவும்" (ஐங்.60:1)

என ஓரம்போகியார் புனைவர். மேலும் "வெண்மையான நெற்றியையுடைய கம்புள் கோழி அரித்த குரல் கொண்ட பெட்டையுடன் ஊர்ப் பொதுநிலத்தே தன் இனத்தோடு கூடி ஆராவாரம் மிக்க ஒலியினை எழுப்பியதையும்"[85] சுட்டுவர். "கம்புளின் ஒலி வாத்தியக்காரன் இசை போல இருந்தமையைப்"[86] பரணர் புனைவர். இங்ஙனம் கம்புள் தன் துணையை அழைப்பதை 'அகவ' என்றும் இனத்தாரோடு ஆரவாரம் செய்வதை 'ஆலும்' என்னும் சொல்லாலும் புலவர் புனைந்துள்ளனர்.

## காக்கையின் ஒலி

காக்கை கரியநிறமுடையது. காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்பது சங்க காலம் தொட்டு இன்றுவரை பின்பற்றப்படும் நம்பிக்கையாகும். இதனை,

"விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே" (குறுந்.210:6)

என்பர் காக்கைப் பாடினியார் நச்செள்ளையார். தலைவனுடன் உடன்போக்கில் சென்ற தலைவி மீண்டுவரும் வண்ணம் காக்கை கரைவதை,

"அஞ்சிலோதியை வரக்கரைந் தீமே" (ஐங்.391:6)

என ஓதலாந்தையார் புனைவர். இதில் காக்கையின் இயல்பான ஒலியை 'கரைதல்' என்று பாடல்கள் சுட்டுகின்றன. நன்கு உணவை உண்ட காக்கையின் பசி நீங்கியதால், அதன் ஒலி இயல்பான ஒலியிலிருந்து வேறுபட்டு இருந்தமையை,

"வசிபடு புண்ணின் குருதி மாந்தி

ஒற்றுச்செல் மாக்களின் ஒடுங்கிய குரல்" (அகநா.313:14-15)

என்பர் பாலைபாடிய பெருங்கடுங்கோ. இதில் 'ஒடுங்கிய குரல்' என்பது வேறுபட்டு ஒலித்த காக்கையின் ஒலியாகும். மேலும் காக்கையின் ஒலி "அகவ"[87] என்றும் புனையப்பட்டுள்ளது.

## மனைக்கோழியின் ஒலி

மனையகத்து உறையும் குறுகிய காலையுடைய பெட்டைக்கோழி, காட்டுப்பூனையான வெருகிற்கு அஞ்சி, தன் இளங்குஞ்சுகளை அழைப்பதை,

"மனையுறை கோழிக் குறுங்காற்பேடை

வேலி வெருகினம் மாலை உற்றெனப்

புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇய

பைதற் பிள்ளைக் கிளைப் பயிர்ந் தாங்கு" (குறுந்.139:1-4)

என ஒக்கூர் மாசாத்தியார் புனைவர். இதில் 'பயிர்' என்ற அழைப்பொலி சுட்டப்பட்டுள்ளது.

## மனைச்சேவலின் ஒலி

மனைச்சேவலை வாரணம் எனச் சங்கப் புலவர்கள் சுட்டுவர். இதன் ஒலி கூவுதல் எனப்படும். நெற்றியில் சிவந்த கொண்டையுடைய சேவலின் குரல் ஒலி,

"குடுமிக் கோழி நெடுநகர் இயம்பும்" (குறுந்.234:4)

"குடுமி நெற்றி நெடுமரச் சேவல்

தலைக்குரல் விடியற் போகி" (அகநா.87:5-6)

"குக்கூ என்றது கோழி" (குறுந்.157:1)

என்று புனையப்பட்டுள்ளது. இதில் சேவலின் ஒலியை இயம்பும், தலைக்குரல், கூவும் எனப் புலவர்களால் எடுத்தியம்பப்பட்டுள்ளன.

### குருகின் ஒலி

"குருகு என்ற பெயர் இப்பறவையின் தனித்தன்மை பொருந்திய அலகின் காரணமாக வந்தது"[88] என்பர் பி.எல்.சாமி. வெண்மையான நிறமுடைய குருகின் குஞ்சுகள் அழைக்கும் ஒலி இனிமையாக இருந்ததை,

"வெண்தலைக் குருகின் மென்பறை விளிக்குரல்
நீள்வயல் நண்ணி இமிழும்" (ஐங்.86:1-2)

என்பர் ஓரம்போகியார். இதில் 'விளிக்குரல்' என்பது குஞ்சுகளின் ஒலியையும், 'இமிழும்' என்பது எங்கும் ஒலித்தலையும் குறிக்கப் புலவர்களால் கையாளப்பட்டுள்ளது. வெள்ளாங் குருகின் பிள்ளை இறக்க அதனைக் கேட்கச் சென்ற நாரை, மனிதர்கள் தம்முள் யாராவது இறந்தால், அவர்களின் உறவினர்கள் கையறு நிலையில் புலம்புவது போன்று புலம்புவதை,

"வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தென
காணிய சென்ற மடநடை நாரை
கையறுபு யிரற்று கானல்அம் புலம்ப" (ஐங்.152:1-3)

என்று அம்மூவனார் புனைவர். இதில் அதன் ஓசை நேரடியான சொல்லால் அன்றி 'இரற்ற' என்ற பொதுச்சொல்லால் சுட்டப்பட்டுள்ளது.

நெய்தல் நிலச்சிறுவர்கள் விரித்த வலையில் தலையில் கொண்டையினையுடைய சேவல் கொக்கு அகப்பட்டுக்கொண்டது. பசிய கால்களைக் கொண்ட அதன் பேடைக்கொக்கானது இரையினைத் தின்னாது தனித்து வருந்தி, குஞ்சினைத் தழுவிய வண்ணம் 'ஒய்'யென ஒலி எழுப்புவதை"[89] நக்கீரர் புனைவர். இங்கு பேடைக் கொக்கு தன்

சேவலின் மீது கொண்ட அன்பு மிகுதியை வெளிப்படுத்த 'ஒய்' என்று ஒலியெழுப்புதல் புலவரால் புனையப்பட்டுள்ளது.

## குயிலின் ஒலி

குயிலின் ஒலி மிகவும் இனிமையாக இருக்கும். இது கூஉ, கூஉ எனத் தொடர்ந்து ஒலி எழுப்பும் இயல்பினது. "குயில்கள் மாமரத்தின் கிளையிலிருந்து தம் இனிய குரலால் பலமுறை கூவுவதை"[90] தங்கால் பொற்கொல்லனாரும், கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனாரும்,"[91] புனைந்துரைப்பர். இதில் அதற்குரிய ஒலிக்குறிப்புச் சொல் இடம்பெறவில்லை. எனினும் அதன் ஓசையைக் கூர்ந்து புலவர்கள் பொதுவாகச் சுட்டியுள்ளனர். கருங்குயில்கள் இனிய தம் நாவினால் நாள்தோறும் சில கூறுவனபோல மாறிமாறிக் கூவியதை,

"..... மணிநிற இருங்குயில்

படுநா விளி யானடு நின்று அல்கலும்

உரைப்ப போல, ஊழ்கொள்பு கூவ" (அகநா.25:6-8)

எனக் குறிப்பிடுவர் ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன். குயிலின் மகிழ்வான ஒலியினை மகிழ்குரல்,[92] ஆலும்,[93] அகவும்,[94] நுவலும்,[95] என சங்கப்புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர். குயில்களின் ஆரவார ஓசையினை கௌவை,[96] பூசல்,[97] அறையும்[98] எனவும் புனைந்துள்ளனர்.

## மயிலின் ஒலி

மயில்களின் இயல்பான ஒலி அகவ,[99] பயிர்ந்தகவ,[100] பயிரும்,[101] ஆலும்[102] என்ற சொற்களால் புலவர்களால் குறிக்கப்பட்டுள்ளன. மயில்களின் இனிய குரலை,

"காமர்பீலி ஆய் மயில் தோகை

இன்தீம் குரல் துவன்றி" (அகநா.358:2-3)

எனப் புனைவர் மருதனிள நாகனார். மயிலின் இனிய குரல், வயிர்,[103] ஊது கொம்பு[104] ஆகிய இசைக்கருவிகளின் ஒலியோடு ஒப்புமைப்படுத்தி புனைந்துரைப்பது புலவர்களின் செவிப்புலன் உணர்வை நன்கு வெளிப்படுத்தும்.

## எருவையின் ஒலி

எருவை கழுகினத்தைச் சார்ந்த பறவையாகும். பிணங்களை விரும்பி உண்ணும் எருவைச் சேவல் அதனை உண்ணத் தம் நெருங்கிய சுற்றத்தை அழைப்பதை,

"வம்பலர்ச் செகுத்த அஞ்சுவரு கவலை

படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி

எருவைச் சேவல் ஈண்டு கிளை பயிரும்" (அகநா.161:4-6)

என்பர் மதுரை புல்லாங்கண்ணனார். காக்கையோடு கழுகு எழுப்பிய ஒலியை,

"கருங்கட் காக்கையோடு கழுகு விசும்பு அகவ" (ஐங்.314:2)

என்பர் ஓதலாந்தையார். இதில் கழுகின் குரல் அகவ என்று சுட்டப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. கழுகின் ஓசையைக்கூட உணர்ந்து புனைந்துள்ள திறம் சிறப்பிற்குரியது. இப்புனைவின் வழியேதான் 'கழுகும்' அகவும் என்பது பெறப்படுகின்றது.

## பருந்தின் ஒலி

துணையைப் பிரிந்த பருந்து வருத்தத்துடன் ஒலி எழுப்புவதை,

"இனந்தீர் பருந்தின் புலம்புகொள் தெள்விளி

சுரம்செல் மாக்கட்கு உயவுத் துணையாகும்" (குறுந்.207:3-4)

எனக் குறிப்பிடுவர் உறையனார். இதில் பருந்தின் ஒலி பாலை நிலவழியே

செல்வோர்க்குத் துணையாக ஒலித்தமை சுட்டப்பட்டுள்ளது. "கோடை வெம்மையால் தலை உலரப் பெற்ற ஆண் பருந்தினை, உளிபோலும் கூரிய அலகினையுடைய பேடை வற்றி விரிந்த ஓமை மரத்தினது அழகிய கவட்டின் மேல் ஏறியமர்ந்து தனிமை புலப்படுமாறு கூவுவதை"[105] ஓதலாந்தையாரும் புனைவர். இங்கு பெடை பருந்து சேவலை அழைப்பது விளி எனச் சுட்டப்பட்டுள்ளது.

பருந்து தன் பெடையை அழைக்கும் ஒலி "மனிதர்களின் வீளை (சீழ்க்கை)' ஒலிபோல இருந்தமையும்,[106] 'இளி' என்னும் பண்போல இருந்தமையும்"[107] மள்ளனாரால் குறிப்பிடப்பட்டுள்ளது.

## கிளியின் ஒலி

சங்க இலக்கியத்தில் பெருங்கிளி, சிறுகிளி என்ற இரண்டு வகைக் கிளியினைப் புலவர்கள் சுட்டியுள்ளனர். கிளி, கீ...கீ... என ஒலியெழுப்பும் தன்மையுடையது. இதன் இயல்பான ஒலியினைப் பயிற்றுதல்,[108] மிழற்றுதல்[109] எனப் புலவர்கள் புனைவர். வயிர் என்னும் இசைக்கருவி போன்று கிளி ஒலி எழுப்பியதை, "வளியெறி வயிரின் கிளி விளி பயிற்றும்" (நற்.304:3) என மாறோக்கத்து நப்பசலையார் குறிப்பிடுவர்.

## வானம்பாடி

வானம்பாடி மழைக்காக ஏங்கிப் பாடுவதை,

"துளிநசை வேட்கையான் மிசைபாடும்" (கலித்.46:20)

"வானம் வாழ்த்திப் பாடவும்" (அகநா.67:2)

எனப் புலவர்கள் சுட்டுவர். இதில் பாட என்பது வானம்பாடியின் ஒலி இனிமையைக் குறிக்கும்.

"பறவைகளில் இசைபாடும் திறமை வானம்பாடிக்குத்தான் உண்டு. குயில் கூ ஊஉ என்ற ஒரே இனிய கூவலைத் தவிர வேறொன்றும் பாடுவதில்லை. ஆனால் வானம்பாடியோ அங்ஙனமல்ல தன் இனிய குரலில் ஆரோகணம், அவரோகணம் அமைத்து இசைபாடும் வல்லமை வானம்பாடி தவிர வேறு பறவைகளுக்கு இல்லை"[110] என்று பறவை நூலார் கருதுவது இங்கு சுட்டத்தக்கது. இந்நுட்பத்தைச் சங்கப்புலவர்கள் உணர்ந்து புனைந்திருப்பது அவர்தம் செவிப்புலனின் சிறப்பைப் புலப்படுத்தும்.

## புறாவின் ஒலி

சங்க இலக்கியங்களில் மாடப்புறா, மணிப்புறா, தவிட்டுப்புறா, சாம்பல் புறா என நான்குவகைப் புறாக்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. புறாக்கள் தம் துணையை அழைக்கும் ஒலி,

"வண்ணப்புறவின் செங்காற் சேவல்
வீழ்துணைப் பயிரும் கையறு முரல்குரல்" (நற்.71:8-9)

என்றும்,

"இரும்புறாப் பெடையொடு பயிரும்" (அகநா.307:14)

என்றும் சுட்டப்பட்டுள்ளன. இதில் துணையை அழைக்கும் ஒலி 'பயிர்' என்னும் சொல்லால் வழங்கப்பட்டுள்ளது.

## வங்காவின் ஒலி

வங்கியம் என்னும் இசைக்கருவியின் ஒலி போல இதன் ஒலி இருப்பதால் வங்கா என்ற பெயர் பெற்றது. இது இணையாக வாழும் இயல்பின. குறுந்தொகையில், வங்கா பறவையின் பெண், தன் சேவலைக் காணாமல், அது புல்லூறு என்னும் பறவையால் தாக்கப்பட்டிருக்குமோ என நினைத்து, குழலின் இசை போன்று குறியவும் பலவுமாகிய ஒலிகளால்

கூப்பிடுவதை,

"வங்கா கடந்த செங்காற் பேடை
எழாலுற வீழ்ந்தென கணவற் காணாது
குழலிசைக் குரல குறும்பல அகவும்" (குறுந்.151:1-3)

என்பர் தூங்கல் ஓரியர்.

## வண்டின் ஒலி

வண்டினங்கள் பூக்களிலுள்ள தேனினை உண்டு வாழும் இயல்பினையுடையது. இவைதம் சிறகுகளை அடிப்பதால் ஒலி எழுப்பும். இதன் ஒலி ரீங்கரிப்பது போன்று இருக்கும். வண்டின் ஒலியினை ஆர்ப்ப,[111] ஆர்க்கும்,[112] அரற்றும்,[113] பாட,[114] குரல்,[115] ஊத,[116] இன்னிசை கறங்க,[117] தீங்குரல்,[118] இன்குரல்,[119] இம்,[120] இமிர்,[121] இமிழ்,[122] கல்,[123] முரலும்[124] என்பன போன்ற சொற்களால் புலவர்கள் புனைந்துரைத்துள்ளனர்.

கோங்க மலர்களின் மீது ஒலிக்கின்ற வண்டுகள் தேனை உண்ணுந்தோறும் குரவமரத்தின் ஓங்கி உயர்ந்த கிளைகளிலுள்ள மலர்களின் பூந்துகள்கள் உதிர்ந்து வீழ்ந்தன. தேன் அருந்திய வண்டுகள் விளரி நரம்பின் ஒலிபோன்று 'இம்' என்ற ஒலி எழுப்பிக்கொண்டு பரந்தோடுவதை,

"தவிர்இசை விளரி புதைத்துவிடுநரம்பின் இம்மென இமிரும்"
(அகநா.317:12-13)

என்பர் வடமோதங்கிழார். "மலையினின்றும் ஓடிவரும் அருவியின் ஒலியுடன் வண்டின் ஒலிசேர்ந்து ஒலிப்பது முழவும் யாழும் இம்மென்று ஒலிப்பதுபோல் இருப்பதை"[125] கபிலர் புனைவர். "மலர்களில் வீழ்ந்துகிடக்கும் வண்டுகள் யாழில் வல்லவன் இசைக்கும் பாலைப்

பண்ணின் இசையைப் போன்று ஒலித்ததை”[126] தங்கால் பொற்கொல்லனார் புனைவர். இங்ஙனம் வண்டின் ஒலி முழவு, யாழ் போன்ற ஒலிகளுடன் ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளன.

## சிள்வீடு

தற்காலத்தில் சுவர்க் கோழியென வழங்கப்படும் வண்டினம், சங்க இலக்கியத்தில் சிள்வீடு என்ற பெயரால் வழங்கப்பட்டுள்ளது. இது தொடர்ந்து ஒலி எழுப்பிக்கொண்டே இருக்கும். இதன் ஒலி,

*“தேர்மணி இசையின் சிள்வீடு ஆர்க்கும்” (அகநா.145:2)*

*“சிள்வீடு, கணநிரை மணியின் ஆர்க்கும்” (அகநா.303:17-18)*

*“சிள்வீடு கறங்கும்” (நற்.252:2, அகநா.89:6)*

எனப் புனையப்பட்டுள்ளது.

## இதலின் ஒலி

இதல் தற்காலத்தில் வழங்கும் சருகுக்கோழி, வரகுக்கோழி என்பதாகும். வேடருடைய அழைப்பொலிக்கு அஞ்சி, புறத்தே வரிகளையும், நீலமணி போன்ற கண்களையும் உடைய பேடையானது, நுண்ணிய புள்ளிகளுடைய கழுத்தினையும் கூர்மையான முள்ளைப் போன்ற விரல்களையுடைய தன் சேவலை அழைத்தலை”[127] மதுரை மருதனிளநாகனார் குறிப்பிடுவர். இதில் இதலின் அழைப்பொலி ‘பயிரும்’ எனச் சுட்டப்பட்டுள்ளது.

இங்ஙனம் பறவைகளின் பல்வகை ஒலிகள் புலவர்களால் புனைந்துரைக்கப்பட்டுள்ளது.

### மக்களால் உண்டாகும் ஒலிகள்

மக்கள் பல்வேறு சூழல்களில் ஒலியெழுப்புகின்றனர். கூட்டமாகச் சேரும் பொழுது ஆரவாரமும், சண்டையிடும்பொழுது கூச்சலிடுவதும், அழைக்கும்பொழுது நீண்ட ஓசை எழுப்புதலும், துன்பப்படும்பொழுது கூவுதலும், அழுதலும், அரற்றலும், புலம்புதலும் எனச் சூழலுக்குத்தக ஓசை எழுப்புவர். இவ்வோசைகளைச் சங்கப் புலவர்கள் நுட்பமாகப் புனைந்துரைத்துள்ளனர்.

### ஆர்ப்பொலி

மக்கள் கூட்டமாக சேர்ந்து ஒலி எழுப்புதலை 'ஆர்ப்ப' என்ற சொல்லால் குறித்துள்ளனர். ஐங்குறுநூற்றில் ஒளி பொருந்திய நெற்றியை உடைய தலைவி, தன் தோழியர் ஆராவரிக்க குளிர்ந்த கடலில் பாய்ந்து நீராடுவதை,

"ஒண் நுதல் ஆயம் ஆர்ப்ப
தண்ணென் பெருங்கடல் திரைபாய் வோளே" (ஐங்.123:2-3)

என அம்மூவனார் புனைவர்.

கோபத்தினால் உண்டாகும் ஒலியை, "வஞ்சிக்கொடி போன்ற நுண்ணிய இடையையுடைய ஒருத்தி, முயக்கத்தால் அடிதளர்ந்து, தலைமை சிறந்த சிலம்பு ஒலிக்க தலைவியின் வீட்டிலுள்ள பெருங்கதவை மிதிப்பதால் எழுந்த ஆரவார ஓசையை"[128] மருதனிளநாகனார் புனைவர். மேலும், "காளைகளை அடக்கத் தொழுவத்தில் புகும் பொதுவர்களின் ஒலி,"[129] "கள்ளுண்ட மகிழ்ச்சியால் உண்டான ஒலி,"[130] "தினைப்புனம் காப்போர் பறவைகளை விரட்ட எழுப்பும் ஒலி"[131] "இளங்களிற்றைக் கண்ட குறவர்கள் எழுப்பும் ஒலி"[132] என அனைத்தும் 'ஆர்ப்ப' என்ற சொல்லால் புனையப்பட்டுள்ளன.

‘ஆர்ப்ப’ என்பது போல “ஆரவாரமும்”[133] கூட்டொலியைக் குறிக்க வழங்கப்பட்டுள்ளது. “செங்கோண்மை தவறிய மன்னனால் குடிகள் வருத்தமுற்று ஓலமிடுவதிலும்”[134] “தினைப்புனத்தில் மகளிர் கிளிகளைக் கூவி விரட்டுவதிலும்”[135] கூவ என்ற கூட்டொலி குறிக்கப்பட்டுள்ளது.

## பூசல்

பூசல் என்பது கூட்டமாக ஆரவாரித்தலைச் சுட்டும். சங்க இலக்கியத்தில், கன்றுகளை வழியிலே செலுத்திய புள்ளிய தலையையுடைய சிறுவர்கள் மன்றத்தின் கண்ணுள்ள வேங்கைமரம் மலரும் செவ்வியைப் பார்த்து அம்மரத்தின்மேல் ஏறாமல் செய்த இன்பத்தை தரும் ஆரவாரம் வானத்தை அளவாவிய மலை முழைஞ்சுகளில் எதிரொலி உண்டாக்கியதை,

“கன்றாற்றுப் படுத்த புன்தலைச் சிறாஅர்
மன்ற வேங்கை மலர்பத நோக்கி
ஏறாதிட்ட வேமப் பூசல்
விண்டோய் விடகரந் தியம்பும்” (குறுந்.241:3-6)

என்பர் கபிலர். “வேங்கை மலரைப் பறிக்கக் கருதுவோர் ‘புலி, புலி’ என்று ஆரவாரித்தல் வழக்கம்”[136] என்பர் உ.வே.சா. தங்கால் முடக்கொற்றனார், “வேங்கை மரத்தில் மலர் கொய்ய விரும்பிய மகளிர் புலிபுலி என பூசலிடுவதை”[137] புனைவர். மகிழ்ச்சியான ஓசையைக் குறிக்கச் சங்கப் புலவர்கள் ‘பூசல்’ என்னும் சொல்லால் குறிப்பிடுகின்றனர்.

## அலறுதல்

துன்பத்தினால் உண்டாகும் ஒலி அலறுதலாகும். இதனை, இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனால் தாக்கப்பட்ட ஆரிய மன்னர்கள் பயந்து அலறுவதை, “ஆரியர் அலறத் தாக்கி” (அகநா.396:16) என்பது சுட்டும்.

புலம்புதல், அழுதல் என்பவை துன்பத்தின் ஒலியாகும். ஐங்குறுநூற்றில் "பொருள் ஈட்டுவதற்குப் பிரியும் தலைவனிடம், போர் வெற்றிமிக்க தலைவனே, நீ பொருளீட்டும் நோக்கோடு அகன்ற பாலை நிலத்தைக் கடந்து செல்வாயெனில் விழாக்காலத்தைப் போன்று நறுமணம் கமழும், தழைத்தகூந்தலையுடைய மாமை நிறங்கொண்ட தலைவி, பலவடங்களால் அழகு பெற்ற அல்குலின் அழகிய வரிகள் வாட்டமெய்த வேய்ங்குழல் போல இணைந்து அழுவள்"[138] என்று குறிப்பிடும். "குழல் என பொதுப்படக் கூறினும் அழுகையொலிக்குச் சிறந்த ஆம்பற்குழல் கொள்ளப்படும்"[139] என்பர் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை.

தலைவனைப் பிரிந்த தலைவி போர்க்களத்தில் இயவர் ஊதும் ஆம்பற் குழல் போல அழுவதை,

"இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்
ஆம்பல்அம் குழலின் ஏங்கி
கலங்கு அஞர் உறுவோள் புலம்புகொள் நோக்கே"

(நற்.113:10-12)

என்பர் இளங்கீரனார்.

## குரலொலி

தலைவியின் குரல் கிளியின் குரல்போல இனிமையாக இருப்பதை "கொடிச்சி இன்குரல்கிளி செத்து" (ஐங்.289:1) "கிளிஎனச் சிறிய மிழற்றும்" (அகநா.126:18), "நரம்பு இசைத்தன்ன இன்தீம் கிளவி" (அகநா.109:2, ஐங்.185) என்றுரைப்பர் சங்கப் புலவர்கள்.

### நுவலுதல்

நுவலுதல் என்னும் சொல் அழைப்பொலியைக் குறிப்பதாகும். நீலமணி போலும் பூங்கொத்துக்களையுடைய நொச்சிமாலையைச் சூடி பலிகளை இடுகின்ற முதிய குயவன், தான் இடுகின்ற பலியை உண்ணுதற் பொருட்டு தெய்வங்களையும், காக்கைகளையும் அழைப்பதில் 'நுவலும்' என்னும் சொல் (நற்.293:1-3) இடம்பெற்றுள்ளது.

### அகவுதல்

அகவுதல் என்பதற்கு கூவி அழைத்தல் என்பது பொருளாகும். குறுந்தொகையில், தோழி ஒருத்தி, தலைவியின்பால் அன்புள்ளம் கொண்ட தலைவனின் குன்றத்தை குறிபார்க்கும் கட்டுவிச்சி மூலம் புகழ்ந்துபாட அழைப்பதை"[140] ஔவையார் புனைவர்.

### வீளை ஒலி

இதனை வீளை, விளி, சீழ்க்கை எனச் சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றது. நாக்கை நன்றாக மடித்து இருவிரல் கொண்டு ஊதுவது வீளை ஒலியாகும். இதனைத் தற்காலத்தில் 'விசிலடித்தல்' என்பர். கோவலர்கள் நீண்டு ஒலியெழுப்புதலை 'நெடுவிளி' (அகநா.253:12) என்றும், இரவில் ஆட்டுக்குட்டிகளை கவரவரும் குறுநரிகளை விரட்டுவதற்கு சீழ்க்கை ஒலி எழுப்புதலை, "குறுநரி உளம்பும் கூர்இருள் நெடுவிளி" (அகநா.94:8) என்றும் அகநானூறு உரைக்கும்.

உப்பு வணிகர்கள் பலபுரிகளையுடைய நீண்ட கயிற்றால் கட்டப்பட்ட வண்டியை எருதுகளின் வலிய கழுத்தில் பூட்டி, ஏற்றமான இடங்களில் ஓட்டும்போது, அவ்வெருதுகளை அதட்டி வீளை ஒலி எழுப்புவர். அவ்வோசையைக்கேட்டு மான் இனங்கள் அஞ்சி ஓடும்

தன்மையை"[141] முள்ளியூர்ப்பூதியார் புனைவர். இதில் வீளைஒலி விலங்குகளுக்கு அச்சம் தரக்கூடியதாக அமைந்துள்ளமை சுட்டப்பட்டுள்ளது.

## உழவர் எழுப்பும் ஒலி

சங்க காலத்தில் "நன்செய், புன்செய் பயிர்களைப் பயிரிடுகையில் முறையே, நிலத்தை உழும்போதும் நீர் இறைக்கும்போதும் விளைந்த பயிர்களைக் காவல்காக்கும்போதும் தூற்றும் போதும், நெல்லை உரலிட்டு உலக்கையால் குற்றும்பொழுதும் எனப் பயிர்த்தொழிலோடு இயைந்து இசைப்பது இசையாகும்"[142] என்பர் வி.சி.சசிவல்லி. "உழவர்கள் தினைக் கொல்லையில் விதை விதைக்கும் பொழுது ஆரவாரம் செய்தலை"[143] உரோடகத்துக் கந்தரத்தனார் சுட்டுவர்.

## உலக்கைப் பாடல்

உலக்கை குற்றும் பொழுது பாடப்படும் பாட்டு வள்ளைப்பாட்டாகும். கலித்தொகையில் "ஐவன நெல்லைப் பாறையாகிய உரலிட்டு யானையின் தந்தம், சந்தனம் ஆகியவற்றாலான உலக்கையைக் கொண்டு, முருகனைப் போற்றி வள்ளைப்பாட்டு பாடிக்கொண்டு குற்றுதலை"[144] கபிலர் குறிப்பிட்டுள்ளார். இதில் உலக்கை ஓசை, வாய்ப்பாட்டு என்னும் இரு ஓசைகள் சுட்டப்பட்டுள.

## பரதவர்கள் எழுப்பும் ஆரவாரம்

பரதவர்கள் நுண்மணல் செறிந்த கடற்கரையிடத்தே, ஆரவாரத்துடன் வலைகளை இழுத்து, மீன்களைத் தொகுப்பதால், பெரிய களத்திலே நெல்லைத் தொகுத்த உழவர்கள் போலத் தொகுத்த மீன்களைத் தம்மிடம் இரந்தோரின் வெற்றுக் கலன்கள் நிறையுமாறு வழங்குதல், எஞ்சியவற்றை பல கூறுகளாகப் பகுத்து விலைகூறி விற்றல் ஆகிய சூழல்களில் எழுந்த ஆரவார ஒலியினை"[145] முடங்கிக் கிடந்த

நெடுஞ்சேரலாதன் புனைவர். இங்கு பரதவர்கள் மீன்பிடிக்கும்போது எழுப்பும் ஒலியும், அதனை விலைகூறி விற்கும்போது எழுந்த ஒலியும் அழகுறப் புனையப்பட்டுள்ளது.

## அம்பல், அலர் கவ்வை ஒலிப்புனைவு

களவு வாழ்வில் தலைமக்களின் மறையொழுக்கத்தைச் சரிவர அறியாநிலையில் ஊரார் பேசுவது அம்பலாகும். நன்கு வெளிப்பட்ட நிலையில் பேசுவது அலராகும். பழிச்சொல்லால் தூற்றுவது கவ்வை (கௌவை)யாகும்.[146] தலைவியின் மீது அலர்தூற்றுதலால் எழுந்த ஒலியினை "ஊரில் எழும் பழிமொழியோ, பொன்னால் அழகுசெய்யப்பட்ட நீண்ட தேரினையுடைய நெடுஞ்செழியன், தன்னொடு பகைத்தெழுந்த எழுவரையும் தன் அடிபட்டு அடங்கிக் கிடக்குமாறு வெற்றிபெற்ற தலையாலங்கானத்துப் போர்க்களத்தே, வீரர்கள் வெற்றியால் எழுப்பிய ஆரவாரத்தைவிடவும் பெரியதாக இருந்ததை"[147] கல்லாடனார் புனைவர்.

சேரிப்பெண்டிரின் கவ்வைமொழியினை "மிகப்பெரிய படைகளையுடைய நெடுஞ்சேரலாதன் என்பான் பெரிய கடலின்கண் வந்தெரிந்த பகைவர்களைப் புறங்காட்டி ஓடச்செய்து அவர்களுடைய காவல்மரமாகிய கடம்பினை வெட்டிச்செய்த முரசின்கண் முழங்கினாற்போன்று கவ்வை தோன்றிற்று"[148] என்பர் மாமூலனார்.

## வளையல் ஒலி

சங்க இலக்கியத்தில் வளையல்கள் சங்குகளாலும் பொன்னாலும் செய்யப்பட்டன. இவ்வளையல்கள் ஒன்றையொன்று உராயும் பொழுது ஒலி ஏற்படும். கடற்கரையிலுள்ள நண்டுகளைத் தலைவி தன் கைகளால் ஆட்டி விரட்டி விளையாடும் பொழுது அவளது ஒளியுமிழும்

கைவளையல்கள் ஒலிப்பதை,

"இலங்கு வளை தெளிர்ப்ப அலவன் ஆட்டி

முகம் புதை கதுப்பினள்" (ஐங்.197:1-2)

என்பர் அம்மூவனார். மேலும் வளையல்கள் ஒலி,

"எல்வளை தெளிர்ப்ப" (அகநா.140:6, 257:10)

"இலங்கு வளை தெளிர்ப்ப" (அகநா.261:5)

என்று 'தெளிர்ப்ப' என்னும் சொல்லால் புலவர்களால் புனையப்பட்டுள்ளது.

## கிண்கிணி ஒலி

கிண்கிணி குழந்தைகளுக்கு அணிவிக்கக்கூடிய அணியாகும். இதில் பலமணிகள் கோர்க்கப்பட்டிருப்பதால் கிண்...கிண்... என ஒலியெழுப்பும். இதன் ஒலி, ஆரவாரித்தல்,[149] ஒலித்தல்[150] என்னும் இருநிலைகளில் புனையப்பட்டுள்ளது.

## சிலம்பின் ஒலி

காலில் அணியப்படும் அணி சதங்கையாகும். இஃது சிலம்பு எனவும் வழங்கப்படும். இதன் ஒலி ஆர்ப்ப,[151] நகர,[152] ஒலிப்ப[153] எனச் சுட்டப்பட்டுள்ளது. தலைவனைப் பிரிந்த தலைவி, அவன் வரவைக்கண்டு தேர்ந்தெடுத்த அணிகலன்கள் ஒலிக்குமாறு முயங்குதலை,

"அரிது காதலர்ப் பொழுதே அதனால்

தெரிஇழை தெளிர்ப்ப" (ஐங்.235:2-3)

எனவும், தலைவியின் சிவந்த அணிகலன்கள் ஒலிப்பதை 'சேயிழை தெளிர்ப்ப' (அகநா.51:12) எனவும் அணிகலன்களின் ஒலி புனையப்பட்டுள்ளன.

## செருப்பின் ஒலி

உப்புவணிகர் செருப்பு ஒலிக்க நடந்து செல்லுதலை 'தோல்புதை சிரற்று அடி கோலுடை உமணர்' (அகநா.191:4) என்ற அடிகள் சுட்டும்,

இதில் சிரற்றுதல் என்பது செருப்பினை உரசி நடக்கும் ஒலியினைக் குறித்துப் புனையப்பட்டுள்ளது.

### கணை ஒலி

கணை - அம்பினைக் குறிக்கும். பகை உணர்வுமிக்க வடுகர்கள், இளமயில் கழித்த தோகையின் நீண்ட வாரினால் வலிமை பொருந்திய வில்லில் வைத்துச் சுற்றிக்கட்டி, அவ்வில்லின் நாணிலிருந்து விரைந்து செல்லும் அம்புகள் ஒலி எழுப்பிச் செல்லுதலை"[154] மாமூலனாரும், "ஆறலைக் கள்வரால் வலிமையான வில்லிலிருந்து விடப்படும் அம்பு விடுந்தோறும் ஒலி எழுப்பிச்செல்லுவதை"[155] ஆலம் பேரிச்சாத்தனாரும் புனைந்துரைத்துள்ளனர். இதில் அம்பின் ஒலி, 'இசைக்கும்,' 'விளிக்கும்' என்னும் சொற்களால் வழங்கப்பட்டுள்ளது.

### கவண் ஒலி

இருகவடுபட்ட குச்சியின் நுனியில் வாரினால் இழுத்துக் கட்டப்படுவது கவணாகும். கவணிலிருத்து சிறு கற்களை நீண்ட தூரத்திற்கு எறியமுடியும். "தினைப்புனம் காப்போர் விடும் கவண் ஒலிக்கு அஞ்சிக் காட்டுயானை தான் தின்ற பசிய மூங்கிலைக் கைவிடுவதிலும்,"[156] "மலையிடத்து உயர்ந்த பரணிலிருந்து குறவன் கவண்கல்லை வீசியெறிந்தான். அக்கல்லின் கடிய ஓசையைக் கேட்டு புலி முழங்குவதிலும்"[157] கவணின் ஓசை, ஒலி, கடுவெடி, ஒல் என்னும் சொற்களால் சுட்டப்பட்டுள்ளது.

### கள்ளின் ஒலி

கள்ளினால் ஏற்படும் ஒலி "ஆர்கலி, நறவு" (அகநா.246:9) 'கலிமடைக்கள்' (நற்.295:7) என வழங்கப்பட்டுள்ளது. இதில் கள் உண்ட மனிதர்கள் ஏற்படுத்தும் ஆரவார ஒலி கள்ளுக்காகி வந்துள்ளது.

## வெண்ணெய் கடையும் ஒலி

வெண்ணெய் எடுப்பதற்கு தயிரினை மத்தைக் கொண்டு கடையும் பொழுதும் ஏற்படும் ஒலி 'தெழி' (கலித்.108:35) என உரைக்கப்பட்டுள்ளது.

## தேரின் ஒலி

தேர் மரத்தாலானது. இதில் மணிகள் பதிக்கப்பட்டு காணப்படும். "தேர் இயங்குவதாலும், விரைந்து செல்வதினாலும் ஒலி எழுப்புதலை கலித்தொகையும்,"[158] அகநானூறும்[159] குறிப்பிடுகின்றன. வளமான குதிரைகள் பூட்டப்பெற்ற தேர் கடற்கரை மணலில் பதிந்து விரைந்து செல்லும்பொழுது 'கல்' என்ற ஓசையுடன் ஒலியெழுப்பிச் செல்வது[160] "தூண்டப்பெறுதலால் குதிரைகள் எதிர்ப்படும் செலவினை, கற்களில் மோதி தேர் உருளையின் ஒலி கார்காலத்து மேகங்களின் இடிமுழக்கம் போல ஒலிப்பது"[161] புலவர்களால் புனையப்பட்டுள்ளது. தேரின் ஒலி கடின ஓசையுடன் மட்டுமின்றி இனிமையுடன் இருக்கும் நிலையில் 'இன்னொலி' (நற்.338:3) எனச் சுட்டப்பட்டுள்ளது.

## இசைவாணர்கள்

சங்க இலக்கியத்தில் பாணர், கூத்தர், வயிரியர், கோடியர், இயவர், பாடுவர், விறலி, பாடினி, ஆடுமகள், அகவன்மகள் போன்றோர் இசைவாணர்களாகத் திகழ்ந்தமை புலவர்களால் புனையப்பட்டுள்ளன.

## பாணர் முரலுதல்

பாணர்கள் இனிமை மிகுமாறு இசையிலக்கணத்தோடு பண்ணினைப் பாடியதை,

"பாணர், நயம்படு முரற்கையின் யாத்தபயன் தெரிந்து"

(ஐங்.407:1-2)

என்பர் பேயனார். இதில் உள்ள 'நயம்படு முரற்கை' என்பதற்கு "முரற்கையாகிய இசையில் வெளிப்படும் இனிமை, அவ்வவ் பண்ணுக்கு ஏற்றவாறு, நரம்புகளை மாற்றியும், விசித்தும், தளர்த்தியும் கட்டுவது"[162] என்பர் தட்சிணாமூர்த்தி.

**வயிரியர்**

வயிர் போன்ற இசைக்கருவிகளை இசைத்தவர்கள் வயிரியர் ஆவர். "அன்னி என்பான் குறுக்கையின் கண்ணுள்ள போர்க்களத்தில் திதியன் என்பானது தொன்றுதொட்டு நிலைபெற்றுவந்த புன்னை மரத்தின் பெரிய அடியைவெட்டி வீழ்த்தித் துண்டுகளாகத் துணித்தபொழுது ஏற்பட்ட ஆரவார ஒலி, அவன் புகழைப் பாடிப் பரவிய வயிரியர் தம் இன்னிசை முழக்கத்தினும் பெரிதாக ஒலித்தலைப்"[163] புனைவர் வெள்ளிவீதியார்.

**கோடியர்**

கோடியர் என்பதும் கூத்தக்குடியினரையே குறிக்கும். பாலை நிலத்து கவர்த்த வழிகளில் தங்கியிருக்கின்ற கூத்தர்கள் முழக்கிய வாத்திய ஒலி பெரியமலையில் எதிரொலித்ததை,

"அருஞ்சுரக் கவலை அசைஇய கோடியர்
பெருங்கல் மீமிசை இயம் எழுந்தாங்கு" (அகநா.359:8-9)

எனப் புனைவர் மாமூலனார். இதில் கோடியர்கள் வாசித்த இசைமுழக்கம் மலையெங்கும் எதிரொலித்த தன்மை புனையப்பட்டுள்ளது. மேலும் "பாலை நிலவழியில் செல்லும் கூத்தர்கள் வழிச்செல்லும் வருத்தம் புலப்படாதவாறு இசைக்கும் யாழிசை குறித்து"[164] குடவாயிற் கீரத்தனார் புனைவர். இதில் கூத்தர்கள் யாழினை 'துது' எனும் ஒலியுடன் இசைத்தமை சுட்டப்பட்டுள்ளது.

## பண்

## குறிஞ்சிப்பண்

பண் என்பது பாட்டைக் குறிக்கும். அகன்ற ஊரினைக் காவல்காக்கின்ற கானவர்கள், "பேயினங்கள் காற்றைப் போல இயங்கும் இரவுப் பொழுதில் கேட்போர் அஞ்சும் தன்மையில் குறிஞ்சிப் பண்ணைப் பாடுவதை"[165] ஆலம்பேரிச்சாத்தனாரும், "இரவில் தினைப்புனம் காவல் செய்யும் கானவர் உயரமான பரணிலே கள்ளுண்டு களித்திருக்க, அவனது மனைவி கரிய தன்கூந்தலை மெதுவாக அசைந்துவரும் காற்று உலர்த்த, அக்கூந்தலைத் தன் கையினால் கோதியவளாய் பெரியமலைப்பக்கத்தே குறிஞ்சிப்பண்ணினைப் பாட அப்பாடலைக் கேட்ட இளங்களிறு தினைக்கதிர்களை உண்ணாமல் அவ்விடத்திலே உறங்குவதை"[166] மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனாரும் புனைந்துரைத்துள்ளனர். குறிஞ்சிப்பண் கேட்போர்க்கு அச்சத்தையும், விலங்குகளுக்கு இன்பத்தையும் கொடுத்துள்ளமை இதனால் புலப்படும்.

## பஞ்சுரப்பண்

"பஞ்சுரம் என்ற பண் குறிஞ்சி அல்லது பாலைப்பண்ணைச் சார்ந்த இரண்டாம் சுரப் பண்ணாகக் கருதப்படுகிறது"[167] என்பர் ஏ.என்.பெருமாள். "பஞ்சுரம் என்பதை பாலைப்பண்"[168] என்பர் உ.வே.சா. வேங்கை மலரினைக் கொய்வோர் பஞ்சுரம் என்னும் பண்ணைப் பாடினும் அதைக்கேட்டு வழிப்போக்கர்தாம்செல்லும் வழியை, பெரிதும் அஞ்சுவதற்கு இடனாகக் கருதுவதை,

"வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினும்
ஆர்இடைச் செல்வோர் ஆறுநனி வெரூஉம்" (ஐங்.311:1-2)

என்பர் கபிலர். இதில் பஞ்சுரப்பண் கேட்போர்க்கு அச்சத்தை உண்டாக்கும் ஒலியுடையது என்பது கபிலரின் புனைவால் வெளிப்படுகின்றது.

## முல்லைப்பண்

இது முல்லை நிலத்திற்குரிய பண்ணாகும். "பாணர் முல்லைப் பண்ணைப் பாடவும், ஒளிவிடும் இழையினையும், ஒளி பொருந்திய நுதலினையுடைய அரிவையானவள், முல்லைப்பூச்சூடவும், நெடுந்தகையாகிய தலைமகன் வெறுப்பில்லாத கொள்கையினையுடைய தன் புதல்வனொடு அவ்வோசையைக் கேட்டு இனிதிருத்தலையும்"[169] பேயனார் புனைவர். இதற்கு "முல்லைப்பண், சாதாரிப்பண் கற்புக்குரியதாகும். இதில் பாணர் பாட்டினால் இசையும், மனைவி முல்லையணிதலால் மனைமாட்சியும் சிறப்புறச் சுட்டப்பட்டுள்ளது"[170] என்பர் ஔவை துரைசாமிப்பிள்ளை.

## செவ்வழிப்பண்

"இச்செவ்வழிப்பண் முல்லைக்கும் நெய்தலுக்கும் உரியதாகும். இது மாலைநேரத்திற்குரியது. முல்லை நிலம் பிரிவுத்துயரையும், நெய்தல் நிலம் இரங்கல் துயரையும் கொண்டவை. இரண்டுமே துன்பச்சுவையுடையன. ஆகையால் இவ்விரு நிலங்களுக்குரிய செவ்வழிப்பண் துன்ப உணர்வு கொண்டதாகவே இருக்கும்"[171] என்பர் ஏ.என்.பெருமாள். ஒரு பெண்ணின் துன்பக் கண்ணீருக்கு செவ்வழிப்பண் ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

"பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப
ஆர்உயிர் அணங்கும் தெள்இசை
மாரி மாலையும் தமியள் கேட்டே" (அகநா.214:13-15)

என்னும் அடிகள் விளக்கும். இதில் யாழிடத்துப் பாடப்பெறும் செவ்வழிப்பண், உயிர்களை வருத்தும் தெளிந்த ஓசை, மழைக்காலத்து

மாலைப் பொழுதில் தனித்திருக்கும் தலைவிக்குத் துன்பம் செய்வதாக அமைந்தமை சுட்டடப்பட்டுள்ளது.

### படுமலைப்பண்

"படுமலை பாலைப்பண் பன்னிரண்டனுள் ஒன்று என்பர்" உ.வே.சா.[172] பாணர்கள், "படுமலைப் பாலையென்னும் பண்ணை வாசித்தது வானத்தின்கண் எழுகின்ற நல்ல ஒலியைப் போல இருத்தலைக்"[173] குறிப்பிடுவர் பதடிவைகலார்.

### விழவுக் களத்தில் நிகழும் ஒலிகள்

விழவு என்பது திருவிழாவினைக் குறிக்கும். திருவிழாவில் பல்வேறு இசைக்கருவிகளாலும் மக்கள் எழுப்பும் ஆரவாரத்தினாலும் ஏற்படும் கூட்டொலிகளை 'கல்' (கலித்.5:10) 'கறங்கு இசை' (அகநா.4:14) "ஆர்கலி" (குறுந்.223:1, நற்.348:4) என்னும் பொதுச்சொல்லால் புலவர்கள் புனைவர்.

### இசைக்கருவிகளின் ஒலிப்புனைவு

பறை, தண்ணுமை, கிணைப்பறை, முரசு, முழவு, துடி, பம்பை, யாழ், வயிர், குழல், சங்கு, மணி, ஊது கொம்பு, தட்டை, குளிர் போன்ற இசை கருவிகளின் இசை எட்டுத்தொகைப் பாடல்களில் பரவலாகக் காணப்படுகின்றன.

### பறை

பறையின் தோற்றம் பற்றி "குடத்தின் வாய்ப்பகுதியில் தோலை இறுக்கமாகக் கட்டி குச்சிகளை அடித்து ஒலி எழுப்பியது பறையின் தோற்றத்திற்கு முதல் முயற்சியாக அமைந்தது என்பர்"[174] மு.வளர்மதி. "மாட்டுத் தோல்களைப் பதப்படுத்தி மென்மையாகத் தேய்த்து,

அதனைக் குடத்தின் வாயில் கட்டி அடித்தனர். அதில் அடித்து முடித்த பின்னரும், அதன் அதிர்வு சில நொடிகள் நீடிக்கக் கண்டனர். இதன் பின்னர் பெரிய பெரிய உருளைகளில் இணைத்துப் பேரதிர்வுடன் கூடிய ஒலிகளை எழச்செய்தனர். இது 'பறை' என வழங்கப்பட்டது என்பர்"[175] பறை என்பது தோற்கருவிகளின் பொதுப்பெயர் ஆகும்.

மள்ளர்கள் தம் பறையை முழக்க, அவ்வொலி கேட்ட மயில்கள் எழுந்து ஆடுதலை, "மள்ளர் கொட்டின் மஞ்ஞை ஆலும்" (ஐங்.371:1) என்பது விளக்கும். "இரவுப் பொழுதில் தினையை அரிபவர்கள் தொண்டகச் சிறுபறை முழக்குவது, சிறுகுடியில் நடு இரவின்கண்ணும் ஒலித்தலை"[176] குறுந்தொகை சுட்டும். மேலும் பறையின் ஒலியை "அரிப்பறை,"[177] இசைக்கும்,[178] இரங்க,[179] பாணி,[180] எழ,[181] முரல்[182] எனச் சங்கப்பாக்கள் புனைந்துரைக்கின்றன.

## தண்ணுமை ஒலி

தண்ணுமை என்னும் தோற்கருவி "இரண்டு தலையும் குவிந்த நீண்ட உடலினையுமுடையது. தோலால் போர்த்தப்பட்டது. ஒரு முகத்தைத் தாழச்செய்து உயர்ந்த மற்றொரு முகத்தின் இரண்டு கடிப்புகளால் தாக்கி ஒலித்து முழக்கப்படுவது"[183] என்பர் ஆர்.ஆளவந்தார். தண்ணுமையின் தாளத்திற்கேற்ப ஆயர்கள் குரவைக் கூத்தாடுவதை,

"தண்ணுமைப் பாணி தளராது எழூஉக்
பண்ணமை இன்சீர்க் குரவையுள்" (கலித்.102:34-35)

என்பது விளக்கும். நெல்லை அரிவோர் எழுப்பும் தண்ணுமை ஒலிகேட்டு பறவைகள் அஞ்சிச் செல்வதை, அகநானூறும் (204:10-11), நற்றிணையும் (350:1-2) குறிப்பிடுகின்றது. தண்ணுமை ஒலி

பறவைகளுக்கு அச்சந்தரக்கூடியதாக இருத்தல் புலவர்களின் புனைவால் பெறப்படுகின்றது. தண்ணுமையின் ஒலியை அறையும்,[184] வள்உயிர்,[185] குரல்[186] என்பன போன்ற சொற்கள் விளக்கும்.

## கிணை ஒலி

கிணை இழுத்துக் கட்டப்பட்ட வாரை உடையது. குறுங்கம்புகளால் அடித்து இயக்கப்படும். தெளிந்த ஒலியெழுப்பும். இதனை, "இனிய ஓசையையுடைய கிணைப்பறையின் தெளிவான ஓசையைக் கேட்டுப் பகைவர்கள் அஞ்சி ஓடுவதைப்"[187] பரணரும், "பாணர்கள் வலிமையுடைய வாரினால் இழுத்துக் கட்டப்பட்ட அரித்தெழும் ஓசையைச் செய்யும் கிணைப்பறையின் ஒலியுடன் வருதலை"[188] நக்கீரனாரும் புனைவர். இதில் கிணைப்பறையின் ஒலி தெண்கிணை இன்குரல் என்றும், பாடுஇன் தெண்கிணை என்றும் வழங்கப்பட்டுள்ளது.

## முரசின் ஒலி

"தோற்கருவிகளுள் மிகவும் பெருமைவாய்ந்தது முரசாகும். இது வீரமுரசு, கொடைமுரசு, மணமுரசு என மூன்று வகைப்படும். போரில் தோல்வியுற்ற பகைமன்னனின் காவல்மரத்தை வெட்டி முரசாகச் செய்து வெற்றி முழக்கம் செய்வது வீரமுரசமாகும்"[189] என்பர் வெற்றிச்செல்வன். முரசின் ஒலியினை "அதிர்வு, இழும், இயம்ப, தழங்குகுரல், இரட்டும், இரங்கும், உருமும், இமிழ்இசை, இன்னிசை, அறைந்த"[190] எனச் சங்கப் புலவர்கள் புனைந்துள்ளனர்.

கொல்லும் தொழிலையுடைய வீரமிக்க ஏற்றினைக் கொன்று, அதன் தோலை, மயிர் சீவாமற் போர்த்திய முரசம் ஒலித்தலை,

“ஓடா நல்ஏற்று உரிவை தைஇய

ஆடுகொள் முரசம் இழுமென முழங்க” (அகநா.334:1-2)

என்பர் மதுரைக்கூத்தனார். களிறுகள் முழங்கும் போர்க்களத்தே இடியென முரசம் முழங்குவதை,

“மதவலி யானை மறலிய பாசறை

இடிஉமிழ் முரசம் பொருகளத்து இயம்ப” (அகநா.354:1-2)

என்பர் தமிழக்கூத்தன் கடுவன் மள்ளனார். முரசு மாறுபட்டு முழங்குதல் ‘இரட்டும்’ (ஐங்.450:1) என்றும், இடிபோல முழங்குதல் ‘உருமும்’ (கலித்.104:79) என்றும் புனையப்பட்டுள்ளது.

சூழலுக்கேற்ற முரசின் ஓசைக்கேற்ற சொற்களைப் புலவர்கள் புனைந்துள்ளமை இதன்வழிப் புலனாகும்.

## முழவின் ஒலி

பண்டைத் தமிழர்களால் மிகவும் பயன்படுத்தப்பெற்ற தோற்கருவிகளுள் ஒன்று முழவு. தற்காலத்தில் இக்கருவியை மத்தளம் என்றழைப்பர். மணம் நிகழும் வீட்டில் முழவின் இனிய ஓசை ஒலித்தலை,

“இமிழ்கண் முழவின் இன்சீர் அவர்மனைப்

பயிர்வன போல வந்து இசைப்பவும்” (அகநா.66:22-23)

என்பர் செல்லூர்க்கோசனார். இதில் திருமண நிகழ்வின்போது முழவு இசைத்தமை சுட்டப்பட்டுள்ளது. முழவின் ஒலி இமிழ், விதிர்ப்ப, கலி, புலரா, முரல[191] எனப் புனையப்பட்டுள்ளது.

## துடியின் ஒலி

துடியும் தோற்கருவிகளுள் ஒன்றாகும். "துடிப்பறை மரத்தால் செய்யப்பட்டது. தோல் வார்களால் இறுக வலித்துக்கட்டப்பட்டது. நுண்ணிய நூல்களால் கட்டப்பட்டது"[192] என்பர் ஆர்.ஆளவந்தார். ஆனிரை கவர்தலில் வெட்சியாரை வென்ற கரந்தை மறவர்கள் நடுகல்லிற்குப் பீலிசூட்டி, கள்ளைப் படைத்து, துடியை முழக்கி வணங்குதலை, "நடுகல்பீலி சூட்டி துடிப்படுத்து" (அகநா.35:8) என்பர் குடவாயிற் கீரத்தனார். ஆறலைக்கள்வர் வழிப்பறி செய்யும் பொழுது புலால் நாறும் அக்களத்தே துடியினைத் தாழக்கொட்டி முழக்கியதை,

"படுபுலாக் கமழும் ஞாட்பில் துடி இகுத்து" (அகநா.89:14)

என்பர் மதுரைக் காஞ்சிப்புலவர். இகுத்து என்பது ஆவேசத்துடன் அடித்து முழக்குவதைக் குறிக்கும். இங்ஙனம் அச்சம் தரும் துடி ஓசை, ஆறலைத்தலிலும், ஆனிரை கவர்தலிலும் அதிகமாகப் புனையப்பட்டுள்ளது.

## பம்பையின் ஒலி

பாலைநில வழியில் கடுமையாக ஒலிக்கும் பம்பையுடன் சினமிகுந்த நாயையுடைய வடுகர் கூட்டம் தங்குவதை, "கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர் (நற்.212:5) என்பர் குடவாயிற் கீரத்தனார். இதில் பம்பையின் ஒலி கடுமையாக இருத்தல் சுட்டப்பட்டுள்ளது.

## குழல் ஒலி

துளையை அடிப்படையாகக் கொண்டு அமையும் கருவிகளுக்கு துளைக்கருவிகள் என்று பெயர். சங்ககாலத்தில் குழல், சங்கு, வயிர், தூம்பு போன்ற துளைக்கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. மூங்கில் அல்லது கொன்றைக்காயாலான உட்துளையுள்ள கருவி குழலாகும்.

புதர்கள் பரந்து கிடக்கும் இடத்திலுள்ள அசையும் மூங்கிலிடத்து, வண்டுகள் துளைத்த அழகிய குறுகிய துளைகளின் வழியே மேல்காற்று புகுந்து வருவதால் எழுகின்ற ஓசையானது, கோலினையுடைய ஆயர் கூட்டம் ஊதும் குழல் இசை போன்று இருந்தமையை,

"புதல்இவர் ஆடு அமைதும்பி குயின்ற

அகலா அம்துளை, கோடை முகத்தலின்

நீர்க்கு இயங்கு இனநிரைப் பின்றை வார்கோல்

ஆய்க்குழல் பாணியின் ஐதுவந்து இசைக்கும்" (அகநா.225:4-7)

எனச் சுட்டுவர் எயினந்தை மகனார் இளங்கீரனார். மாலை நேரத்தில் ஊதப்படும் குழலின் ஓசையை நன்னிமித்தமாகத் தலைவி கருதுவதை,

"அணிமாலைக் கேள்வற் தரூஉமார் ஆயர்

மணிமாலை ஊதுங் குழல்" (கலித்.101:34-35)

எனக் கலித்தொகை சுட்டும். கொன்றைக் காயிலிருந்து எழுப்பப்படும் குழலின் ஓசை "கொன்றையம் தீங்குழல்" (கலித்.106:3, அகநா.54:13) என அழைக்கப்படுகிறது.

## சங்கின் ஒலி

பாணரின் மெல்லிய இசைப்பாட்டைப் போல வெண்மையான வலம்புரிச் சங்கு ஒலிப்பதை,

"விருந்தின் பாணர் விளர் இசை கடுப்ப

வலம்புரி வான்கோடு நரலும்" (நற்.172:7-8)

என்ற அடிகள் இயம்பும். இதில் சங்கின் ஒலி 'நரலும்' என புனையப்பட்டுள்ளது. வலம்புரிச் சங்குகள் 'கல்'லென ஒலி எழுப்புவதால் கடற்கரை ஆரவாரம் மிகுந்து காணப்படுவதை,

"வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்

ஒலிதலைப் பணிலம் ஆர்ப்ப கல்லென" (அகநா.350:11-12)

என்பர் சேந்தன் கண்ணனார். இதில் சங்கின் ஒலி கல்லென்று ஒலிப்பதால் கொற்கை கரையெங்கும் ஆரவாரம் மிகுந்திருக்கும் தன்மை புனையப்பட்டுள்ளது.

**வயிரின் ஒலி**

வயிர் என்பது உட்துளையுள்ள கருவியாகும். வண்டல் விளையாட்டு அயரும் பெண்கள் ஊதுகொம்பில் பிறந்த தெளிந்த இசைமுழங்க நீருண்ணும் துறைக்கு வருவதை,

"பாடு ஊர்பு எழுதரும் பகுவாய் மண்டிலத்து

வயிர் இடைப்பட்ட தெள்விளி இயம்ப" (அகநா.269:17-18)

என்பர் மதுரை மருதனிளநாகனார். வயிரின் இனிய ஒலியை "நாரையின் பிளிற்றலுடன்"[193] கிளியின் பயிற்றலுடன்,[194] மயிலின் ஆலியுடனும்"[195] ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது. "வேட்டைக்குச் செல்லும் வேடர்கள் நாயினை அழைப்பதற்கு ஊது கொம்பினை ஊதுதலை"[196] புனைவர் கபிலர். இங்ஙனம் வயிரின் இசை சூழலுக்குத்தக புனையப்பட்டுள்ளது.

**யாழின் ஒலி**

நரம்புக் கருவிகளுள் முதன்மையானது யாழ் ஆகும். இதனை,

"இம்மென இமிரும்" (நற்.30:2-3) "ஆர்ப்ப" (அகநா.331:11)

"இன்குரல் சீறியாழ்" (நற்.380:7)

"தீந்தொடை, விளரி நரம்பின் நயவரு சீறியாழ்"

(அகநா.279:10-11)

என்பன போன்ற அடிகள் யாழின் ஒலிப்புனைவுகளை விளக்கும்.

## கிளிகடி கருவிகள்

'குளிர்,' என்பது கிளிகடி கருவிகளுள் ஒன்றாகும்.

இதன் ஒலி மிகவும் இனிமையுடையது. இதனை,

"படுகிளி கடியும் கொடிச்சி கைக்குளிரே
இசையின் இசையா யின்பாணித்தே
கிளியவள் விளியென விழவொல்லாவே" (குறுந்.291:2-4)

எனும் அடிகள் விளக்கும். இதில் தினைக்கதிரை உண்ணவந்த புள்ளினங்கள் குளிரின் இனிய ஒலியில் மயங்கி அங்கேயே தங்கியமை சுட்டப்பட்டுள்ளது. தினைக்கதிரை உண்ணவரும் கிளிகளை விரட்ட குறமகளிர் தம் கையால் குளிர் இசைக்கருவியை ஒலித்த ஒலி பக்க மலையெங்கும் பட்டு எதிரொலித்தமையை,

"உண்கிளி கடியும் கொடிச்சி கைக்குளிரே
சிலம்பின் சிலம்பும் சோலை" (குறுந்.360:6-7)

என்பர் மதுரை ஈழத்துப் பூதன் தேவனார்.

## தட்டை

தட்டை மூங்கிலால் ஆன இசைக்கருவியாகும். இதனை "இக்கருவி மூங்கிலைப் பிளந்து செய்யப்பட்டது. தினைக்கதிர்களைத் தின்னவரும் கிளிகளைப் புனத்திலிருந்து விரட்டுவதற்கு சங்க காலத்தில் பயன்பட்டது"[197] என்பர் மு.வளர்மதி. தினைகளை உண்ண வரும் கிளிகளை விரட்ட தட்டையைப் புடைத்து ஒலிஎழுப்புதலை "தட்டையும் புடைத்தன" (நற்.206:5) என்பர் ஐயூர் முடவனார்.

## பல்லியம்

பல இசைக் கருவிகள் சேர்ந்து ஒலிப்பதை பல்லியம், இன்னியம் என அழைத்துள்ளனர். அகநானூற்றில் "அசைந்தாடும் மூங்கில்

வண்டுகளால் துளைக்கப்பெற்ற துளையிடத்தே, மேல்காற்றினால் எழுகின்ற அழகிய ஒலி குழல் இசையாகவும், இன்னொலியுடன் வீழும் குளிர்ந்த நீரினையுடைய அருவியின் ஓசை கூட்டமான மத்தளங்களின் இசையாகவும், கலைமான்களின் கூட்டம் தாழ ஒலிக்கும் கடுங்குரல் பெருவங்கியத்தின் இசையாகவும், மலைச்சாரலிடத்தே பூக்களைக் குடைந்தாடும் வண்டின் ஒலி யாழ் இசையாகவும் முழங்கின"[198] எனக் கபிலர் புனைந்துரைப்பர்.

## மணியின் ஒலி

சங்ககால மக்கள் மணியை பல்வேறு சூழ்நிலைகளில் பயன்படுத்தியுள்ளனர். காவலர்கள் இரவுநேரத்தில் நேரத்தை அறிவிப்பதற்கு பயன்படுத்தியதை,

"காப்புடை வாயில் போற்றோ என்னும்
யாமங் கொள்பவர் நெடுநா ஒண்மணி
ஒன்றெறி பாணியின் இரட்டும்" (நற்.132:8-10)

என்னும் அடிகள் விளக்கும். மேலும் சிவந்த நாவினையுடைய மணியின் ஓசை தெளிந்த குரலில் ஒலிப்பதை, "சிறு செந்நாவின், மணி ஓர்த்தன்ன தெண்குரல்" (அகநா.151:14) எனக் காவன் முல்லைப்பூதத்தனாரும், மணியின் இனிய குரல் ஊர் முழுவதும் இயம்புவதை, "ஈர்மணி இன்குரல் ஊர் நனி இயம்ப" (நற்.364:8) என கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனாரும் புனைந்துரைத்துள்ளனர்.

மேலும், ஆனிரைகளின் கழுத்தில் கட்டப்பட்ட மணி ஒலித்தலை இசைக்கும் (நற்.37:3) என்றும், தேரில் கட்டப்பட்ட மணி ஒலித்தலை "இயம்ப" (அகநா.184:18), "ஆர்க்கும்" (நள்.394:4) என்றும், பறவைகளின் ஒலிபோல ஒலித்தலை "தெள்ளிசை" (நற்.287:9-10) என்றும் சூழலுக்குத் தக மணியின் ஓசை புலவர்களால் எடுத்தியம்பப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

மெய், வாய், கண், மூக்கு ஆகிய உறுப்புகளின் உணர்வு செவியாகிய ஒலிப்பின்னணியோடு இணையும்பொழுதே நிறைவடையும் என்பதால் தொல்காப்பியர் செவி உணர்வினை ஐந்தாவதாக வரையறை செய்துள்ளார்.

உருவுலகம் கண்ணுக்குப் புலனாவது போல, ஓசையுலகம் செவிக்குப் புலனாவதாகும். இவ்வோசை உலகத்தில் ஒலி என்பது பண்பட்டதாகவும், ஓசை என்பது பண்படாத தன்மையும் கொண்டு விளங்குகின்றது.

சங்க இலக்கியத்தில் நிலம், நீர், காற்று, தீ, வானம் ஆகிய ஐம்பூதங்களின் ஓசைகளைப் புலவர்கள் நுட்பமாகப் புனைந்துரைத்துள்ளனர்.

நிலத்தில் தோன்றும் ஒலிகளாக, மலையின் எதிரொலி, மரங்கள் முறிவதால் எழும் ஒலி போன்ற புனைவுகள் சுட்டப்பட்டுள்ளன. முழு நிலவொளியில் கடலலையின் வேகம் அதிகமாகவும், பேரிரைச்சலுடனும் காணப்படும் தன்மையை புலவர்கள் புனைந்துள்ளனர். நீர் நிலைகளில் அருவி, கடல், மழை ஆகியவற்றின் ஒலிகள் இசை முழக்கத்தோடு ஒப்புமைப்படுத்தப்பட்டு உரைக்கப்பட்டுள்ளன.

காற்றின் இயக்கத்தைக் கொண்டு, முழங்குதல், உரற்குரல், இம் என்றும், தீயின் ஒலியினை முழங்குதல் என்றும் புனைந்துள்ளனர். மரம்செடி, கொடி, காய், மலர் ஆகியவற்றின் அசைவொலிகளும் நன்கு சுட்டப்பட்டுள்ளன.

வானில் எழும் ஒலியாக இடி முழக்கம் சுட்டப்பட்டுள்ளது. இடி பேரொலியாக விளங்கும் தன்மையில், பண்டைத் தமிழர்களுக்கு அது

இன்குரல் எழிலியாகத் திகழ்ந்தமை அறியப்படுகிறது. இயற்கை ஒலிகளை இசைஒலிகளோடு ஒப்பிட்டுச் சங்கப் புலவர்கள் பாடியிருப்பது அவர்களின் இயற்கை ஆர்வத்தை வெளிப்படுத்தும்.

சங்க இலக்கியத்தில் விலங்குகள் தம் துணையை அழைக்கவும், தம் எல்லையைப் பிறவிலங்குகளுக்கு அறிவுறுத்தவும் ஒலி எழுப்பும் தன்மை நுட்பமாகப் புலவர்களால் உரைக்கப்பட்டுள்ளது.

அரிமாவின் ஒலி நாண் ஓசை போன்று இருத்தல் புலி, சூழலுக்குத் தக ஒலி எழுப்புதல் போன்றவையும் புலவர்களால் கூறப்பட்டுள்ளது.

யானையில் ஒலி, கரும்பின் எந்திரம் போல ஒலித்தலும், குதிரையின் ஒலி 'தெவிட்ட' என்றும், கரடியின் ஒலி 'ஓசை' என்றும் பொதுப்படக் குறிக்கப்பட்டுள்ளது.

மந்தியின் ஒலி 'பயிரும்,' 'அதிர் குரல்' என்றும், நாயின் ஒலி 'குரைத்தல்' என்றும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. கலைமானின் ஒலி 'விளிக்கும்' என்று, மனித ஒலியோடும், காற்றின் ஒலியோடும் ஒப்பிட்டுரைக்கப்பட்டுள்ளது.

கன்றை அழைக்கும் ஆவின் மென்மையான குரல் 'குரல' எனவும், ஆமானின் ஒலி 'அலற' எனவும், எருமை நீரினில் விழும் ஒலி 'துடும்' எனவும் புலவர்களால் சுட்டப்பட்டுள்ளன.

தேரையின் ஒலி 'தெவிட்ட,' 'கறங்க' எனவும், பல இசைக் கருவிகளின் ஒலிகள் போன்று ஒலித்தமையும் புலப்படுத்தப்பட்டுள்ளது. பல்லியின் ஒலியினை பட், படும், பாடு போன்ற ஒலிகுறிப்புச் சொற்களால், புனைந்துள்ளனர். இதனால் சங்கப்புலவர்கள் இயற்கை

ஆர்வலர்கள் என்ற நிலையிலிருந்து விலங்கின ஆர்வலர்களாகவும் திகழ்ந்தமை புலனாகும். பறவைகளின் இயல்பான ஒலி 'அகவும்,' 'ஆலும்' என்றும், தத்தம் துணையை அழைக்கும் ஒலி 'பயிரும்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

அன்றில், கிளி, குருகு, மயில் போன்ற பறவைகளின் ஒலி 'வயிர்' என்ற ஊது கொம்பின் ஒலியோடு ஒப்பிட்டு உரைக்கப்பட்டுள்ளது.

குயிலின் இயல்பான ஒலி 'அகவ,' 'கூவ' 'ஆலும்' என்றும், மகிழ்வான ஒலி மகிழ்குரல் என்றும், பேரொலி கௌவை, பூசல் 'அறையும்' என்றும் புனையப்பட்டுள்ளது. வானம்பாடியின் பாட்டொலியும், வங்காவின் வங்கியம் போன்ற ஒலியும் நுட்பமாகச் சங்க இலக்கியத்தில் சுட்டப்பட்டுள்ளன.

எருவை, பருந்து போன்ற கழுகினப் பறவைகளின் ஒலி, மனிதர்களின் வீளை (சீழ்க்கை) ஒலி போன்று இருந்தமையும் உரைக்கப்பட்டுள்ளது. வண்டின் ஒலி ஆர்ப்ப, அரற்றும், பாட, இன்னிசை, தீங்குரல், இன்குரல் என்றும், யாழ், முழவு, தேர் போன்றவற்றின் ஒலிகளுடனும் ஒப்பிட்டுரைக்கப்பெற்றுளது.

பறவைகளின் ஓசையை மட்டும் குறிக்காமல் அதன் அரிய செயலோடு தொடர்புபடுத்தி, அவ்வோசை மனிதர்கட்குத் துணைநிற்றலையும் புலவர்கள் குறித்துள்ளமை அவர்தம் செவிப்புலன் உணர்விற்குச் சிறந்த சான்றாகும்.

மக்கள் எழுப்பும் ஒலிகளாக ஆர்ப்பொலி, பூசல், அலறுதல், குரலொலி, நுவலுதல், அகவுதல், வீளை ஒலி, தொழில் செய்வோர் எழுப்பும் ஒலி, உலக்கை குற்றும் பெண்கள் பாடும் பாட்டொலி, பரதவர்கள் எழுப்பும் ஆரவார ஒலி, களவு வாழ்வில் எழும் அம்பல்,

அலர், கவ்வை போன்ற ஒலிகள் எனப் பல்வகை ஒலிகள் புலவர்களால் புலப்படுத்தப்பட்டுள்ளன.

அணிகலன்களால் எழும் ஒலிகளாக, வளையல், சிலம்பு, கிண்கிணி போன்றவற்றின் ஒலிகளும், பிற ஒலிகளாக செருப்பின் ஒலி, கணைஒலி, கவண்ஒலி, வெண்ணெய் கடையும்ஒலி, தேரின் ஒலி போன்றவையும் நுட்பமாக புனைந்துரைக்கப்பட்டுள்ளன.

இசைவாணர்கள் பண்இசைப்பதன் மூலம் உண்டாகும் ஒலிகளும், தோற்கருவிகளான பறை, தண்ணுமை, கிணை, முரசு, முழவு, துடி, பம்பை, பதலை போன்றவற்றால் எழுந்த ஒலிகளும், துளைக்கருவிகளான குழல், சங்கு, வயிர் போன்ற கருவிகளின் ஒலியும், நரம்புக் கருவியான யாழின் இனிமையான ஒலியும் சங்கப் புலவர்களால் நுட்பமாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. வ.த.கோமதி சங்கர ஐயர், இசைத்தமிழ் இலக்கணவிளக்கம், ப.1

2. வீ.ப.க.சுந்தரம், தமிழிசைக் களஞ்சியம், ப.341

3. ஞா.தேவநேயன், வேர்ச்சொற் கட்டுரைகள், ப.107

4. பரி.10:7

5. அகநா.288:1-2

6. மேலது, 318:5

7. அகநா.68:3, குறுந்.353:3

8. நற்.251:1

9. வா.சா.பானு நூர்மைதீன், பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும், ப.126

10. ஐங்.105:1, 192:1, அகநா.70:14, 90:10, 100:5, 220:12, 338:21, நற்.15:1, 117:1, 135:7, 138:9, 203:1, 247:1

11. ஐங்.107:3

12. மேலது, 199:1

13. அகநா.400:25, கலித்.129:8

14. ஐங்.192:2, கலித்.125:10, 127:11, அகநா.334:4, நற்.91:3, 378:11, 335:1-3

15. குறுந்.345:6

16. கலித்.121:8, 134:5, 149:1, ஐங்.163:2, நற்.159:10, 319:1, 378:2-4, அகநா.40:2, 169:5, குறுந்.303:3

17. நற்.7:4, பரி.16:49

18. அகநா.310:16

19. மேலது, 200:8

20. மேலது, 201:10

21. நற்.335:1-4

22. மேலது, 378:2-3

23. ஐங்.307:1

24. கலித்.150:1-6

25. மேலது, 142:32, 145:2

26. அகநா.8:11

27. ஐங்.325:1-3

28. அகநா.241:7, 47:4, 8:8, 72:11, 395:14

29. குறுந்.253:5

30. அகநா.267:11-12

31. மேலது, 47:4-7

32. நற்.107:4-6

33. ஐங்.61:1

34. நற்.280:1-3

35. அகநா.278:1-5

36. கலித்.45:5

37. அகநா.84:2

38. மேலது, 264:9

39. மேலது, 294:1

40. மேலது, 274:1

41. நற்.7:5, 264:1

42. கலித்.101:10, 145:19

43. மேலது, 41:5, 141:17

44. அகநா.202:11

45. நற்.154:6

46. ஐங்.405:2

47. குறுந்.264:1

48. அகநா.68:15

49. நற்.208:12, 257:1-2

50. அகநா.374:9-10

51. பி.சி.கணேசன், விலங்குகளின் வாழ்வியல், ப.163

52. ஐங்.218:4, 274:2, அகநா.92:4, 112:6, 221:11-12, 261:13, 322:11, குறுந்.21:6, நற்.255:5

53. அகநா.148:5, 168:12, 396:16

54. குறுந்.237:5-6

55. அகநா.389:22-24

56. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.281

57. மேலது, ப.108

58. அகநா.172:1, 329:12, நற்.353:9-10, பரி.10:55

59. அகநா.145:9, குறுந்.307:5-9

60. அகநா.144:12

61. மேலது, 379:23-26

62. நற்.14:9-10

63. மேலது, 65:5-8

64. ச.மெய்யப்பன் (பதி.), வெற்றிதமிழ் அகராதி, ப.221

65. அகநா.398:22-25

66. மேலது, 111:5-9

67. மேலது, 140:7-9

68. மேலது, 122:7-9

69. மேலது, 361:5-6

70. மேலது, 285:5-6

71. மேலது, 261:3-4

72. கலித்.113:27-28

73. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.67

74. அகநா.337:15

75. மேலது, 154:2-3

76. குறுந்.16:2-4

77. மேலது, 160:1-4

78. நற்.303:4-5

79. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப.280

80. மேலது, பக்.292-293

81. அகநா.9:13

82. மேலது, 89:3-5

83. நற்.394:1-3

84. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப.149

85. ஐங்.85:1-2

86. அகநா.256:3-4

87. ஐங்.314:2

88. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப.24

89. அகநா.290:1-7

90. மேலது, 355:12

91. அகநா.229:10

92. மேலது, 337:4

93. கலித்.27:10, 30:8, 33:26, 36:8, நற்.9:10, 118:3-4

94. கலித்.92:63, அகநா.97:23

95. அகநா.335:1-2, நற்.97:3

96. ஐங்.369:16

97. அகநா.317:16

98. ஐங்.346:3

99. குறுந்.249:1, 264:3, பரி.6:4, அகநா.272:18

100. அகநா.85:13

101. மேலது, 194:15

102. ஐங்.250:2, 298:1, 371:1, 413:2, அகநா.344:6, நற்.248:7, 357:6, 443:2, 492:1

103. அகநா.177:10-11

104. மேலது, 378:5-8

105. ஐங்.321:1-3

106. அகநா.33:5-7

107. மேலது, 126:18

108. நற்.304:4, அகநா.12:7

109. அகநா.126:18

110. உதகை பொன்னழகன், பறவைகள் பலவிதம், ப.65

111. குறுந்.34:6, 254:1, கலித்.33:5, 92:40, 118:11, அகநா.88:11, 164:5, 204:7, 269:12

112. அகநா.40:5, 104:2, 302:6, கலித்.30:3, 77:17

113. அகநா.231:14

114. பரி.16:14, கலித்.80:25

115. பரி.10:120

116. நற்.290:8, 311:10, ஐங்.494:1, கலித்.48:3, 93:1

117. நற்.323:9

118. மேலது, 244:3

119. மேலது, 176:8

120. நற்.161:4

121. நற்.187:8, 348:6, ஐங்.172:2, 254:3, கலித்.35:9, 43:2, 79:16, அகநா.250:3, 340:18

122. குறுந்.320:6

123. அகநா.228:1

124. நற்.17:10-11, அகநா.355:5

125. அகநா.318:5-6

126. மேலது, 355:5

127. அகநா.387:9-12

128. கலித்.90:8-13

129. மேலது, 105:25

130. அகநா.295:16

131. மேலது, 12:6

132. குறுந்.346:2

133. ஐங்.251, அகநா.212:13

134. கலித்.10:5

135. நற்.313:11

136. உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை மூலமும் உரையும், ப.448

137. அகநா.48:6-7

138. ஐங்.306:1-3

139. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.690

140. குறுந்.23

141. அகநா.173:9-11

142. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர்தம் தொழில்கள், ப.72

143. குறுந்.155:1-2

144. கலித்.41:1-3, 43:1-7

145. அகநா.30:8-10

146. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், பக்.61-62

147. அகநா.209:1-2

148. அகநா.347:2-6

149. கலித்.75:15-16, 86:10

150. நற்.250:2, 269:1-2

151. கலித்.147:4, அகநா.17:9, 122:19

152. அகநா.261:5

153. அகநா.382:12, நற்.110:5

154. அகநா.281:5-7

155. அகநா.175:1-3

156. குறுந்.154:1-3

157. அகநா.392:15-16

158. கலித்.135:20

159. அகநா.134:13

160. குறுந்.311:3, அகநா.20:14

161. அகநா.14:18-20

162. அ.தட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.890

163. அகநா.45:10-11

164. நற்.212:3

165. நற்.225:1-2

166. அகநா.102:1-7

167. ஏ.என்.பெருமாள், தமிழர் இசை, ப.73

168. உ.வே.சாமிநாதையர், ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.139

169. ஐங்.408

170. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக்.870-871

171. ஏ.என்.பெருமாள், தமிழர் இசை, ப.71

172. உ.வே.சாமிநாதையர் (உரை.), குறுந்தொகை மூலமும் உரையும், ப.588

173. குறுந்.323:1-3

174. மு.வளர்மதி, பறை இசைக்கருவி ஓர் ஆய்வு, ப.2

175. மா.நவநீதக்கிருட்டிணன், கரகாட்டம், ப.35

176. குறுந்.375:3-5

177. ஐங்.81:2, நற்.58:1-3

178. கலித்.92:21

179. அகநா.194:8

180. நற்.104:5

181. பரி.6:23-24

182. பரி.6:16

183. ஆர்.ஆளவந்தார், தமிழர் தோற்கருவிகள், ப.63

184. அகநா.63:8

185. நற்.310:10

186. நற்.298:3, குறுந்.390:5

187. அகநா.226:12-17

188. அகநா.249:2-4

189. வெற்றிச்செல்வன், இசையியல், ப.55

190. அட்டவணை 5-ல் காண்க

191. மேலது

192. ஆர்.ஆளவந்தார், தமிழர் தோற்கருவிகள், ப.71

193. அகநா.40:14-15

194. நற்.304:1-3

195. அகநா.378:8

196. அகநா.318:13

197. மு.வளர்மதி, பறை இசைக்கருவி ஓர் ஆய்வு, ப.55

198. அகநா.82:1-7.

# முடிவுரை

பண்டைத்தமிழரின் பெருமையைப் பறைசாற்றும் சங்க இலக்கியங்கள் உணர்வுகளை எழுத்துவடிவில் காட்டும் ஓவியமாகத் திகழ்கின்றன. ஆறறிவு படைத்த மனிதன் முதல் ஓரறிவுடைய உயிர்கள் வரை அனைத்தும் உணர்வின் அடிப்படையிலேயே இயங்குகின்றன. இவ்உணர்வுகள் ஐம்புலன்கள் வழி வெளிப்படும் இயல்பின. எனவே மன உணர்வின்வழி படைக்கப்படும் இலக்கியங்களில் இவ்ஐம்புல உணர்வுகளும் இடம்பெறும் என்பது வெள்ளிடைமலை.

உலகம் இயங்க ஐம்பூதங்களின் செயல்கள் அடிப்படையாக அமைவதுபோல, மனிதன் இயங்குவதற்கு மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன்களும், அடிப்படையாகும். இப்புலன்கள் வெளிப்படுத்தும் ஊற்றுணர்வு, சுவையுணர்வு, ஒளியுணர்வு, நாற்ற உணர்வு, ஓசை உணர்வு என்பன இன்றியமையாதனவாகும்.

மெய்யின்வழித் தோன்றும் உணர்வுகளை வெளிப்படுத்துவது புலன்களாகும். புலன்களின்வழி வெளிப்படும் உணர்வுகளை மெய்ப்பாடுகள் எனத் தொல்காப்பியர் சுட்டுகிறார்.

மெய்ப்பாடு உணர்ச்சியின் அடிப்படையில் அமைவதாகும். நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்ற எட்டும் மெய்ப்பாட்டின் வகைகளாகும் இளம்பூரணர் மெய்யின்கண் தோன்றுதலின் இது மெய்ப்பாடாயிற்று என்பர்.

தொல்காப்பியத்தில் புலன் என்ற சொல்லாட்சி பொருளியல், மெய்ப்பாட்டியல் ஆகிய இரு இயல்களில் ஐம்புலன் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது.

புலன் என்பதற்கு இளம்பூரணர், கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலன்களால் நுகர்தல் என்பர்.

ஐம்புலன்கள் உவமை தோன்றுவதற்கு அடிப்படையாக அமைகின்றன. தொல்காப்பியர் குறிப்பிடும் உயிர்ப்பாகுபாடும் அவற்றின் உணர்வுகளும் ஐம்புலன்களின் சிறப்பை எடுத்துரைக்கின்றன. உயிர்ப்பாகுபாட்டில் மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவற்றை மெய், வாய், மூக்கு, கண், செவி என வகைப்படுத்தியுள்ளார் தொல்காப்பியர்.

மெய்ப்பாடு எட்டும் ஐம்புல உணர்வை வெளிப்படுத்தும் காரணிகளாகும். இலக்கியம் படைக்கும் புலவன் அல்லது படைப்பாளனுக்கு ஐம்புலனும் அவை பற்றிய உணர்வும் இன்றியமையாதனவாகும்.

எட்டுத்தொகை அக இலக்கியங்கள் தலைவன் தலைவியரிடையே ஏற்படும் மெய்யுணர்வு, இயற்கையினால் உண்டாகும் மெய்யுணர்வு போன்றவற்றைச் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளன.

தொல்காப்பியர் உரிப்பொருளில் புணர்வை முதலில் வைத்தார். பிற உணர்வுகள் தோன்றுவதற்கும் மெய்யே அடிப்படைக்காரணமாக இருப்பினும் மெய்யோடு பெரிதும் தொடர்புடையது புணர்தல் என்பதால் அவ்வாறாக வைத்துள்ளார்.

தலைமக்களிடையே ஏற்படும் மெய்யுணர்வில் களவு, கற்பு வாழ்வில் அன்பின் வெளிப்பாட்டை உணர்த்த உள்ளப் புணர்ச்சியும், மெய்யுறு புணர்ச்சியும் முதன்மைக் காரணிகளாகும்.

தலைவனும் தலைவியும் மெய்யுறு புணர்ச்சிக்கு முன்னர் செய்துகொள்ளும் இன்பச் செய்கைகளாக காதலியின் தோளில் துயிலுதல், மார்பில் துயிலுதல், கூந்தலில் துயிலுதல், தொய்யில் எழுதுதல், எயிற்றுநீர் சுவைத்தல், நுதல் உண்ணல் போன்ற உணர்வுப் புனைவுகளைச் சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் சுட்டியுள்ளனர்.

தலைவனும், தலைவியும் ஒருவரை ஒருவர் தழுவி தங்கள் காதலின்பத்தை வெளிப்படுத்துவர். தலைவன், தலைவியை அவளது மார்புகள் வருத்தமுறுமாறும், மார்பிலே கிடக்கும் மாலை குழையும்படியும், காற்றும் இடைநுழைய முடியாதபடியும், அச்சத்தைத் தெளிவிக்கும் பொருட்டும், மழையினால் உண்டான குளிர்ச்சியை நீக்கும் வண்ணமும் தழுவுதல் புலவர்களால் புனைந்துரைக்கப்பட்டுள்ளன.

தலைவி, தலைவனைத் தழுவும் இன்பமே பெரிது எனக் கருதியமை மேலும் தலைவனைத் தழுவியும் பசலை நீங்காமை போன்றவையும் அகப்பாடல்களில் சுட்டப்பட்டுள்ளது. தலைவி தலைவனுக்கு ஐம்புல இன்பங்களையும் ஒருங்கே தருவதாக அமைகின்றாள். ஐம்புல உணர்வில் கூந்தல், நுதல், இளமை ஆகியவற்றால் கண்ணிற்கும், நறுமணத்தால் மூக்கிற்கும், குளிர்ந்த நீரின் தன்மையால் வாய்க்கும், மெல்லிய சொற்களால் செவிக்கும், மென்மை இயல்பினால் உடம்பிற்கும் இன்ப உணர்வினைத் தருபவளாகத் தலைவி சுட்டப்பட்டுள்ளாள்.

தலைவி தன் காதலனுக்கு ஏறுதழுவுதலால் உண்டான வடுக்கள் மறையும்படி தனது முலைகளால் தழுவி ஒத்தடம் தருவதையும், வடுக்களில் வழியும் குருதியால் தலைவியது தோள்கள் அழகுடன் காட்சியளிப்பதையும் புலவர்கள் புனைந்துள்ளனர்.

தலைவனைப் பிரிந்த தலைவியின் நெஞ்சம் நடுங்கிப் பெருமூச்சு விடுதல் உயிர்ப்புநிலையில் துன்பத்தினால் ஏற்படும் மெய்யுணர்வை வெளிப்படுத்துகிறது. தலைவனைப் பிரிந்த நிலையிலும் உடனிருக்கையிலும் அவனது மார்பே தலைவிக்கு இன்பம் தருவதாக அமைகின்றது.

காதலர்களிடையே தழுவுதலைத் தொடர்ந்து கவவுதல் நிகழும். கவவுதல் என்பது நெருக்கமான தழுவலையும், புணர்ச்சியையும் குறிக்கும். காதலரைக் கூடிய மகளிர் காதலர் அணைத்த கையை நெகிழவிடாது பின்னிக்கிடப்பதையும், கண்களில் கண்ணீர்மல்க தலைவி முயங்கியமையும் ஊற்றின்ப உணர்வுகளின் அடிப்படையென சங்கப் புலவர்கள் சுட்டியுள்ளனர்.

இல்லற வாழ்க்கையில் கணவனும் மனைவியும் கூடிப்பெறும் இன்பமே முயங்குதல். பண்ணிற்கு ஏற்றவாறு நரம்புகளை மாற்றியும், தளர்த்தியும், கூட்டியும் அதன் இசையை நுகர்வதுபோல புதிதாகத் தோன்றும் புணர்ச்சி இன்பத்தைத் தலைவனும் தலைவியும் நுகர்ந்து வாழ்ந்துள்ளனர்.

புணர்ச்சி இன்பத்திற்கு ஊடற்கிளர்ச்சி வேண்டும். தொடுதல், மோத்தல், கேட்டல், பார்த்தல், சுவைத்தல் என்ற ஐம்புலச் செய்கைகளும், புணரும் செய்கைக்கு முன்னே அதனை உணரும் இன்ப எண்ணங்கள் தழைக்க, உதவும் சங்கப்புலவர்கள் பகற்புணர்ச்சியையும், இரவுப்புணர்ச்சியையும் நுட்பமாகச் சுட்டியுள்ளனர். இதில் புணர்ச்சிக்கு முன் தலைவன் செய்த இன்பச் செய்கைகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலும் புணர்ச்சி இன்பத்தில் சிறந்தது நாகப்புணர்ச்சி. நாகங்கள் காம இன்பத்தை அனுபவிக்க, தொடர்ந்து இறுகப்புணரும் இயல்பினது.

வையையில் நீராடவந்த மைந்தரும் மகளிரும் நாகங்களைப் போல தொடர்ந்து இறுக்கமாகத் தழுவிக்கூடியதைப் பரிபாடல் சுட்டும்.

தலைவனுக்கு, காதலின்பத்தை நல்குபவர்களுள் பரத்தையும் ஒருத்தி. பரத்தையிடம் தலைவன் பெற்ற காதலின்பத்தை அவன் மேனியெங்கும் பெரிய நகங்கள் கீறிய வடுக்களும், பற்கள் பதித்த குறிகளும், பூவிதழ்கள் உதிர்ந்த கண்ணியும், சிவந்த அடிகளும் எடுத்துரைக்கும். இங்ஙனம் பரத்தையின் மூலம் கிடைக்கும் ஊற்றின்ப உணர்வுகளைப் புலவர்கள் சுட்டுவர்.

தலைவிக்குத தலைவன் தழுவல் இன்பத்தையும், தாயின் தழுவல் வெறுப்பையும் தோற்றுவித்ததைப் புலவர்கள் பாடியுள்ளமை படைப்பாளி அப்படப்பாகவே மாறியமையை விளக்கும். தலைவன் தலைவி தங்கள் புதல்வனை தழுவிப் பெறும் ஊற்றின்ப உணர்வுகள் சங்கப் பாடல்களில் புனையப்பட்டுள்ளன.

இயற்கை மனித வாழ்வோடு தொடர்புடையது. இரண்டறக்கலந்தது. இயற்கை தரும் ஊற்றுணர்வில் குளிர்ச்சி முதலிடம் வகிக்கிறது. தண் என்ற குளிர்மையுடன் நீர்த்துறை, கலிழ், அருவி, கயம், கடல், அறல், கார், துளி, எழிலி, பொழில், சோலை, காடு, மலை, மலர்கள், மாலை, மாவடு, மண், சேறு, ஊர், காலை, நிலவு, வேனில், வாடை, பந்தல், சந்தனம், நிழல், துவர், ஆடை, பனி போன்றவை சேர்த்துரைக்கப்பட்டுள்ளன.

பனியினால் ஏற்படும் மெய்யுணர்வாக மெய்நடுங்குதல், பற்கள் வெடவெடத்தல் போன்ற ஊற்றுணர்வுகள் இடம் பெற்றுள்ளன. வெம்மையினால் பாலைநிலம், நெருப்பு, கல், காடு போன்றவை

சுடுவதையும், தலைவனின் பிரிவினால் தலைவிக்கு, நெஞ்சு, யாமம் போன்றவை சுடுவதையும் சங்கப்பாக்கள் எடுத்தியம்பியுள்ளன.

மெய்யின்வழி உணரப்படும் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்ற எண் வகை உணர்வுகளும் சங்கப்பாக்களில் புலவர்களால் பாடப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

மனிதன் உயிர்வாழ்வதற்கு இன்றியமையாதவனற்றுள் உணவும் ஒன்று. உடம்பை வளர்ப்பதற்கு மட்டுமின்றி உயிரைப் பேணிக் காப்பதற்கும் சிறந்த மருந்தாக உணவு திகழ்கிறது.

தொல்காப்பியர் நாவினால் உணரப்படும் சுவையுணர்வை இரண்டாவதாக வரையறுத்துள்ளார். நாவினால் கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, புளிப்பு மதுரம் போன்ற சுவையுணர்வை உணரமுடியும்.

சங்க மக்கள் உணவில் இனிப்புச் சுவை சிறப்பிடம் பெற்றுத் திகழ்ந்துள்ளது. பாலின் இனிமை கருதி அதனுடன் சோற்றினைச் சேர்த்து, பாற்சோறும் பாற்பொங்கலும் ஆக்கி உண்டுள்ளமையும், பாலோடு பசியஅவல், கரும்புச்சாறு, தினையரிசி, இறைச்சி போன்றவற்றைக் கலந்து ‘பாசவல்’ என்ற இனிப்புச் சுவையுடைய உணவினை ஆக்கிச் சுவைத்துள்ளமையைப் புலவர்கள் சிறப்புறப் புனைந்துள்ளனர்.

பழங்கள் பெரும்பான்மை இனிப்புச் சுவையுடையது. சங்க இலக்கியத்தில் மா, பலா, வாழை, இருப்பை, அத்தி ஆகிய பழங்களின் சுவை, ‘தீம்’ என்னும் சொல்லால் வழங்கப்பட்டுள்ளது. மேலும் மாம்பழத்தின் புளிப்புச்சுவையைப் ‘புளிமா’ என்றும், இனிப்புச் சுவையைத் ‘தேமா’ என்றும் சுவையைச் சொற்களால் வேறுபடுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

பால் இயல்பிலே இனிப்புச்சுவையுடையது. அதன் இனிமையை மேலும் கூட்டுவதற்காக, தேன் கலந்தும், நெய்கலந்தும் சுவையாக உண்டமையைப் புலவர்கள் புனைந்துள்ளனர்.

புலவர்கள் அக்கால மக்களின் புளிப்புச்சுவை உணர்வை முற்றிய தயிரினால் சோற்றுணவு தயாரித்தல், அத்தயிரினால் தீம்புளிப்பாகல் என்ற இனிமையும், புளிப்பும் நிறைந்த குழம்பினை ஆக்குதல், தயிரோடு ஈசல், மானின் இறைச்சி சேர்த்துச் சமைத்தல் அயிலை, வரால் மீன்களில் புளிக்கறியாக்கியமை போன்றவற்றின் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர்.

மேலும் காய் பழங்களில் புளியங்காய், நெல்லிக்காய், களாம்பழம் ஆகியவற்றின் புளிப்புச் சுவையுணர்வு புலவர்களால் பாடப்பட்டுள்ளது. நெல்லிக்காயை உண்டபின் நீர் அருந்துவதால் ஏற்படும் இனிப்புச் சுவையும்கூடப் புலவர்களால் நுட்பமாக விளக்கப்பட்டுள்ளது.

கள் புளிப்புச்சுவையுடைய பானமாகும். இதன் இனிமையைக் கூட்ட பல நாட்கள் மூடிவைத்து, புளிப்பேறியவுடன் உண்டு மகிழ்ந்தமையும், ஆண்களும் பெண்களும் கள்ளின் புளிப்புச் சுவையை விரும்பி உண்டமையும் புலவர்களால் நுட்பமாகச் சுட்டப்பட்டுள்ள அவர்தம் சுவையுணர்விற்குச் சிறந்த சான்றாகும்.

கள்குடித்த மயக்கம்தீர ஊறுகாயின் புளிப்பேறிய சாற்றினை உண்டு களைப்புத்தீர்ந்தமையும் புலவர்களால் புனைந்துரைக்கப்பட்டுள்ளது.

நெய்யில் வறுத்த குறும்பூழின் இறைச்சியுடன் மிளகினைச் சேர்த்துக் காரமாக உண்ணுதலில் கார்ப்புச் சுவையுணர்வு புனையப்பட்டுள்ளது.

விளாம்பழத்தின் துவர்ப்புச் சுவைபுலவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது. உப்பின் உவர்ப்புச் சுவை அமிழ்தம் என வழங்கப்பட்டுள்ளது.

புலவர்களின் நாப்புலனுணர்வுப் புனைவு, சுவையை உணர்த்துவதற்கு மட்டுமின்றி, தலைவன் தலைவியரின் அன்பை வெளிப்படுத்துவதற்கும் புலவர்களால் கையாளப்பட்டுள்ளது. உவர்ப்புச்சுவையுடைய தலைவன் நாட்டுக் கூவல் நீர் தலைவிக்கு, தேன் கலந்த பாலினும் இனிமையாக இருத்தலும், களவில் வேம்பின் காய், தலைவனுக்குத் தீஞ்சுவைப் பழமாகத் திகழ்தலும் அன்பு வெளிப்பாட்டில் சுவையுணர்வு பெற்ற இடத்தைப் புலப்படுத்தும்.

ஐம்புல உணர்வில் மூன்றாவதாகச் சுட்டப்பெறுவது கட்புல உணர்வாகும். சங்கப் புலவர்கள் தங்கள் கட்புலனால் கண்டு உணர்ந்ததை அப்படியே பாடல்களில் புனைந்துள்ளனர்.

மனித வாழ்க்கையில் புறக்கணிக்க முடியாத அளவிற்கு இயற்கை முதலிடம் வகிக்கிறது. இயற்கையின் முற்கூறாகிய மலையின் அழகினை தினைக்கதிர்கள், மூங்கில்கள், காந்தள் கொத்துக்கள், பூக்கள் நிரம்பிய தளிர்கள், மந்திக் கூட்டங்கள், தேன் உண்ணும் வண்டினங்கள், யானைகள் நிறைந்த கரும்புத் தோட்டங்கள் ஆகியவற்றின் வழி காட்சிப்படுத்தியுள்ளனர்.

பலாமரங்கள் நிறைந்த மலைச்சாரலில் தேனடைகள் முழைஞ்சுகளில் சிதறி வீழ்தல், குடம் போன்ற பழங்கள் நிறைந்த பலாத் தோட்டத்தில் மின்மினிப் பூச்சிகளை விளக்காகக் கொண்டு மலைமுகிலின் இயக்கத்தைக் காணுகின்ற குறவர்கள் எனப் பக்க மலைக்காட்சிகள் நன்கு புனையப்பட்டுள்ளன.

சூரியனின் ஒளிச்சுடர் பட்டு, பனியொழுகும் இமயமலை, எரிகின்ற தீச்சுடர் போலத் தோற்றம் தருவது அழகிய காட்சிப்புனைவாகும். இப்புனைவு புலவர் இமயமலைக்குச் சென்று வந்ததைப் புலப்படுத்தும்.

இருபக்க மலைகளின் ஊடே வீழும் அருவியின் அழகும், அடுக்கடுக்கான மலைத் தொடர்களில் கொட்டும் அருவி இளஞாயிற்றின் ஒளிபட்டு மிளிருதல், சாரலில் நனைந்த வேங்கைப் பூவின் அழகு, யானைகள் மலரும் நீருமாகக் கலந்து சொரிவதால் தாமரை மலரிடத்து திருமகள் உறைந்திருப்பது போல் காட்சி அளித்தல் என அருவியின் அழகிய தோற்றம் நன்கு புனையப்பட்டுள்ளது.

அன்று கபிலர் கண்ட இயற்கை ஓவியம் அவர்தம் கட்புலன் உணர்வால் திருமகளாக மாறியதும், அவ்வடிவமே இன்று அனைத்திலும் திருமகளாகக் காட்சியளித்ததும் குறிப்பிடத்தக்கது.

ஆற்றுநீர் வளைந்து ஓடுவது பாம்பின் நெளிந்தோடிய காட்சியுடன் ஒப்புமையாக்கப்பட்டுள்ளது.

ஞாயிறு மறையும் அந்தி நேர வானம் உலைக்களத்தீயில் வெந்து மெல்ல மெல்ல ஆறிவரும் பொன்னின் நிறம் போன்று தோற்றமளிப்பதுஅழகிய காட்சிப் புனைவாகும்.

கரிய மேகத்தில் மின்னல் மின்னுவது மலைகள் கண்களை இமைப்பது போலவும், காயா மரங்களிடையே சரக்கொன்றை பூத்திருப்பது போலவும் காட்சிப்படுத்தியிருப்பது புலவர்களின் கற்பனைத் திறனுக்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டாகும்.

பொழுதுப் புனைவுகளில் கார்காலம், கூதிர் காலம், முன்பனிக்காலம், பின்பனிக்காலம், இளவேனிற் காலம் ஆகியவற்றின் புனைவுகளும் சிறுபொழுதில் மாலைப்பொழுதின் புனைவும் மிகச் சிறப்பாகப் புலவர்களால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

கார்காலத்தில் அனைத்து உயிர்களும் இன்பமாகக் காணப்படும். கார்கால வரவை அறிவிப்பது போல வெண்முல்லையும் செம்முல்லையும் நிலவுபோல அரும்புகளைத் தோற்றுவிக்க, மேகம் கருக்கொண்டு மழைபொழிவதால் நிலம் குளிர மரஞ்செடிகொடிகள் தளிர் ஈன்று பச்சைபசேலென்று காட்சியளிக்கும் நிலை கார்காலப் புனைவாகப் புலவர்களால் சித்திரிக்கப்பட்டுள்ளது.

கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனிற் காலங்களில் பூக்கள் மலரும் தன்மையும், வண்டுகள் ரீங்காரமிடும் தன்மையும் சுட்டப்பட்டுள்ளன.

மலர்களின் காட்சிப் புனைவில், மலர்களின் நிறம், தோற்றம், வடிவ ஒப்புமை போன்றவை ஒருங்கே வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

பறவைகளில் எருவை, கானக்கோழி, கிளி, குருவி, வாவல், தும்பி போன்றவற்றையும் விலங்குகளில் காளை, குதிரை, முயல், வெள்ளெலி, யாமை போன்றவற்றையும் புலவர்கள் அழகுறக் காட்சிப்படுத்தியுள்ளனர். மேலும் புலி, யானை இரண்டும் போர் செய்யும் காட்சித்திறம் அழகுற வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

தலைவியைத் தலை முதல் பாதம் வரை கேசாதிபாதமாக வருணித்துள்ளனர். பரத்தையின் கண்கள் புனலால், கள்ளால் ஊடலால் சிவந்திருக்கும் காட்சி அழகுற இயம்பப்பட்டுள்ளது.

அந்தணர், இடையர், மழவர் ஆகியோரின் தோற்றங்கள் புலவர்களால் அழகுற வருணிக்கப்பட்டுள்ளன. இத்தகு காட்சிப் புனைவு சங்ககால மக்களின் தோற்றத்தை அறிவதற்குப் பெரிதும் துணைசெய்கிறது.

பழந்தமிழ் மக்களின் திருமணச் சடங்கு முறைகளையும், தொழில் முறைகளையும், புலவர்கள் நன்கு காட்சிப்படுத்தியுள்ளனர்.

சங்ககாலப் புலவர்கள் இயற்கை மீது கொண்ட ஆர்வத்தினால் பூக்களின் நுண்ணிய வேறுபாடுகளையும், அவை மலரும் காலம், சூழல் ஆகியவற்றையும் அழகுறப் புனைந்துள்ளனர். தலைவியின் உறுப்பு நலன்கள் அகப்பாடல்களில் மிகச் சிறப்பாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

ஐம்புல உணர்வில் நான்காவதாக அமைவது மூக்குப்புலனுணர்வாகிய நாற்ற உணர்வாகும். இவ் உணர்வினால் நன்னாற்றம், தீ நாற்றம் ஆகிய இரண்டையும் பிரித்தறிய முடியும்.

சங்கப் புலவர்கள் நறுமணமிக்க மலர்களையும், அவற்றின் மணங்களையும், கமழ், மணங்கமழ், தேம்கமழ், வெறிகமழ், நறு, நாறு, நாற்றம், கடி, முருகு என்பன போன்ற சொற்களில் வரையறுத்துள்ளனர். அவ்வகையில் மணங்கமழும் மலர்களாக காந்தள், களா, பிடவு, கோங்கு, நுணா, ஞாழல், தாழை, நீலம், புன்னை, வெண்கடம்பு, வேங்கை போன்றவற்றின் மணத்தைப் பொதுநிலையில் கமழ்தல் என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளனர். நுணாவின் வெண்ணிறப் பூக்கள் 'கம்'மென்று கமழ்வதைப் புலவர்கள் சுட்டியுள்ளனர்.

நெய்தல் நிலத்தின் புன்புலால் நாற்றத்தை தாழையின் மணமிக்க மலர்கள் நீக்கியதும், பகன்றையின் மலர்கள் கள்ளின் மணம் போன்று கமழ்வதும் புலவர்களால் நன்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

கழியில் பூத்த மலர்களின் மணத்தை தலைவன் மார்பிலே அணிந்திருந்த மாலையின் நாற்றம் எனத் துணிந்த தலைவி, பின்பு காற்றின் வருகையால் அது கழியில் பூத்த பூக்களின் மணம் என்பதை அறிந்தாள் என உரைப்பது நுண்ணுணர்வின் வெளிப்பாடாகும்.

பல மலர்கள் செறித்து தொடுக்கப்படும் மாலையில் அவற்றின் மணம் மிகுந்து காணப்படும் தன்மையை வெறிகமழ் என்ற சொல்லால் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

காடும், மலையும் இயற்கையின் கொடையாகும். காடுகள் திருமணம் நிகழும் இல்லம் போல் கமழ்வதையும், பல்வகை மலர்களின் நறுமணத்தால் கம்மென்று கமழுவதையும் புலவர்கள் புனைந்துரைத்துள்ளனர்.

மலையின் மணத்தினை மணங்கமழ் நறும், நாறி என்பன போன்ற சொற்களால் குறித்துள்ளனர். நெய்தல் நிலத்தின் மணல்மேடு புன்னை மலர்களால் மணங்கமழ்வதையும், கடற்கரைச் சோலைகள் யாவும் மலர்களின் நறுமணத்தால் மணம் மிகுந்து கமழ்வதையும் புலவர்கள் அழகுறப் புனைந்துள்ளனர்.

காற்று மலர்களின் மணத்தைத் தாங்கி வருவதால் மணங்கமழுவதும், மழைபொழியும் காலங்களில் வைகறையில் பூக்களின் மணமும், மண்மணமும் கமழ்வது புலவர்களால் நன்கு புனையப்பட்டுள்ளன.

நறுமணப்பொருள்களில் இன்றியமையாத இடம்பெறுவது சந்தனம். சந்தன மரத்தை மலைப்பாம்பு உராய்வதால் வெளிப்படும் நறுமணத்தையும், ஆடவர்களும், மகளிரும் மணங்கமழும் சந்தனக் குழம்பினை மார்பிலே பூசி மகிழும் தன்மையும் நறுமணத்தின் மீது மக்களுக்கு உள்ள நாட்டத்தினைப் புலப்படுத்தும்.

அகில், சந்தனம் ஆகியவற்றினை எரிப்பதால் ஏற்படும் புகை நறுமணத்துடன் கமழ்வதையும், நறுமணப் பண்டம், மாலை ஆகியவற்றினால் தெருவெங்கும் மணங்கமழ்வதையும், பூக்களின் நறுமணத்தால் விழவுக்களம் கமழ்வதையும் புலவர்கள் சிறப்புற எடுத்துக்காட்டியுள்ளனர்.

தீய நாற்றமுடையதாக நீர்த்துறை, சுரம், யானை, புலியின் புலால் நாற்றம், உணங்கல் (கருவாடு), மீன் சுடு புகை ஆகியவை புலால் நாற்றத்துடன் காணப்படுவதை சங்கப்பாக்கள் சுட்டியுள்ளன. மேலும் இறந்துபட்ட உடம்பிலிருந்து தோன்றும் முடை, நாற்றமும் புலவர்களால் பாடப்பெற்றுள்ளது.

நெய்தல் நிலப் பாக்கம், சிறுகுடி, சேரி போன்றவை புலால் நாற்றமுடன் காணப்படுவதையும், இத்தகைய புலால் நாற்றத்தை மலர்களின் நறுமணம் மாற்றுவதையும், புலவர்கள் புனைந்துள்ளனர்.

தலைவியின் மேனி பற்றிய நுகர்வுப் புனைவில், கூந்தல், நுதல், வாய், தோள், மார்பு, மேனி போன்ற உறுப்புக்கள் மலர்கள், சந்தனம் போன்றவற்றால் மணங்கமழும் தன்மை நன்கு புனைந்துரைக்கப் பட்டுள்ளது.

மெய், வாய், கண், மூக்கு ஆகிய உறுப்புகளின் உணர்வு செவியாகிய ஒலிப்பின்னணியோடு இணையும்பொழுதே நிறைவடையும் என்பதால் தொல்காப்பியர் செவி உணர்வினை ஐந்தாவதாக வரையறை செய்துள்ளார்.

உருவுலகம் கண்ணுக்குப் புலனாவது போல, ஓசையுலகம் செவிக்குப் புலனாவதாகும். இவ்வோசை உலகத்தில் ஒலி என்பது

பண்பட்டதாகவும், ஓசை என்பது பண்படாத தன்மையும் கொண்டு விளங்குகின்றது.

சங்க இலக்கியத்தில் நிலம், நீர், காற்று, தீ, வானம் ஆகிய ஐம்பூதங்களின் ஓசைகளைப் புலவர்கள் நுட்பமாகப் புனைந்துரைத்துள்ளனர்.

நிலத்தில் தோன்றும் ஒலிகளாக, மலையின் எதிரொலி, மரங்கள் முறிவதால் எழும் ஒலி போன்ற புனைவுகள் சுட்டப்பட்டுள்ளன. முழு நிலவொளியில் கடலலையின் வேகம் அதிகமாகவும், பேரிரைச்சலுடனும் காணப்படும் தன்மையைப் புலவர்கள் புனைந்துள்ளனர். நீர் நிலைகளில் அருவி, கடல், மழை ஆகியவற்றின் ஒலிகள் இசை முழக்கத்தோடு ஒப்புமைப்படுத்தப்பட்டு உரைக்கப்பட்டுள்ளன.

காற்றின் இயக்கத்தை, முழங்குதல், உரற்குரல், இம் என்றும், தீயின் ஒலியினை 'முழங்குதல்' என்றும் புலவர்கள் புனைந்துள்ளனர். மரம், செடி, கொடி, காய், மலர் ஆகியவற்றின் அசைவொலிகளும் நன்கு சுட்டப்பட்டுள்ளன.

வானில் எழும் ஒலியாக இடி முழக்கம் சுட்டப்பட்டுள்ளது. இடி பேரொலியாக விளங்கும் தன்மையில், பண்டைத் தமிழர்களுக்கு அது இன்குரல் எழிலியாகத் திகழ்ந்தமை சுட்டத்தக்கது. இயற்கை ஒலிகளை இசைஒலிகளோடு ஒப்பிட்டு சங்கப் புலவர்கள் பாடியிருப்பது அவர்களின் இயற்கை ஆர்வத்தை வெளிப்படுத்தும் தன்மையைப் புலப்படுத்தும்.

சங்க இலக்கியத்தில் விலங்குகள் தம் துணையை அழைக்கவும், தம் எல்லையைப் பிறவிலங்குகளுக்கு அறிவுறுத்தவும் ஒலி எழுப்பும் தன்மை நுட்பமாகப் புலவர்களால் உரைக்கப்பட்டுள்ளது.

அரிமாவின் ஒலி நாண் ஓசை போன்று இருத்தல் புலி, சூழலுக்குத் தக ஒலி எழுப்புதல் போன்றவையும் புலவர்களால் புனையப்பட்டுள்ளது.

மனிதர்கள் துன்பப்படும்பொழுது புலம்புவதைப் புலவர்கள் யானைக்கு ஏற்றி உரைத்திருப்பது சுட்டத்தக்கது. இப்புனைவால் துன்பம் அனைத்துயிர்க்கும் பொதுவானது. அத்துன்பத்தில் எழும் ஓசையும் பொதுவானது என்னும் அரிய உண்மை வெளிப்படுகின்றது. யானையில் ஒலி, கரும்பின் எந்திரம் போல ஒலித்தலும், குதிரையின் ஒலி 'தெவிட்ட' என்றும், கரடியின் ஒலி 'ஓசை' என்றும் பொதுப்படக் குறிக்கப்பட்டுள்ளது.

மந்தியின் ஒலி 'பயிரும்,' 'அதிர் குரல்' என்றும், நாயின் ஒலி 'குரைத்தல்' என்றும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. கலைமானின் ஒலி 'விளிக்கும்' என்று, மனித ஒலியோடும், காற்றின் ஒலியோடும் ஒப்பிட்டுரைக்கப்பட்டுள்ளது.

கன்றை அழைக்கும் ஆவின் மென்மையான குரல் 'குரல' எனவும், ஆமானின் ஒலி 'அலற' எனவும், எருமை நீரினில் விழும் ஒலி 'துடும்' எனவும் புலவர்களால் சுட்டப்பட்டுள்ளன.

தேரையின் ஒலி 'தெவிட்ட,' 'கறங்க' எனவும், பல இசைக் கருவிகளின் ஒலிகள் போன்று ஒலித்தமையும் புலப்படுத்தப்பட்டுள்ளது. பல்லியின் ஒலியினை பட், படும், பாடு போன்ற ஒலிகுறிப்புச் சொற்களால் புலவர்கள் புனைந்துள்ளனர். இதனால் சங்கப்புலவர்கள் மட்டுமன்றி இயற்கை ஆர்வலர்களாக மட்டுமன்றி விலங்கின ஆர்வலர்களாகவும் திகழ்ந்தமை புலனாகும். பறவைகளின் இயல்பான ஒலி 'அகவும்,' 'ஆலும்' என்றும், தத்தம் துணையை அழைக்கும் ஒலி 'பயிரும்' என்றும் புலவர்கள் நுட்பமாக உரைத்துள்ளனர்.

ஆந்தையினப் பறவைகளாக கூகை, குரால், குடிஞை போன்றவற்றின் ஓசை பொற்கொல்லர் ஊதும் ஒலி, துடிஒலி, மகுளிப்பறை ஒலி, மலையிலிருந்து கல் விழும் ஒலி போன்றவற்றோடு ஒப்புமைப்படுத்தி உரைக்கப்பட்டுள்ளது. அன்றில், கிளி, குருகு, மயில் போன்ற பறவைகளின் ஒலி 'வயிர்' என்ற ஊது கொம்பின் ஒலியோடு ஒப்பிட்டு உரைக்கப்பட்டுள்ளது.

குயிலின் இயல்பான ஒலி 'அகவ,' 'கூவ' 'ஆலும்' என்றும், மகிழ்வான ஒலி மகிழ்குரல் என்றும், பேரொலி 'கௌவை,' 'பூசல்,' 'அறையும்' என்றும் புனையப்பட்டுள்ளது. வானம்பாடியின் பாட்டொலியும், வங்காவின் வங்கியம் போன்ற ஒலியும் சங்க இலக்கியத்தில் நுட்பமாகச் சுட்டப்பட்டுள்ளன.

எருவை, பருந்து போன்ற கழுகினப் பறவைகளின் ஒலி, மனிதர்களின் வீளை (சீழ்க்கை) ஒலி போன்று இருந்தமையும் உரைக்கப்பட்டுள்ளது. வண்டின் ஒலி ஆர்ப்ப, அரற்றும், பாட, இன்னிசை, தீங்குரல், இன்குரல் என்றும், யாழ், முழவு, தேர் போன்றவற்றின் ஒலிகளுடனும் ஒப்பிட்டுரைக்கப்பெற்றுளது.

பறவைகளின் ஓசையை மட்டும் குறிக்காமல் அதன் அரிய செயலோடு தொடர்புபடுத்தி, அவ்ஓசை மனிதர்கட்குத் துணைநிற்றலையும் புலவர்கள் குறித்துள்ளமை அவர்தம் செவிப்புலன் உணர்விற்குச் சிறந்த சான்றாகும்.

மக்கள் எழுப்பும் ஒலிகளாக ஆர்ப்பொலி, பூசல், அலறுதல், குரலொலி, நுவலுதல், அகவுதல், வீளை ஒலி, தொழில் செய்வோர் எழுப்பும் ஒலி, உலக்கை குற்றும் பெண்கள் பாடும் பாட்டொலி,

பரதவர்கள் எழுப்பும் ஆரவார ஒலி, களவு வாழ்வில் எழும் அம்பல், அலர், கவ்வை போன்ற ஒலிகள் எனப் பல்வகை ஒலிகள் புலவர்களால் புலப்படுத்தப்பட்டுள்ளன.

அணிகலன்களால் எழும் ஒலிகளாக, வளையல், சிலம்பு, கிண்கிணி போன்றவற்றின் ஒலிகளும், பிற ஒலிகளாக செருப்பின் ஒலி, கணைஒலி, கவண்ஒலி, வெண்ணெய் கடையும்ஒலி, தேரின் ஒலி போன்றவையும் நுட்பமாக புனைந்துரைக்கப்பட்டுள்ளன.

இசைவாணர்கள் பண்இசைப்பதன் மூலம் உண்டாகும் ஒலிகளும், தோற்கருவிகளான பறை, தண்ணுமை, கிணை, முரசு, முழவு, துடி, பம்பை, பதலை போன்றவற்றால் எழுந்த ஒலிகளும், துளைக்கருவிகளான குழல், சங்கு, வயிர் போன்ற கருவிகளின் ஒலியும், நரம்புக் கருவியான யாழின் இனிமையான ஒலியும் சங்கப் புலவர்களால் நுட்பமாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

மனித சமூகத்தை அடுத்தடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்வது ஐம்புல உணர்வுகளேயாகும். மெய்யுணர்வு, படைப்பின் நோக்கத்தையும், சுவையுணர்வு உயிர்வாழ்வதற்கும், பார்த்தல், நுகர்தல் கேட்டல் ஆகிய உணர்வுகள் இயற்கையோடு இயைந்த வாழ்வியலுக்கும் அடிப்படையாகும். இதை உணர்ந்து சங்கப்புலவர்கள் தம் கொடையே ஐம்புல உணர்வுப் புனைவுகள்.

# துணைநூற்பட்டியல்


<u>*முதன்மைச் சான்றாதாரங்கள்*</u>

1. சண்முகம்பிள்ளை .மு (ப.ஆ.) குறுந்தொகை மூலமும் உரையும்,
ஓலைச்சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
1999.

2. சதாசிவ ஐயர் .தி (உரை.) ஐங்குறுநூறு மூலமும் உரையும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை.
1999.

3. சாமிநாதையர் .உ.வே குறுந்தொகை மூலமும் உரையும்,
கபீர் அச்சுக்கூடம்,
சென்னை.
1962.

4. சுப்பிரமணியன் .பெ (உரை.) பரிபாடல் மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.
2004.

5. செயபால் .இரா (உரை.) அகநானூறு மூலமும் உரையும்
தொகுதி - I (1-200 பாடல்கள்),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.
2004.

6. மேலது அகநானூறு மூலமும் உரையும்
தொகுதி - 2 (201-400),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.
2004.

7. தட்சிணாமூர்த்தி .அ ஐங்குறுநூறு மூலமும் உரையும்
தொகுதி - 1, (மருதம், நெய்தல்,
குறிஞ்சி),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.
2004.

8. மேலது ஐங்குறுநூறு மூலமும் உரையும்
தொகுதி - 2, (பாலை, முல்லை),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.
2004.

9. துரைசாமிப்பிள்ளை ஔவை சு. ஐங்குறுநூறு மூலமும் உரையும் (மருதம், நெய்தல்), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1956.

10. மேலது ஐங்குறுநூறு மூலமும் உரையும் (குறிஞ்சி, பாலை), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1956.

11. மேலது ஐங்குறுநூறு மூலமும் உரையும் (முல்லை), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1956.

12. நச்சினார்க்கினியர் (உரை.) கலித்தொகை, கழக வெளியீடு, 154, டி.டி.கே. சாலை, சென்னை. 1999.

13. நாகராசன் .வி (உரை.) — குறுந்தொகை மூலமும் உரையும்
தொகுதி - 1 (1-200),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.
2004.

14. மேலது — குறுந்தொகை மூலமும் உரையும்
தொகுதி - 2 (201-401),
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.
2004.

15. நாராயணசாமி ஐயர் .அ — நற்றிணை நானூறு மூலமும் உரையும்,
கழக வெளியீடு,
522, டி.டி.கே. சாலை,
சென்னை.
1952.

16. நாராயணவேலுப்பிள்ளை எம். — சங்க இலக்கியம் வழங்கும் பரிபாடல்,
நற்பவி பிரசுரம்,
தியாகராய நகர்,
சென்னை.
2001.

17. பாலசுப்பிரமணியன் .கு.வெ. நற்றிணை மூலமும் உரையும்,
(உ.ஆ.) நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.
2004.

18. விசுவநாதன் .அ கலித்தொகை மூலமும் உரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.
2004.

19. வேங்கடசாமி நாட்டார் .ந.மு. வேங்கடாசலம் (உரை.) அகநானூறு மூலமும் உரையும்
(களிற்றியானை நிரை),
கழக வெளியீடு,
சென்னை.
1945.

20. மேலது அகநானூறு (மணிமிடைப்பவளம்),
கழக வெளியீடு,
சென்னை.
1944.

21. மேலது அகநானூறு (நித்திலக்கோவை),
கழக வெளியீடு,
சென்னை.
1944.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

## I. இலக்கணம்


22. அடிகளாசிரியர் (பதி.) — தொல்காப்பியம் சொல்லதிகாரம்
இளம்பூரணர் உரை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
1988.

23. மேலது — தொல்.பொருளதிகாரம்
(செய்யுளியல்),
இளம்பூரணர் உரை,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
1985.

24. இளம்பூரணர் (உரை.) — தொல்காப்பியம் பொருளதிகாரம்
(அகத்திணையியல், புறத்திணையியல்),
பகுதி - 1,
கழக வெளியீடு,
15, டி.டி.கே. சாலை,
சென்னை - 18.
2004.

25. மேலது — தொல்காப்பியம் பொருளதிகாரம்
பகுதி - 2 (களவு, கற்பு, பொருளியல்),
கழக வெளியீடு,
79, பிரகாசம் சாலை,
சென்னை - 108.
1986.

26. மேலது — தொல்காப்பியம் பொருளதிகாரம்
பகுதி-3, (மெய், உவமை, செய்.
மரபியல்),
கழக வெளியீடு,
154, டி.டி.கே.சாலை,
சென்னை - 18.
2004.

27. கோபாலையர் .தி.வே — இலக்கண விளக்கம்,
பொருளதிகாரம் அகத். (முற்பகுதி),
தஞ்சை சரசுவதி மஹால் வெளியீடு,
தஞ்சை.
1972.

28. மேலது — இலக்கண விளக்கம்
பொருளதிகாரம் அகத். (பிற்பகுதி),
தஞ்சை சரசுவதி மஹால் வெளியீடு,
தஞ்சை.
1972.

29. கோமதி சங்கர ஐயர் வ.சு. இசைத்தமிழ் இலக்கண விளக்கம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 2.
1984.

30. கோவிந்தராச முதலியார் .கா.ர அகப்பொருள் விளக்கம்,
கழக வெளியீடு,
1/140, பிரகாசம் சாலை,
சென்னை - 1.
1973.

31. சுந்தரமூர்த்தி .கு (பதி.) முத்துவீரியம்,
கழக வெளியீடு,
சென்னை - 1.
1972.

32. சுப்பிரமணியன் .ச.வே தொல்காப்பியம் தெளிவுரை,
மணிவாசகர் பதிப்பகம்,
8/7, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை - 108.
1999.

33. மேலது தொன்னூல் விளக்கம்,
தமிழ்ப் பதிப்பகம்,
2, கால்வாய்க்கரை சாலை,
கஸ்தூரிபாய் நகர்,
அடையாறு, சென்னை.
1978.

